# ALAGAPPA UNIVERSITY

**(Accredited with 'A+' Grade by NAAC (with CGPA: 3.64) in the Third Cycle and Graded as category - I University by MHRD-UGC)**
**(A State University Established by the Government of Tamilnadu)**

**KARAIKUDI – 630 003**

# DIRECTORATE OF DISTANCE EDUCATION

# M.A (ECONOMICS)

## 36233 - பன்னாட்டு பொருளாதாரம்

## SECOND YEAR – THIRD SEMESTER

**பாருளடக்கம்** **பக்க எண்**

# பன்னாட்டுப் பொருளாதாரம்

## பாடத்திட்டம்

# அலகு – I பன்னாட்டுப் பொருளியல்
# (International Economics)

குறிப்பு



## 1.1.வெளிநாட்டு வர்த்தகம்: தேவை

**முன்னுரை:**

உலக வளர்ச்சியில் பன்னாட்டுப் பொருளாதாரம் மிகவும் முக்கியத்துவம் பெற்று வருகின்றது. முன்பு ஒவ்வொருவரும் தங்களது நாட்டின் பொருளாதாரத்தைப் பற்றி மட்டும் அறிந்திருந்தால் போதுமென்று எண்ணினர். இப்பொழுது நிலைமாறிவிட்டது. ஒரு நாட்டின் பொருளாதார வாழ்வும், வளமும், வளர்ச்சியும் உலகப் பொருளாதார நிலையை ஒட்டி அமைகின்றது.

முதல் முதலில் பன்னாட்டு வாணிபம், அன்னியச் செலாவணி பற்றிச் சிந்தித்து, ஆடம்ஸ்மித், டேவிட்–ரிக்கார்டோ போன்றவர்கள் கோட்பாடுகளை உருவாக்கினார்கள். இன்று உலக நாடுகளுக்கிடையில் ஏற்பட்டிற்கும் பொருளாதாரத் தொடர்புகள், உலக நிதி நிறுவனங்களின் வளர்ச்சி, நாடுகளுக்கிடையில் ஏற்படும் தொழில், வாணிப ஒப்பந்தங்கள், நிதி உதவிகள் ஆகியவற்றின் விளைவாக உலகப் பொருளாதாரம் பற்றிய ஆய்வு மிகவும் முக்கியத்துவம் பெற்றுள்ளது.

குறிப்பு

## 1.2.பொருள்

**விளக்கம்:** பன்னாட்டுப் பொருளியல் உலகைப் பல்வேறு நாடுகளைக் கொண்ட ஒரு சமுதாயமாக எண்ணிப் பார்க்கின்றது. வேறுபட்ட நாடுகள் ஒவ்வொன்றும் தனித்தனியாக இயற்கை வளங்கள், மூலதனம், தொழில் நுட்ப அறிவு, மனிதவளம், சமுதாயப் பொருளாதார நிறுவனங்கள், தனிப்பொருளாதாரக் கொள்கைகள் ஆகியவற்றைப் பெற்றிருக்கின்றன. இவற்றில் வேறுபாடுகள் இருந்த போதிலும், உலக நாடுகளுக்கிடையில் வாணிப, தொழில், நிதித் தொடர்புகள், முதலீடுகள் ஆகியவை நடைபெறுகின்றன. இவை பன்னாட்டுப் பொருளாதாரம் என்ற தனிப்பாடத்தை உருவாக்குகின்றன.

## 1.3.இயல்பு

**பன்னாட்டு வாணிபத்தின் இயல்புகள் [Features of international trade]**

1. வள ஆதாரங்களின் இடம்பெயரும் ஆர்வமற்ற தன்மை (immobility of Resources) உழைப்பு மூலதனம் போன்ற உற்பத்தியின் பல்வேறு காரணிகளும் நாடுவிட்டு நாடு எளிதில் இடம்பெயரக் கூடியவை அல்ல. மேலும் இக்காரணிகளின் இடம்பெயர்ச்சியின் அளவும் நாடுகளுக்கிடையே மாறுபட்டே அமைகின்றது. ஆகவே, விலை மற்றும் நாடுகளுக்கிடையே மாறுபட்டே அமைகின்றது. ஆகவே, விலை மற்றும் செலவுகளை சரிசமப் படுத்துவதில் தானாகவே பாதிப்புகள் ஏற்படுகின்றன.
2. பல்வேறான முரண்பாடுகளையுடைய சந்தைகள் (Heterogenous Markets): பன்னாட்டு வாணிபத்தில் பல்வேறு முரண்பாடுகளையுடைய சந்தைகள் உள்ளன. ஏனெனில் மொழி, முன்னுரிமைகள், பழக்க வழக்கங்கள், எடை, அளவீடுகள் போன்ற அனைத்திலும் பல்வேறு நாடுகளும் மாறுபட்டே அமைந்துள்ளன. ஆகவே பன்னாட்டு வாணிபத்தில் வாங்குவோர் போக்கும் மாறுபட்டே அமைகின்றது. இது பன்னாட்டு வாணிபத்தில் ஒரு தனித்தன்மை பெற்ற இயல்பாகும்.
3. பல்வேறு நாடுகளிடையிலான வாணிபம் (Trade among Different Nations): பன்னாட்டு வாணிபம் பல்வேறு நாடுகளுக்கு இடையிலான வியாபாரம் ஆகும். இவ்வாணிபத்தின் கீழ் பல்வேறு நாடுகளுக்கிடையிலும் சமூகப் பொருளாதார சுற்றுச்சூழல் பேரளவில் மாறுபடுகின்றது.
4. மாறுபட்ட அரசியல் அலகுகளுக்கு இடையிலான வாணிபம் (Trade between Different Politicial units) அயல்நாட்டு வாணிபம், பல்வேறு அரசியல் அலகுகளுக்கு இடையில் அதாவது பல்வேறு நாடுகளுக்கு இடையில்

மேற்கொள்ளப்படுகின்றது. ஒவ்வொரு நாடும் மற்ற நாட்டின் செலவில் தமது நலனைக் காப்பதையே தமது நோக்கமாகக் கொண்டுள்ளது.

5. மாறுபட்ட நாணங்கள் (Different Type of Currencies) பன்னாட்டு வாணிபத்தில் பல்வேறு வகையிலான நாணயங்களின் பரிமாற்றம் அடங்கி உள்ளது. இது பரிமாற்ற விதங்கள், அந்நியச் செலாவணிக் கொள்கைகள் போன்றவற்றில் பிரச்சனையை ஏற்படுத்திவிடுகிறது.
6. புவியியல் சார்ந்த மற்றும் தட்பவெப்ப நிலைசார்ந்த மாறுபாடுகள் (Geographical and Climate Differences) புவியியல் சார்ந்த மற்றும் தட்பவெப்ப நிலைசார்ந்த நிலைமைகளின் காரணமாக ஒவ்வொரு நாட்டிலும் அனைத்துப் பொருட்களும் தயாரிக்கப்பட முடிவதில்லை. உதாரணமாக, இந்தியாவில் கா.ஃ.பி தயாரிப்பிற்கும், பங்களாதேஷில் சணல் தயாரிப்பிற்கும், பிரேசிலில் கா.ஃ.பி தயாரிப்பிற்கும் க்யூபாவில் சர்க்கரை தயாரிப்பிற்கும் ஏற்ற சாதகமான தட்ப வெப்பநிலையும் புவியியல்சார்ந்த நிலையும் நிலவுகின்றன. ஆகவே இவ்வாறு தட்பவெப்ப மற்றும் புவியில்சார்ந்த நன்மைகளைக் கொண்டுள்ள நாடுகள் அத்தகைய பொருட்களின் தயாரிப்பில் தனித்துவம் பெற்று அவற்றை அதிக அளவில் தயாரித்து மற்ற நாடுகளுக்கும் ஏற்றுமதி செய்யலாம்.
7. செலுத்தல் நிலை பிரச்சனை (Problem of Balance of Payments) உள்நாட்டு வாணிபத்தை அயல்நாட்டு வாணிபத்திலிருந்து வேறுபடுத்தும் மற்றொரு முக்கியமான அம்சம் செலுத்தல் நிலைப்பிரச்சனை ஆகும். செலுத்தல் நிலைப் பிரச்சனை பன்னாட்டு வாணிபத்தில் தொடர்ச்சியாக ஏற்படுகிறது. ஆனால் உள்நாட்டு வாணிபத்தில் இப்பிரச்சனை எழுவதில்லை. ஏனெனில், நாடுகளுக்கு இடையில் இருப்பதை விட மூலதனமானது ஒரு நாட்டில் பல்வேறு பகுதிகளுக்கும் இடையில் பேரளவில் நகர்கிறது. மேலும், செலுத்தல் நிலையில் உள்ள சமநிலையற்ற தன்மையை சரிசெய்ய நாடு ஒன்று தேர்ந்தெடுக்கும் கொள்கைகள் பல்வேறு பிரச்சனைகளை ஏற்படுத்தி விடுகின்றன. ஒரு வேளை அந்நாடு பண அழுத்தம் அல்லது மதிப்புக்குறைப்பு அல்லது ஏற்றுமதிகள் அல்லது நாணய அசைவின் மீது கட்டுப்பாடு விதித்தல் போன்ற ஏதேனும் வழி வகையை பின்பற்றினால், அவையும் பல பிரச்சனைகளைத் தோற்றுவிக்கும். ஆனால் இவ்விதப் பிரச்சனைகள் உள்நாட்டு வாணிபத்தில் ஏற்படுவதில்லை.
8. மாறுபட்ட போக்குவரத்துச் செலவுகள் (Different Transport Costs) நாடுகளுக்கிடையிலான வாணிபத்தில் போக்குவரத்துச் செலவு அதிக அளவினதாக இருக்கும். ஏனெனில் நாடுகளுக்கு இடையிலான தூரம் பொதுவாக மிக அதிகமாகவே இருக்கிறது.

குறிப்பு

9. மாறுபட்ட பொருளாதாரச் சுற்றுச்சூழல் (Different Economic Enviornment): நாடுகள் தங்களின் பொருளாதாரச் சுற்றுச்சூழலில் மாறுபட்டே அமைகின்றன. இது இவர்களின் வாணிப உறவுகளில் பாதிப்பை ஏற்படுத்துகிறது. சட்டக் கட்டமைப்பு, நிறுவன அமைப்பு, பணம் சார்ந்த மற்றும் வணிகக் கொள்கைகள், காரணி அம்சங்கள் உற்பத்தி நுட்பங்கள், பொருட்களின் தன்மை போன்றன நாடுகளுக்கிடையே மாறுபடுகின்றன. ஆனால் உள்நாட்டிற்குள் பொருளாதாரச் சுற்றுச்சூழலில் மாற்றம் அவ்வளவாக இருப்பதில்லை.

தவிரவும், பன்னாட்டு நீர்மைத் தன்மை, பணம் சார்ந்த ஒத்துழைப்பு, பன்னாட்டு நிறுவனங்களின் தீர்மானம் போன்ற குறிப்பிட்ட சில பிரச்சனைகளிகளாலும் பன்னாட்டு வாணிபம் பாதிப்படைகிறது.

## 1.4.உள்நாட்டு மற்றும் சர்வதேச வர்த்தகம்

### உள்நாட்டு வாணிபமும் பன்னாட்டு வாணிபமும்(Inter Regional and International Trade)

#### 1.பன்னாட்டு வாணிபம் விளக்கமும் விவரமும்

**அடிப்படை:** வாணிபத்திற்கும் அடிப்படையாக வேலைப் பகுப்பு அமைகின்றது. ஒவ்வொருவரும் தன்னிறைவு பெற்றவர்களாக தங்களுக்கு வேண்டிய பொருட்களை எல்லாம் தாங்களே உற்பத்தி செய்து கொண்டால் வாணிபத்திற்கு வழியில்லை. ஆனல் ஒருவர் தனக்கு வேண்டிய எல்லாப் பொருட்களையும் தானே உற்பத்தி செய்வதைவிட தன்னிடமுள்ள சிறப்பாற்றலுக்கும், விருப்பத்திற்கும், வாழும் சூழ்நிலைக்கும் ஏற்றார்போல ஏதாவது ஒரு பொருள் உற்பத்தி ஈடுபட்டு, தான் உற்பத்தி செய்த பொருட்களைக் கொடுத்துத் தேவையான பொருட்களைப் பெறுகின்றபொழுது வாணிபம் தோன்றுகின்றது. வேலைப்பகுப்பும், தனிப்பயிற்சியும், வாணிபத்தைத் தோற்றுவித்து, அதனால் அனைவரையும் இலாபமடையச் செய்கின்றன. இதுவே உள்நாட்டு, பன்னாட்டு வாணிபத்திற்கு அடிப்படை பன்னாட்டு வாணிபத்தில், ஒவ்வொரு நாடும் தனது சூழ்நிலைக்கேற்ப எந்த பொருளைக் குறைந்த செலவில் உற்பத்தி செய்ய முடியுமோ, அதன் உற்பத்தியில் ஈடுபடுகின்றது. பன்னாட்டு வாணிபம் நாடுகளுக்கிடையில் இருக்கும் தொழில் பகுப்பின் அடிப்படையில் தோன்றுகின்றது. உலக நாடுகள் எல்லாம் தன்னிறைவுக் கோட்பாட்டைப் பினபற்றி, தங்களுக்கு வேண்டிய எல்லாப் பொருட்களையும் தங்களது நாட்டிலேயே உற்பத்தி செய்து கொண்டால் பன்னாட்டு வாணிபத்திற்குத் தேவை இருக்காது.

குறிப்பு

**விளக்கம்:** ஓர் அரசியல் கட்டுக்கோப்பிற்குள் இருக்கும் நாட்டிற்குள் நடைபெறும் வாணிபம் உள்நாட்டு வாணிபமாகும். இதில் ஈடுபடுகின்ற மக்களை எல்லாம் ஒரே வகைச் சட்டதிட்டங்கள் கட்டுப்படுத்துகின்றன. பல நாடுகளில் வாழ்கின்ற வேறுபட்ட அரசியல் கட்டுக்கோப்பிற்குள் உள்ள, மக்களுக்கிடையில் நடைபெறுவது பன்னாட்டு வாணிபம். "பெரும்பாலும் ஒரே வகையான வாழ்க்கைத் தரத்தைப் பெற்றுள்ள உற்பத்தியாளர்கள், தங்களுக்கிடையே பொருட்களை மாற்றிக் கொள்வது உள்நாட்டு வாணிபத்தில் அடங்கும். வேறுபட்ட தரங்களைப் பெற்றுள்ள உற்பத்தியாளர்கள் பொருட்களை மாற்றிக்கொள்வது பன்னாட்டு வாணிபத்தில் அடங்கும்" என்று ஹர்ராடு கூறுகின்றார்.

**d).பன்னாட்டு வாணிபத்திற்கான காரணங்கள்:** தற்காலப் பொருளாதார அமைப்பில் எந்த ஒரு நாடும் தன்னிறைவு பெற்று பிற நாட்டோடு பொருளாதாரத் தொடர்பின்றி வாழ முடிவதில்லை. தொழில் வளர்ச்சியில் நாட்டிற்கு நாடு வேறுபாடு காணப்பெறுகின்றது. பொதுவாக பன்னாட்டு வாணிபம் தோன்றியதற்கான காரணங்களை வகைப்படுத்திக் கூறலாம்.

1. **இயற்கை வள வேறுபாடு:** எல்லா நாடுகளிலும் எல்லா பொருட்களையும் உற்பத்தி செய்வதற்கான இயற்கை வளங்கள் இருப்பதில்லை. சில நாடுகளில் ஏதாவது ஒன்றிரண்டு பொருளை உற்பத்தி செய்யத் தனி இயற்கை வளங்கள் உள்ளன. எடுத்துக்காட்டாக, உலக உற்பத்தியில் 75 சதவீதம் மைக்கா நமது நாட்டில் கிடைப்பதைக் கூறலாம்.
2. **தட்ப, வெப்ப நிலைகள்:** ஒரு நாட்டின் புவியியல் அமைப்பு தட்ப–வெப்பமாறுபாடு, ஏதாவது ஒரு பொருள் உற்பத்திக்கு மிகவும் சாதகமாக அமைந்துள்ளது. எடுத்துக்காட்டாக, பர்மாவில் ரப்பரும், நமது நாட்டில் சணலும் உற்பத்தியாவதைக் கூறலாம். வேறுபொருளை உற்பத்தி செய்வதைவிட, இந்தப் பொருட்களில் இவை ஈடுபடுவது இலாபமாக இருக்கும்.
3. **தொழில் வளர்ச்சி நிலை:** ஒரு நாட்டின் தொழில் வளர்ச்சி அந்த நாட்டிலுள்ள முதல், கண்டுபிடிப்புக்கள், தொழில் முயல்வோர்கள் ஆகியவற்றை ஒட்டி அமைகின்றது. தொழில் வளர்ச்சி நிலைக்கேற்ப சில நாடுகளில் நில பொருட்களைக் குறைந்த செலவில் உற்பத்தி செய்ய முடிகின்றது.
4. **நாட்டு மக்கள்:** எல்லா நாட்டு மக்களும் ஒன்று போல் இருப்பதில்லை. ஒவ்வொரு நாட்டு மக்களிடமும் ஒவ்வொரு வகை திறமை ஒளிர்கின்றது. ஜெர்மானியர்களிடமுள்ள இரசாயனத் தொழில் தேர்ச்சியை இதற்கு எடுத்துக்காட்டாகக் கூறலாம்.

குறிப்பு

5. **அறிவியல் வளர்ச்சி:** அறிவியலின் வளர்ச்சியினால் உலக நாடுகளுக்கிடையில் போக்குவரத்துத் தொடர்புகள் மிகுந்துள்ளன. காலமும் இடமும், சுருங்கி, நெருங்கி வருவதால் பன்னாட்டு வாணிபம் மேலும் மேலும் வளர்ந்து வருவதைக் காண்கின்றோம்.

**e).உள்நாட்டு–பன்னாட்டு வாணிப வேறுபாடுகள்**

**வேறுபாடுகள்:** உள்நாட்டு, பன்னாட்டு வாணிபங்களுக்கிடையில் குறிப்பிடத்தக்க வேறுபாடுகள் உள்ள. இதனால் தான் தொன்மைப் பொருளியலறிஞர்களான ஆடம்ஸ்மித், ரிக்கார்டோ போன்றவர்கள் பன்னாட்டு வாணிபத்தை உள்நாட்டு வாணிபத்திலிருந்து வேறுபடுத்தி, விளக்கத் தனிக் கோட்பாடுகளை உருவாக்கினார்கள். பன்னாட்டு வாணிபத்தில் எழுகின்ற சிக்கல்கள் எல்லாம் இந்த வேறுபாடுகளின் அடிப்படையிலேயே எழுகின்றன. ஆனால் ஸ்வீடன் பொருளியலறிஞரான பெர்டில் ஓலின் (Bertil Ohlin) பன்னாட்டு வாணிபமும் உள்நாட்டு வாணிபமும் ஒன்று போலவே இருப்பதாகக் கருதுகின்றார். நடைமுறையில் பன்னாட்டு வாணிபம் உள்நாட்டு வாணிபத்திலிருந்து இயல்பாலும் போக்காலும் குறிப்பிடத்தக்க வகையில் வேறுபடுகின்றது. இதனால்தான் உள்நாட்டு வாணிபத்திலிருந்து பன்னாட்டு வாணிபத்தைப் பிரித்து ஆராய்வது தேவையாகின்றது.

1. **உழைப்பு இடம் பெயர்தல்:** தொழிலாளர்கள் அதிக ஊதியம் கிடைக்கும் இடத்திற்கும் உள்நாட்டில் எளிதாக இடம் பெயர்ந்து செல்கின்றனர். இதனால் உழைப்புச் செலவில் ஒரு நாட்டிற்குள் அதிக வேறுபாடு இருப்பதில்லை. ஆனால் நாடுகளுக்கிடையில் தொழிலாளர்கள் இடம் பெயர்ந்து செல்வது எளிதாக இல்லை. இதற்கு இருவகைக் காரணங்கள் உள்ளன. ஒன்று, மொழி, பழக்க வழக்கங்கள், இன உணர்வுகள், சமய நம்பிக்கைகள் ஆகியவை தடைகளாக அமைகின்றன. இரண்டாவதாக, பெரும்பாலான நாடுகள் சட்டத்தின் மூலம் குடியேறுகின்றவர்களைத் தடை செய்கின்றன. இதனால் நாடுகளுக்கிடையில் உழைப்பின் தரத்திலும், மதிப்பிலும் வேறுபாடுகள் தோன்றுகின்றன. வேறுபட்ட மொழிகள் இன உணர்வுகள், பழக்க வழக்கங்கள் உள்நாட்டில் உழைப்பு இடம் பெயர்தலைத் தடை செய்தாலும் இத்தகைய தடைகள் வலுவாக இருப்பதில்லை. காலப்போக்கில் தகர்த்தெறியப்படுகின்றன. மேலும் நாடுகளுக்கிடையில் பெருமளவில் உழைப்பு இடம் பெயருமென்று எதிர்பார்க்க முடியாது.

   பன்னாட்டு வாணிபத்தில் சிக்கல் தோன்றுவதற்கு இது ஒரு காரணம், பொருட்களின் விலையில் உழைப்புச் செலவு அடங்குகின்றது. இது நாட்டிற்கு

நாடு மாறுபடுகின்றது. இதனால் பன்னாட்டு வாணிபத்தில் விலையை எளிதாக நிர்ணயிக்க முடிவதில்லை.

1. **மூலதனப் பெயர்ச்சி:** உள்நாட்டில் ஓரிடத்திலிருந்து மற்றொரு இடத்திற்கு மூலதனம் செல்வதைப்போல, தாரளமாக ஒரு நாட்டிலிருந்து மற்றொரு நாட்டிற்கு மூலதனம் செல்லாது, உள்நாட்டிலும் வெளிநாட்டிலும் முதலீட்டினால் ஓரேயளவு இலாபம் கிடைக்குமானால் பொதுவாக உள்நாட்டு முதலீட்டையே விரும்புவார்கள். இதற்கு நாட்டுப்பற்று மட்டும் காரணமல்ல. தெரியாத நாட்டில் புதிய சூழ்நிலையில் முதலீடு செய்வதைவிட அறிந்த இடத்தில் முதலீடு செய்ய விரும்புவதே காரணம்.

   மூலதனம் நாடுகளுக்கிடையில் தாராளமாகச் செல்லாததனால்தான் சில நாடுகளில் பெருந்தொழில் வளர்ந்திருக்க வேறுசில நாடுகளில் சிறு தொழில்கள் இருக்கின்றன. இதனால் நாட்டிற்கு நாடு திறமையில் வேறுபாடு காணப்படுகின்றது. இது உற்பத்திச் செலவில் வேறுபாட்டை ஏற்படுத்துகின்றது.

2. **உற்பத்திச் சூழ்நிலை:** ஒரு நாட்டிலுள்ள தொழில் நிறுவனங்கள் எல்லா ஒரே வகையான சூழ்நிலையில் செயல்படுகின்றன. ஆனால் நாடுகளுக்கிடையில் உற்பத்திச் சூழலில் பெரும் வேறுபாடு காணப்படுகின்றது. ஒவ்வொரு நாட்டிலும் ஒவ்வொரு வகையான சட்ட திட்டங்கள் வரி விதிப்பு முறை, போக்குவரத்து வசதிகள், வாணிபச் சூழ்நிலைகள் இருக்கின்றன. இவை உற்பத்திச் சாதகமாகவோ, பாதகமாகவோ இருக்கலாம். இதனால் பன்னாட்டு வாணிபத்தில் ஈடுபடும் நாடுகளின் உற்பத்திச் செலவுகள் வேறுபடும் மூலதனமும், உழைப்பும் தடையின்றி, ஒரு நாட்டைவிட்டு மற்றொரு நாட்டிற்குச் செல்ல, கூலி வட்டி ஆகியவை ஒன்று போல இருந்தாலும், உண்மைச் செலவு (Real Cost) சாதகமான உற்பத்திச் சூழ்நிலையைக் கொண்ட நாட்டில் குறைவாகவும், மற்றைய நாட்டில் கூடுதலாகவும் இருக்கும், இதனால் உள்நாட்டு பன்னாட்டு வாணிபங்களுக்கிடையில் வேறுபாடு தோன்றுகின்றது.
3. **செலவாணி:** உள்நாட்டு வாணிபத்தில் அந்த நாட்டின் சட்டமுறைப் பணம் பயன்படுத்தப் பெறுகின்றது. இத்தகைய செலவாணியை மைய வங்கியும், அரசம் கட்டுப்படுத்துகின்றன. பன்னாட்டு வாணிபத்தில் பல வகையான பணங்கள் புழக்கத்திலிருக்கின்றன.

இதனால் பன்னாட்டு வாணிபத்தில் எப்படி, எந்த விதத்தில் ஒரு நாட்டு நாணயத்தை மற்றொரு நாட்டு நாணத்திற்கு மாற்றுவதென்ற சிக்கல் எழுகின்றது. மாற்று விகிதம் நிலையாக இருப்பதில்லை. இதனால் மையவங்கி பணத்தின்

குறிப்பு

குறிப்பு

உள்நாட்டு மதிப்பையும் வெளிநாட்டு மதிப்பையும், நிலை நாட்ட வெவ்வேறு முறைகளைப் பின்பற்ற வேண்டியுள்ளது.

4. **புவியியல் வேறுபாடு:** உள்நாட்டு வாணிபம் ஒரே வகையான தட்ப, வெப்ப, புவியியல் சூழ்நிலையில் உற்பத்தியான பொருட்களில் நடைபெறுகின்றது. ஆனால் பன்னாட்டு வாணிபம் வேறுபட்ட இயற்கை வளங்களைக் கொண்ட, மாறுபட்ட தட்ப, வெப்ப புவியியல் சூழ்நிலைகளில் உற்பதியான பொருட்களில் நடைபெறுகின்றது. இந்தப் பொருட்களின் உற்பத்திச் செலவில் அடிப்படை வேறுபாடு ஏற்படுகின்றது. பன்னாட்டுப் பொருட்களின் விலை நிர்ணயத்தை இவை பாதிக்கின்றன.
5. **தூரம்:** உள்நாட்டு வாணிபத்திற்கும் பன்னாடடு வாணிபத்திற்கும் உள்ள வேறுபாடு இரு நாடுகளுக்கிடையில் உள்ள தூரத்தை ஒட்டியும் அமைகின்றது. பன்னாட்டு வாணிபத்தில் போக்குவரத்துச் செலவு முக்கிய பங்கு பெறுகின்றது. இரு நாடுகளுக்கிடையில் உள்ள விலை வேறுபாடு மிகவும் அதிகமாகப் போக்குவரத்துச் செலவுக்கு மேல் இருந்தால் மட்டுமே பன்னாட்டு வாணிபம் நடைபெறும்.
6. **தடைகள்:** உள்நாட்டு வாணிபத்தில் பொருட்கள் இடம் பெயர்வதில் பெரும்பாலும் தடைகள் இருப்பதில்லை. ஆனால் பன்னாட்டு வாணிபத்தில் சுங்கவரி, ஏற்றுமதி, இறக்குமதிக் கட்டுப்பாடுகள் ஆகிய தடைகள் இருக்கின்றன. இதனால் உள்நாட்டு வாணிபப் பேரங்கள் தேவை அளிப்பதன் அடிப்படையில் இயல்பாக அமைவது போல, பன்னாட்டு வாணிபம் அமைவதில்லை.
7. **அறிதலில் வேறுபாடு:** உள்நாட்டில் மக்களிடமுள்ள பழக்க வழக்கங்களையும், பண்பாட்டையும் அறிந்துகொள்ளுதல் பழக்க வழக்கங்களையும், பண்பாட்டையும் அறிந்துகொள்ளுதல் இயலும், ஆதலால் தேவைக்கேற்றார்போல உற்பத்தியை மாற்றுவது சாத்தியமாகின்றது. ஆனால் பன்னாட்டு வாணிபத்தில் பல நாடுகளிலுள்ள மக்களையும் நன்கு தெரிந்திருக்க முடியாது. இதனால் பன்னாட்டு வாணிபத்திற்கான உற்பத்த இயல்பாய் வேறுபாடுகின்றது.
8. **கொள்கைகள்:** ஒவ்வொரு நாட்டிலுள்ள அரசும், மைய வங்கியும் தனித்தனியான பொருளாதார பண, நிதிக்கொள்கைகளைப் பின்பற்றுகின்றது. இவை நேரடியாகவோ, மறைமுகமாகவோ பன்னாட்டு வாணிபத்தை பல வழிகளில் பாதிக்கின்றன.
9. **பண்ட மாற்று :** பணப் பொருளாதாரமுள்ள இக்காலத்தில் உள்நாட்டு வாணிபம் பெரும்பாலும் பணத்தின் மூலம் நடைபெறுகின்றது. பண்டமாற்று

குறிப்பு

மிகவும் குறுகிய அளவில் நாட்டுப் புறங்களிலேயே நடைபெறுகின்றது. ஆனால் பன்னாட்டு வாணிபம் ஒரு வகையில் பண்ட மாற்றாகவே அமைகின்றது. இரு நாடுகள் கொடுத்து வாங்கும் பொருட்களின் மதிப்பில் உள்ள வேறுபாட்டை மட்டுமே அயலகச் செலவாணியின் மூலம் தீர்த்துக்கொள்கின்றனர்.

**சார்ந்த நிலை:** உள்நாட்டு, பன்னாட்டு வாணிபங்களுக்கு கிடையில் பலவேறுபாடுகள் இருந்தபோதிலும் இரண்டையும் முற்றிலும் வேறுபட்டவைகளாகக் கருதுதல் கூடாது. ஒன்றை மற்றொன்று சார்ந்துள்ளது. ஒன்றில் ஏற்படுகின்ற மாற்றம் மற்றொன்றைப் பாதிக்கின்றது. இதனை சர்.ராய் ஹர்ராடு, "பன்னாட்டு உள்நாட்டுத் தொடர்புகளுக்கிடையில் உள்ள நெருங்கிய தொடர்பை உணர்ந்து கொள்வது மிகவும் முக்கியமாகும். இரண்டையும் வேறுபட்ட துறைகளாகக் கருதுவது கேடு தரும்: தவறுகளுக்கு வழிகாட்டும். வெளி உலக நிலை நமது இறக்குமதி ஏற்றுமதி அளவை மட்டும் பாதிப்பதில்லை. வருமானவரி, புதிய வீடுகள் கட்டும் வீதம் போன்ற உள்நாட்டு நடவடிக்கைகளையும் பாதிக்கின்றது. இந்த இரண்டின் தொடர்பிலும் தனிக்கவனம் செலுத்த வேண்டும்". என்று கூறுகின்றார்.

## g).உள்நாட்டு வாணிபம் vs.பன்னாட்டு வாணிபம் ஓர் ஒப்புமை (Domestic Trade vs. International Trade –A Comparison)

உள்நாட்டு வாணிபம் மற்றும் பன்னாட்டு வாணிபம் இரண்டிலுமே பொதுவான நடைமுறை, இயக்கமுறை மற்றும் இயக்கங்கள் ஆகியன ஒரே மாதிரியானவைகளாகவே உள்ளன. குறிப்பாக இவை இரண்டிற்கும் இடையில் பின்வரும் அடிப்படை ஒற்றுமைகள் உள்ளன.

1. **நுகர்வோர் மனநிறைவு (Consumer Satisfaction):** உள்நாட்டு வாணிபம் மற்றும் பன்னாட்டு வாணிபம் இரண்டிலுமே அடிப்படையில் வெற்றியானது நுகர்வோர் அடிப்படைத் தேவைகளைப் பூர்த்தி செய்வதையே நம்பி உள்ளது. இது வாங்குவோர் எதை விரும்புகின்றனர் என்பதைக் கண்டுணர்வதையும் அவர்களின் தேவைகளைப் பூர்த்தி செய்வதையுமே தன்னுள் கொண்டுள்ளது.
2. **நற்பெயர் உருவாக்கம் (Building up of Goodwill):** உள்நாட்டு வாணிபம் பன்னாட்டு வாணிபம் இரண்டிற்குமே நற்பெயர் உருவாக்கம் இன்றியமையாததாகும். நிறுவனம் ஒன்றினால், தன் வாடிக்கையாளர்களிடம் இருந்து நற்பெயரைப் பெறமுடியும் எனில் அதன் பணி எளிதாகிவிடும். தமது வாடிக்கையாளர்களிடம் நற்பெயரை உருவாக்கிக் கொள்ள இயலாத நிறுவனங்களுக்கு அதன் பணி கடினமானதாகவே இருக்கும். இரண்டு

குறிப்பு

வாணிபத்திலுமே, விற்பனையாளர் தமது பொருளுக்கு நுகர்வோரின் நம்பிக்கையை பெறத்தேவையான அனைத்து சாதகமான நடவடிக்கைகளையும் எடுத்தல் அவசியம்.

3. **சந்தை ஆய்வின் தேவை (Need for Market Research):** கவனமான சந்தை ஆய்வு மற்றும் சுற்றாய்வுக்குப்பின் சந்தை நிகழ்ச்சிநிரல் வடிவமைக்கப்படுதல் வேண்டும். இது இரண்டு வாணிப நிலைகளிலுமே பின்பற்றப்படுதல் வேண்டும். குறியிலக்கு சந்தை (Target Market) மதிப்பிடப்படுதல் வேண்டும். அதனை மதிப்பிடத் தவறுதல் நிச்சயமாக சந்தையிடுகைப் பணிக்குக் தோல்வியையே தோற்றுவிக்கும் என்பதில் எள்ளளவும் ஐயமில்லை.

4. **பொருள் திட்டமிடுதல் மேம்பாடும் (Product Planning and Development):** பொருள் அபிவிருத்தி மற்றும் மாற்றத்திற்கு ஆய்வும் மேம்பாடும் அவசியம். இது நாட்டு வாணிபம் மற்றும் பன்னாட்டு வாணிபம் இரண்டிற்குமே இன்றியமையாததாகும். குறிப்பாக சந்தையாளர் சந்தை நிலையையும், நுகர்வோரின் விருப்பம், முன்னுரிமை போன்றவற்றில் ஏற்படும் மாற்றங்களையும் தொடர்ந்துத நிலையாக கூர்ந்து கவனித்து வாடிக்கையாளர்களின் தேவைகளைப் பூர்த்தி செய்யும் வகையில் தமது பொருளை மாற்றி அமைத்தல் வேண்டும்.

உள்நாட்டு வாணிபத்திற்கும் பன்னாட்டு வாணிபத்திற்கும் இடையிலான வேறுபாடுகள் (Differences between Domestic Trade and International Trade): ஆயினும் உள்நாட்டு வாணிபத்தை பன்னாட்டு வாணிபத்திலிருந்து பிரிக்கும் சில சிறப்பான இயல்புகளும் உள்ளன. அவை பின்வருமாறு:

சர்வ அதிகாரமுள்ள அரசியல் பகுதிகள் (Serverig Political Entities): ஒவ்வொரு நாடும் சர்வ அதிகாரமுள்ள அரசியலின் பகுதிகளாகவே உள்ளன. அவற்றின் பொருட்களும் சேவைகளும் தேசிய எல்லைகளைத் தாண்டி இறக்குமதி மீது சுங்க மற்றும் சுங்கமற்ற தடைகளை உருவாக்கலாம். உள்நாட்டு வாணிபத்தில் சுங்க மற்றும் சுங்கமற்ற தடைகள் என்ற கேள்வியே எழுவதில்லை. தவிரவும், உள்நாட்டு வாணிபத்தில் காணப்படாத பின்வரும் தனித்துவம் பெற்ற கஷ்டங்களையும் பன்னாட்டு வாணிபம் சந்திக்க வேண்டும்.

1. தூரம் (Distance) : பெரும்பாலான சமயங்களில், பன்னாட்டு வாணிபம் ஆயிரக்கணக்கான கி.மீ தொலைவைக் கடந்து மேற்கொள்ளப்படுவதாக அமைகின்றது. இந்தியா மற்றும் கனடாவுக்கு இடையிலான வாணிபத்தை இதற்கு உதாரணமாக கூறலாம். இந்த இரண்டு நாடுகளிடையே வாணிபம்

குறிப்பு

நடைபெறும் பொழுது பொருட்களின் போக்குவரத்து வெகு நீண்டதூரத்திற்கு ஏற்படுகிறது.

2. போக்குவரத்து மற்றும் தகவல்தொடர்பின் பற்றாக்குறை (Inadequate Transport and Communication): நீண்டதூர வாணிபமானது முறையான மற்றும் உடனடியான போக்குவரத்து மற்றும் தகவல்தொடர்பு தொடர்பான மற்றொரு பிரச்சனையை உருவாக்குகிறது. நீண்டதூர தகவல் தொடர்பிற்கும் போக்குவரத்திற்கும் ஆகும் நேரமும் செலவும் அதிகம். அயல் நாட்டு வாணிபத்தில் போக்குவரத்துச் செலவு மிக முக்கியமான ஒரு காரணியாக விளங்குகிறது எனலாம்.

3. மாறுபட்ட மொழிகள், பழக்க வழக்கங்கள் மற்றும் மரபுகள் (Diverse Languages, Customs and Traditions): மாறுபட்ட மொழிகள், பழக்க வழக்கங்கள் மற்றும் மரபுகள் அயல்நாட்டு வாணிபத்தில் தனித்துவம் பெற்ற பிரச்சனைகளாக விளங்குகின்றன. இதற்கு நாகரீகங்களில் உள்ள மாறுபாடுகளே காரணமாக அமைகின்றன. இந்நாட்டின் வணிகர்களும் இவ்விதப் பிரச்சனைகளைச் சந்தித்தே ஆக வேண்டும்.

4. அபாயங்களும் நிலையின்மைகளும் (Risk and Uncertainties) : நீண்டதூர கடற்பயணப் போக்குவரத்து, செலாவணி வீதங்களின் மாற்றங்கள் போன்றன பெருத்த நட்டங்கள் அல்லது சேதாரங்களை ஏற்படுத்தும் வகையிலான எண்ணற்ற அபாயங்களையும் நிலையின்மையையும் ஏற்படுத்தி விடுகின்றன. ஆகவே, உள்நாட்டு வாணிபத்துடன் ஒப்பிடும்பொழுது பன்னாட்டு வாணிபம் நிச்சயம் கடினமானதாகவும் சிக்கலானதாகவும் அபாயகரமானதாகவும் மிக நீண்ட விரிவான நடைமுறையைக் கொண்டதாகவும் அமைகிறது எனலாம். ஆகவே, ஏற்றுமதி மற்றும் இறக்குமதியைக் கையாள வல்லுநர்களைப் பணியில் அமர்த்துதல் அவசியமாகிறது.

5. சுங்கச் சடங்குகள் (Customs Formalities): ஒவ்வொரு நாட்டிற்கும் என அதனதன் சொந்தச் சுங்கக் கடமைகளும் ஒழுங்குமுறைகளும் உள்ளன. ஏற்றுமதியாளர்களும் இறக்குமதியாளர்களும் அனைத்து வகையான சுங்கச் சடங்குகளையும் நிறைவேற்ற வேண்டும். இவ்விதக் கடமைகள் உள்நாட்டு வாணிபத்தில் இல்லை. ஆகவே பொருட்களின் அசைவு, நிலுவையைத் தீர்த்தல் ஆகியன எல்லா உள்நாட்டு வாணிபத்தில் எளிதாக நிறைவேற்றிவிடப்பட முடியும்.

6. கப்பலேற்றும் மற்றும் காப்பீடு (Shipping and Insurance): கப்பலில் சரக்குகளை ஏற்றுதல், காப்பீடு செய்தல் போன்ற எல்லாம் அயல்நாட்டு

குறிப்பு

வாணிபத்திற்கே உள்ள நடவடிக்கைகளாகும். இவற்றை எல்லாம் உள்நாட்டு வாணிபத்தில் நிறைவேற்ற வேண்டியதில்லை. கடல் காப்பீடு கப்பல் போக்குவரத்திற்கு இன்றியமையாதது ஆகும்.

7. அயல்நாட்டு வாணிபக் குறிப்பீடு (Foreign Trade Quotations): அயல்நாட்டு வாணிபத்தில் C.I.F., C.F., F.O.B போன்ற பல குறிப்பீடுகள் உள்ளன. அயல்நாட்டு இடாப்புகள் மிக விரிவானவை. இதில் பெருவாரியான தகவல்கள் இருக்கும். இங்கு C.I.F என்பது Carriage, Insurance, Freight அதாவது தூக்குக்கூலி, காப்பீடு கூலி என்பதையும், C.F என்பது Carriage, Freight அதாவது தூக்குக்கூலி, கூலியையும், F.O.B என்பது Free on Board என்பதையும் குறிக்கின்றன. இவ்விதக் காப்பீடுகள் உள்நாட்டு வாணிபத்தில் இருப்பதில்லை.

8. பல இடைநிலை நபர்கள் (Too Many Middlemen): அயல்நாட்டு வாணிபத்தில் முதன்மை உற்பத்தியாளருக்கும் அல்லது விற்பனையாளருக்கும் இறுதி நுகர்வோர் அல்லது வாங்குபவருக்கும் இடையில் பல இடைநிலை நபர்கள் அடங்கியுள்ளனர். இவர்கள் அனைவரும் அவரவர் பிரிவில் தனிப்பயிற்சி பெற்றவர்களாகவும் மிக நியாயமான ஒரு விதத்தில் தங்களின் சேவைகளை ஆற்றத் தயாராகவும் இருப்பர்.

9. மாறுபட்ட சட்ட முறைகள் (Different Legal Systems) : ஒவ்வொரு நாடும் அதற்கென சொந்தமான ஒரு சட்டமுறையைக் கொண்டிருக்கும் பல்வேறு நாடுகளிலும் பின்பற்றப்படும் சட்டமுறை ஒன்றிலிருந்து மற்றொன்று மாறுபட்டே அமைகின்றது. இவ்விதமான மாறுபட்ட சட்ட முறைகள் வணிகர்களின் பணியை மிகவும் சிக்கலானதாக ஆக்குகின்றன.

10. மாறுபட்ட பணம்சார்ந்த முறைகள் (Different Monetary Syustems): ஒவ்வொரு நாட்டிற்கும் அதனதன் பணம்சார்ந்த முறைகள் உள்ளன. ஒவ்வொரு நாட்டின் பணத்தின் மாற்று மதிப்பும் (Exchange Value) வெவ்வேறாகவே இருக்கிறது. சமீப காலங்களில், மாற்று வீதங்கள் மாறிக்கொண்டே இருக்கின்றன. இறுதியில் இவை தேவை மற்றும் அளிப்பு விசைகளினால் நிர்ணயிக்கப்படுகின்றன. சில நாடுகள் கடுமையான ஒரு செலாவணிக் கட்டுப்பாட்டு முறையை பின்பற்றுகின்றன. அதைப் போலவே, சில நாடுகள் பன்முக மாற்று வீதங்களைப் பின்பற்றுகின்றன. பன்முக மாற்று வீதங்களின் பொழுது குறிப்பிட்ட வகையான நடவடிக்கைகளுக்கு ஒரே மாற்றுவீதம் பின்பற்றப்படும்.

குறிப்பு

11. உற்பத்திக் காரணிகளின் குறைந்தளவு இடம்பெயரும் தன்மை (Lower mobility of Factors of Production): நாட்டிற்குள்ளே இருப்பதை விட நாடுகளிடையே உழைப்பு, மூலதனம் போன்ற உற்பத்திக் காரணிகளின் இடம் பெயரும் தன்மை குறைவாகவே உள்ளது. ஆயினும், தற்பொழுது இக்காரணிகளின் இடம்பெயரும் தன்மை அதிகரித்துள்ளது என்றே நாம் சொல்ல வேண்டும். விமானப் போக்குவரத்தின் அதிகரிப்பினால் தற்பொழுது உழைப்பின் இடப்பெயர்ச்சி அதிகரித்துள்ளது. பல்வேறு வங்கி நிறுவனங்களால் அளிக்கப்படும் பல்வேறு மாற்ற (Transfer) வசதிகளின் மூலம் மூலதனத்தின் அசைவும் தற்பொழுது அதிகரித்துள்ளது. ஆயினும் உள்நாட்டு வாணியத்துடன் ஒப்பிடும் பொழுது, அயல்நாட்டு வாணிபத்தில் இவற்றின் இடப்பெயர்ச்சியின் அளவு அவ்வளவு திருப்திகரமானதாக இல்லை என்றே நாம் சொல்ல வேண்டும்.

12. சந்தை இயல்புகளில் மாற்றங்கள் (Differences in Market Characteristics): ஒவ்வொரு நாடும், தமக்கென சொந்தமான தேவை முறை, வழங்கல் வழி, விற்பனைப் பெருக்க முறை போன்றவற்றைக் கொண்டு தனி ஒரு சந்தையாகவே விளங்குகிறது. ஒரே நாட்டிலேயே கூட பல்வேறு வட்டாரங்களிலும் தேவையின் இயல்புகளில் மாற்றங்கள் இருக்கலாம். குறிப்பாக இவ்வித மாற்றங்கள் அமெரிக்க ஐக்கிய நாடுகள், இந்தியா, சீனா போன்ற பெரிய நாடுகளில் காணப்படுகின்றன எனலாம். இங்கு ஒவ்வொரு மாநிலத்திலும் தேவைமுறை மாறுபட்டே அமைந்துள்ளது.

13. இவையே உள்நாட்டு வாணிபத்திற்கும் பன்னாட்டு/அயல்நாட்டு வாணிபத்திற்கும், இடையிலான பொதுவான மாறுபாடுகள் ஆகும். மேலே விவாதிக்கப்பட்ட கஷ்டங்கள் அனைத்தும் பன்னாட்டு வாணிபத்தில் ஈடுபடும் அனைத்து நாடுகளும், சந்திக்க வேண்டிய பிரச்சனைகளே ஆகும். பல்வேறு நாடுகளிலும் மரபுகள், பழக்கம், பொருளாதார முறை ஆகியன மாறுபட்டே உள்ளன. ஆகவே, ஒவ்வொரு நாட்டுடனும் வணிகத்தில் ஈடுபடும் பொழுது தனிவகையான ஒரு கையாளுதலை மேற்கொள்ளுதல் வேண்டும். ஏனெனில் ஒவ்வொரு நாட்டிலும் ஒவ்வொரு வகையான பிரச்சினை இருக்கும்.

**பன்னாட்டு வாணிபத்திலிருந்து கிடைக்கும் ஆதாயங்கள் (Gains from International Trade)**

உள்நாட்டு வாணிபம் மற்றும் பன்னாட்டு வாணிபம் ஆகிய இரண்டின் முதன்மை நோக்கமும் ஒன்றே ஆகும். அதாவது இவை இரண்டி நோக்கமும் மக்களின் வாழ்க்கைத் தரத்தை உயர்த்துவதே ஆகும். சந்தேகத்துக்கிடமின்றி

குறிப்பு

பன்னாட்டு வாணிபம் இல்லையேல், நம்மால் நமது நாட்டை இந்த அளவிற்கு வளர்த்திருக்க முடியாது மக்களின் மாறுபட்ட விருப்பத்தையும் ரசனையையும் திருப்திகரமாக நிறைவேற்றி அவர்களை இந்த அளவிற்கு உயர்ந்த வாழ்க்கைத் தரத்தை அனுபவிக்கச் செய்திருக்கவும் முடியாது. பன்னாட்டு வாணிபத்தின் பல்வேறு ஆதாயங்களையும் நாம் பின்வருமாறு காணலாம்.

1. பன்னாட்டுசார்ந்த தன்தேர்ச்சி (International Specialisation) ஒவ்வொரு நாடும், தான் தனித்தேர்ச்சி பெற்ற வகையில் நன்மைகளைப் பெறக்கூடிய பொருட்களின் உற்பத்தியில் தன்னை ஈடுபடுத்திக்கொள்ள பன்னாட்டு வாணிபம் வகை செய்கிறது. இயற்கை வளங்கள், மூலதனம், கருவி மற்றும் மனித சக்தியின் திறமை என ஏதேனும் வடிவில் குறிப்பிட்ட சில வசதிகளை அதிகளவில் கொண்டதாக ஒவ்வொரு நாடு அல்லது பகுதியும் விளங்குகிறது. சில நாடுகளில் தாதுப்பொருட்கள் அதிக அளவில் கிடைக்கின்றன. சில நாடுகளில் நீர்ம மின்சக்தி அதிக அளவில் கிடைக்கிறது. சில நாடுகளில் அதிக அளவு நிலவும் குறைவான ஜனத்தொகையும் இருக்கலாம். வேறு சில நாடுகள் உயர் தயாரிப்பு நுட்பங்களையும், மிகத் திறமையாகவும் கடினமாகவும் உழைக்கக்கூடிய உழைப்பாளர்களையும் பேரளவில் மூலதனக் கருவிகளையும் கொண்டிருக்கலாம். நாடுகளிடையே வாணிபம் மேற்கொள்ளப்படுவதில்லை எனில், ஒவ்வொரு நாடும் அனைத்து வகையான பொருட்களையும் தாமே தயாரித்துக் கொள்ளவேண்டிய கட்டாயத்திற்குத் தள்ளப்பட்டு விடும். உற்பத்திக்கு வசதியில்லாத பொருட்களைக் கூட தமது தேவைக்கென தாமே தயாரித்துக் கொள்ள வேண்டிய கட்டாயத்திற்கு அனைத்து நாடுகளும் தள்ளப்பட்டு விடும். ஆனால் பன்னாட்டு வாணிபம் ஒவ்வொரு நாடும் அது தனித்தேர்ச்சி பெற்று சிறப்பாக இலாபகரமாக தயாரிக்கப்படக்கூடிய பொருட்களின் தயாரிப்பில் மட்டும் கவனம் செலுத்தும் வண்ணம் உதவி செய்கிறது. ஆகவே பன்னாட்டு வாணிபம், பன்னாட்டுத் தனித்தேர்ச்சியையும் அதனுடன் தொடர்புடைய பல்வேறு நன்மைகளையும் கொணர்கிறது.

2. அதிகரிக்கப்பட்ட உற்பத்தி உயர்ந்தளவு வாழ்க்கைத் தரமும் (Increased Production and Higher Standard of Living): தனித்தேர்ச்சி பின்வருவனவற்றிற்கு வகை செய்கிறது என்பது நாம் அனைவரும் அறிந்ததே.

    1. கிடைக்கக்கூடிய வள ஆதாரங்களின் மேம்பட்ட பயன்பாடு.
    2. நன்மை பயக்கக்கூடிய பொருட்களின் உற்பத்தி மீது கவனம் செலுத்துதல்.

3. உற்பத்தி ஆற்றலை முறைப்படுத்துதல் மற்றும் உற்பத்தியின் சக்தி மற்றும் காலத்தை சேமித்தல்

4. புதிய உற்பத்தி நுட்பங்களைக் கண்டுபிடித்தலும் பயன்படுத்தலும்.

குறிப்பு

இவை அனைத்தும் குறிப்பிட்ட ஒரு நன்மையையே உணர்த்துகின்றன. அதாவது, இவை அனைத்தும் அதிகரிக்கப்பட்ட உற்பத்தி என்ற ஒன்றையே உணர்த்துகின்றன. அதிகரிக்கப்பட்ட உற்பத்தி இரண்டு நாடுகளிலுமே உயர்ந்த அளவு வாழ்க்கைத் தரத்தை உறுதி செய்ய வல்லதாகும். ஆகவே பன்னாட்டு வாணித்தினால் இரு நாடுகளுமே பயனடைகின்றன எனலாம்.

3. பற்றாக்குறையான மூலப்பொருட்களின் கிடைக்கும் தன்மை (Availability of Scarce Materials): குறிப்பிட்ட இன்றியமையாத மூலப் பொருட்கள் அல்லது வள ஆதாரங்களின் சேமிப்பை அதிகரிக்க ஒரு நாட்டிற்கு உதவும் ஒரே வழி பன்னாட்டு வாணிபமே ஆகும். அனைத்து வள ஆதாரங்களையும் தன்னுள்ளேயே கொண்டுள்ள எந்த நாடும் உலகில் இல்லை. இதற்கு அமெரிக்க ஐக்கிய நாடுகளும் சோவியத் யூனியனும் கூட விதிவிலக்கல்ல. அதே நேரத்தில், சில அபூர்வமான மூலப்பொருட்களான ரப்பர், டின், நிலக்கரி போன்ற இயற்கையின் வரப்பிரசாதங்களை அதிகளவில் தன்னகத்தே கொண்டுள்ள இந்தோனேஷியா போன்ற நாடுகளும் உள்ளன. பன்னாட்டு வாணிபமானது மூலப்பொருட்கள் அனைத்தும் எல்லா நாடுகளுக்கும் சரிசமமாகக் கிடைப்பதை உறுதி செய்கிறது.

4. நாடுகளுக்கு இடையில் விலைகளை சமப்படுத்துதல் (Equalisation of Prices between Countries): பன்னாட்டு வாணிபத்தின் மிக முக்கியமானதொரு ஆதாயம் பல நாடுகளிடையே வியாபாரம் செய்யப்படும் பொருட்களின் விலை எல்லா நாட்டிலும் ஒன்றாகவே உள்ளது என்பதே ஆகும். பொருள் ஒன்றின் விலை மலிவாக இருப்பதும் அதிகமாக இருப்பதும் அப்பொருளின் அளிப்பைப் பொறுத்த விஷயமாகும். ஒரு நாட்டில் பொருள் அதிகளவில் தயாரிக்கப்பட்டு அளிக்கப்படும் பொழுது அதன் விலை மலிவாகவும் மாறாக அப்பொருள் அந்நாட்டில் தயாரிக்கப்படாமலோ அல்லது குறைவான அளவில் தயாரிக்கப்பட்டு அளிக்கப்படும் நிலையில் விலை அதிகமாகவும் இருக்கும். பன்னாட்டு வாணிபத்தின் மூலம் இறக்குமதி செய்யப்படும் நாட்டில் அளிப்பு அதிகரிக்கிறது. இதன் விளைவால் விலை குறைகிறது. இவ்விதமாக, உலகளாவிய விதத்தில் வியாபாரம் செய்யப்படும்பொழுது அனைத்துப் பொருட்களின் விலையும் சமமாக்கப்படுகிறது.

குறிப்பு

5. நவீனத் தொழில்சார்ந்த சமூகத்தின் தோற்றம் (Evolution of modern Industrial Society): நவீனத் தொழில்சார்ந்த சமூகமானது தீவிரமான தனித்தேர்ச்சியையும் பேரளவு உற்பத்தியையுமே அடிப்படையாகக் கொண்டு உள்ளது எனலாம். இரண்டுமே சந்தையின் அளவை அடிப்படையாகக் கொண்டு உள்ளன. பொருட்களின் சந்தை தீவிரமானதாகவும் பேரளவினதாகவும் இருக்கும் பட்சத்தில் தனித்தேர்ச்சியின் அளவு அதிகமாகவும் உற்பத்தி பேரளவினதாகவும் இருக்கும். இதன் காரணமாகவே, ஆடம் ஸ்மித் என்பவர் உழைப்புப் பாகுபாடு (Division of Labour) சந்தையின் அளவால் வரையறுக்கப்படுகின்றது என்கிறார். பன்னாட்டு வாணிபத்தின் மூலம் ஒட்டுமொத்த உலகத்தையும் உள்ளடக்கும் நோக்கில் பொருட்களின் சந்தை பரந்த விரிவடைந்துள்ளது. ஆகவே, பன்னாட்டு வாணிபம் இல்லாமல் நவீனத் தொழில்சார்ந்த சமூகம் இந்த அளவிற்கு மேம்பட்டிருக்க முடியாது என்று சொல்லப்படுவது முற்றிலும் சரியே.

6. உயர்ந்தளவு வேலைவாய்ப்பிற்கு வழிவகுக்கிறது (Leads to Higher Level of Employment) : ஒரு நாட்டில் தயாரிக்கப்படும் பொருட்களுக்கு பன்னாட்டு வாணிபம் ஒட்டுமொத்த உலகச் சந்தையையே திறந்துவிடுவதன் மூலம் அவற்றின் விற்பனைக்கு வழிவகுக்கிறது. இதன்மூலம் இது சந்தைகளின் அளவை விரிவாக்குகிறது மற்றும் உலகம் முழுவதிலும் மக்களுக்கு வேலைவாய்ப்பிற்கு ஆதாரமாக விளங்குகிறது. ஆகவே, பன்னாட்டு வாணிபம் உழைப்பாளிகளுக்கு வேலைவாய்ப்புகளை அதிகரித்துத் தருகிறது எனலாம். உதாரணமாக, இந்தியா சுமார் 2,000 கோடி மதிப்பிற்கான ஆயத்த ஆடைகளை ஆண்டுதோறும் பல நாடுகளுக்கும் ஏற்றுமதி செய்து வருகிறது. இது பேரளவில் தையல்காரர்கள், பெண்கள், வடிவமைப்பாளர்கள், பொதிமம் செய்பவர்கள் ஆகியோர்களுக்கு வேலைவாய்ப்பினை அளித்து வருகிறது. இந்த ஏற்றுமதி நிறுத்தப்பட்டால் அது பேரளவு எண்ணிக்கையில் மக்கள் வேலைவாய்ப்பினை இழக்க வழிவகுத்து விடும் என்பதில் எள்ளளவும் ஐயமில்லை.

7. மக்களுக்கு வருமானம் ஈட்ட வகை செய்கிறது (Enables People to Earn Income): பன்னாட்டு வாணிபம் ஆனது பேரளவு எண்ணிக்கையில் மக்களுக்கு வேலைவாய்ப்பினைப் பெற்றுத்தருகிறது. அதன்மூலம் இது உலகம் முழுவதிலும் உள்ள பல்லாயிரக்கணக்கான மக்களுக்கும் வருமானம் ஈட்டுவதை ஏதுவாகிறது. உதாரணமாக, மத்திய கிழக்கு நாடுகளில் மேற்கொள்ளப்படும் கச்சா எண்ணெய் மற்றும் பெட்ரோலியப்

பொருட்களின் ஏற்றுமதி அந்நாடுகளில் மக்களின் வருமான நிலையை பலமடங்கு உயர்த்தியுள்ளது.

குறிப்பு

8. மூலதனம் மற்றும் தொழில்நுட்ப அறிவின் மாற்றத்திற்கு வழி வகுக்கிறது (Provides for Transfer of Capital and Technical Know-how) பன்னாட்டு வாணிபத்தில் மூலதனம் மற்றும் தொழில்நுட்பத்தின் மாற்றம் அடங்கியுள்ளது. பொருளாதார ரீதியாக பின்தங்கியுள்ள மற்றும் வளர்ந்துவரும் நாடுகளுக்கு செய்யப்படும் மூலதன மற்றும் தொழில்நுட்ப மாற்றம் அவைகளில் பொருளாதார வளர்ச்சிக்கு பெரிதும் உதவுகின்றது. ஆகவே. பன்னாட்டு வாணிபம், வளர்ச்சியுற்ற நாடுகளிடம் இருந்து மூலதனம் மற்றும் தொழில்நுட்பத்தைப் பெறுவதன் மூலம் அந்நாடுகளில் உள்ள உயர்ந்த அளவு உற்பத்தி நிலை மற்றும் உற்பத்தித்தன்மை போன்ற பயன்களையும் பங்கிடுவதற்கு வளர்ந்து வரும் நாடுகளுக்கு உதவுகிறது எனலாம். இதனால் வளர்சியுறும் நாடுகளுக்கு தான் பெற்ற கடனையும் காப்புரிமைக் கட்டணங்களையும் எளிதில் திரும்ப செலுத்திவிடுகின்றன.

9. தொழில்நுட்ப மேம்பாடுகளை வெளிப்படையாக்குகிறது: (Exposure to Technological Developments): பன்னாட்டு வாணிபம் ஆனது வளர்ச்சியுற்ற நாடுகளில் ஏற்படும் தொழில்நுட்ப மேம்பாடுகளை பின்தங்கிய நாடுகளும் அறிய வகை செய்கிறது. இத வளர்ந்துவரும் நாடுகளில் புதிய தொழில் கலாச்சாரம் பரவ உதவிபுரிகிறது, புதியமாற்றம் நவீன மதிப்பு மறையை உருவாக்க (Mould) உதவி புரிகிறது மற்றும் பயன்படுத்தப்படாமல் கிடக்கும் இயற்கை ஆதாரங்களில் ஆற்றல்மிக்க உபயோகத்திற்கு உதவுகிறது. இறுதியாக, இது வளர்ந்துவரும் நாடுகளின் பொருளாதார மேம்பாட்டிற்கு வழிவகுக்கிறது. ஆகவே மேம்பாட்டின் பயன்களை வளர்ச்சியுற்ற நாடுகளும் வளர்ந்துவரும் நாடுகளும் ஒன்றிணைந்து பங்கிட்டுக் கொள்ள வகை செய்கிறது.

10. நாடுகள் ஒன்றையொன்று சார்ந்திருக்குமாறு செய்கிறது (Makes the Countries Dependent on Each Other) : பன்னாட்டு வாணிபம் நாடுகள் ஒவ்வொன்றும் ஒன்றையொன்று சார்ந்ததும் ஒற்றுமையோடும் இருக்க வகை செய்கிறது. பன்னாட்டு வாணிபம் இல்லாமல் நாடுகள் ஒவ்வொன்றும் தனித்து நின்று பொருளாதாரம் சார்ந்த தன்னிறைவை அடைய முயலும் பட்சத்தில் இவ்வித ஒத்துழைப்பு சாத்தியமாகாது.

## 1.5 உங்கள் முன்னேற்றத்தை சரிபார்க்கும் வினாக்கள்

1. வெளிநாட்டு வர்த்தகம் என்றால் என்ன?

2. பன்னாட்டு வணிகத்தின் இயல்புகள் யாவை?

## 1.6 உங்கள் முன்னேற்றத்தை சரிபார்க்கும் பதில்கள்

குறிப்பு

2. பன்னாட்டுப் பொருளியல் உலகைப் பல்வேறு நாடுகளைக் கொண்ட ஒரு சமுதாயமாக எண்ணிப் பார்க்கின்றது. வேறுபட்ட நாடுகள் ஒவ்வொன்றும் தனித்தனியாக இயற்கை வளங்கள், மூலதனம், தொழில் நுட்ப அறிவு, மனிதவளம், சமுதாயப் பொருளாதார நிறுவனங்கள், தனிப்பொருளாதாரக் கொள்கைகள் ஆகியவற்றைப் பெற்றிருக்கின்றன. இவற்றில் வேறுபாடுகள் இருந்த போதிலும், உலக நாடுகளுக்கிடையில் வாணிப, தொழில், நிதித் தொடர்புகள், முதலீடுகள் ஆகியவை நடைபெறுகின்றன.

**3.**

1.இயற்கை வள வேறுபாடு

2.தட்ப, வெப்ப நிலைகள்

3.தொழில் வளர்ச்சி நிலை

4.நாட்டு மக்கள்

5.அறிவியல் வளர்ச்சி

## 1.6 சுருக்கம்

உலக வளர்ச்சியில் பன்னாட்டு பொருளாதாரம் மிக முக்கித்துவம் பெற்று வருகிறது. ஒரு நாட்டின் பொருளாதார வாழ்வும் வளமும் வளர்ச்சியும் உலக பொருளாதார நிலையை ஒட்டி அமைகிறது. உள்நாட்டு மற்றும் பன்னாட்டு வாணிபத்திற்கு அடிப்படையில் பன்னாட்டு வாணிபத்தில் ஒவ்வொரு நாடும் தனது சூழ்நிலைக்கு ஏற்ப எந்த பொருளை குறைந்த செலவில் உற்பத்தி செய்ய முடியுமோ அதன் உற்பத்தியில் ஈடுபடுகின்றது.

### 1.7முக்கிய வார்த்தைகள்

உள்நாட்டு வாணிபம் மற்றும் பன்னாட்டு வாணிபம், மூலதனப் பெயர்ச்சி:

### 1.8சுய மதிப்பீட்டு பயிற்சி வினாக்கள்

**குறுகிய வினாக்களுக்கு விடையளி.**

**1.பன்னாட்டு வர்த்தகம் என்றால் என்ன?**

**2.** பன்னாட்டு வணிகத்தின் இயல்புகள் யாவை?

**நெடுவினாக்களுக்கு விடையளி.**

**1.** வெளிநாட்டு வர்த்தகத்தின் இயல்புகளை கூறுக?

**2.** பிராந்திய மற்றும் சர்வதேச வர்த்தகத்தினுடைய வேறுபாட்டை கூறுக?

## 1.9 பரிந்துரைக்கப்படும் நூல்கள்

Carbaugh, R.J. (2008), **“International Economics”,** Thomson South Western, New Delhi.

கார்பக் R.J. (2008), “பன்னாட்டு பொருளாதாரம்”, தாம்சன் தென் மேற்கு. புது டெல்லி

குறிப்பு

# அலகு – 2 சர்வதேச வர்த்தக கோட்பாடுகள்



குறிப்பு

## 2.1. சர்வதேச வர்த்தக கோட்பாடுகள் ஆடம்ஸ்மித் ரிச்சர்டு ஹீபர்லர் மற்றும் ஒலின் கோட்பாடுகள் பன்னாட்டு வாணிபக் கோட்*பாடுகள்*

**a).வாய்ப்பு வழிச் செலவுக் கோட்பாடு(Theory of opportunity cost)**

ரிக்கார்டோவின் ஒப்பீட்டுச் செலவுக் கோட்பாடு உழைப்பு மதிப்புக் கோட்பாட்டைக் சார்ந்து அமைந்திருப்பதால், அதனை ஒரு குறைபாடான கோட்பாடென்று திறனாய்வாளர்கள் கட்டிக்காட்டினார். உழைப்பு மதிப்புக் கோட்பாட்டின்படி (The Labour Theory of Value) ஒரு பொருளின் மதிப்பு அந்த பொருள் உற்பத்தியில் அடங்கியிருக்கும் உழைப்பின் கால அளவிற்குச் சமமானதாகும். இக்கோட்பாடு

1. உழைப்புதான் ஒரேயொரு உற்பத்திக் காரணி; (2) உழைப்பு ஒரே வகையாக இருக்கின்றது; (3) உழைப்பினை எல்லாப் பொருட்களின் உற்பத்தியிலும் ஒரே விகிதத்தில் பயன்படுத்துகின்றோம், என்னும் எடுக்கோள்கின் அடிப்படையில் அமைந்துள்ளது.

இந்த மூன்று எடுகோள்களும் தவறானவையாகும். (1) உழைப்பு மட்டுமல்ல, நிலம், முதல் அமைப்பு ஆகிய மற்றைய உற்பத்திக் காரணிகளையும் பயன்படுத்தித்தான் பொருட்களை உற்பத்தி செய்கின்றோம். (2) உழைப்பை ஒரே அளவில் அல்ல; பல அளவுகளில் பொருள் உற்பத்தியில் பயன்படுத்துகின்றோம். மேலும் உழைப்பு மூலதனத்துக்கு மாற்றாகவும் பயன்படுகின்றது.

குறிப்பு

ஒப்பீட்டுச் செலவுக் கோட்பாட்டிலுள்ள இந்த முக்கியமான குறைபாடுகளை விலக்கிவிட்டு, ஹேபர்லர் (Haberler) வாய்ப்பு வழிச்செலவுக் கோட்பாட்டின் மூலம் ஒப்பீட்டுச் செலவுக் கொள்கையை விளக்குகின்றார். இதனை அவர் பதிலி வளைகோட்டினைப் (The Substitution Curve) பயன்படுத்தி விளக்குகின்றார். இக்கோட்பாட்டினை, சாமுவேல்சன் (Smauelson) உற்பத்திச் சாத்தியக்கோடு' (Production Possibility Curve) அல்லது 'மாற்று வழிக்கோடு' (Transformation Curve) என்றும்', லெர்னர் (Lerner) 'உற்பத்திச் சமநோக்குக்கோடு' (Production Indifference Curve) அல்லது 'உற்பத்தி எல்லை' (Production Fronties) என்றும் கூறுகின்றனர்.

கோட்பாடு-விளக்கம்: வாய்ப்பு வழிச் செலவுக் கோட்பாட்டின்படி, ஒரு நாடு X அல்லது Y என்னும் பொருட்களில் எதனையும் உற்பத்தி செய்ய முடியுமென்றால், X என்ற பொருளின் வாய்ப்பு வழிச்செலவு, X என்ற பொருளை ஓர் அலகு கூடுதலாக உற்பத்தி செய்ய எவ்வளவு Y என்ற பொருளின் உற்பத்தியைக் கைவிடவேண்டுமோ அந்த அளவின் மதிப்பாகும். இரண்டு பொருட்களின் மாற்று வீதத்தை அவற்றின் வாய்ப்பு வழிச்செலவுகளின் அடிப்படையில் கூறுகின்றோம். இதனைப் பன்பாட்டு வாணிபத்தில் உற்பத்திச் சாத்தியக்கோடுகளின் மூலம் விளக்குகின்றோம்.

**எடுகோள்கள்:** ஹேபர்லர் வாய்ப்ப வழிச் செலவுக் கோட்பாட்டினை கீழ்க்கண்ட எடுகோள்களின் மீது உருவாக்கியுள்ளார்.

1. A,B என்னும் இரண்டு நாடுகள் மட்டும் உள்ளன.
2. ஒவ்வொரு நாடும் உழைப்பு, முதல் ஆகிய இரண்டு உற்பத்திக் காரணிகளைப் பெற்றிருக்கின்றன.
3. ஒவ்வொரு நாடும் X,Y என்னும் இரண்டு பொருட்களையும் உற்பத்தி செய்ய முடியும்.
4. உற்பத்திக்காரணி அங்காடியிலும், பொருட்களின் அங்காடியிலும் நிறைவுப்போட்டி நிலவுகின்றது.
5. ஒவ்வொரு பொருளின் இறுதிநிலை உற்பத்திச் செலவும் இறுதிநிலைப் பணச்செலவும் சமமாக இருக்கும்
6. ஒவ்வொரு உற்பத்திக் காரணியின் விலையும் அதனுடைய இறுதிநிலை உற்பத்தி மதிப்பிற்குச் சமமாக இருக்கும்.
7. ஒவ்வொரு உற்பத்திக் காரணியின் அளிப்பும் ஓர் அளவோடு இருக்கும்.
8. ஒவ்வொரு நாட்டிலும் முழுநிறை வேலை வாய்ப்பு இருக்கும்.

9. தொழில் நுட்பத்தில் மாற்றம் இல்லை. இருக்கின்ற மூலவளங்களைப் பயன்படுத்தி திறமையாக உற்பத்தி நடைபெறும்.
10. இரண்டு நாடுகளுக்கிடையிலும் உற்பத்தி காரணிகள் இடம் பெயர்ந்து செல்வதில்லை.
11. ஒரு நாட்டிற்குள் உற்பத்திக் காரணிகள் முழுமையாக இடம் பெயர்ந்து செல்லும்.
12. இரண்டு நாடுகளுக்கிடையிலும் கட்டுப்பாட்டில்லாத சுதந்திர வாணிபம் நடைபெறும்.

இந்த எடுகோள்களின் அடிப்படையில், ஒரு நாடு உற்பத்தி செய்யக்கூடிய இரண்டு பொருட்களின் கூட்டு அளவுகளை உற்பத்திச் சாத்தியவளைகோடு காட்டுகின்றது. இந்தக் கோட்டின் வளைவின் சாய்வு நிலையிலிருந்து (Slope) ஒரு பொருளின் ஓர் அலகைக் கூடுதலாக உற்பத்தி செய்ய வேண்டுமானால் மற்றொரு பொருளின் உற்பத்தியில் எவ்வளவு குறையும் என்பதை அறிந்து கொள்ளலாம். அதாவது உற்பத்தி சாத்தியக் கோட்டின் வளைவு அதனுடைய இறுதிநிலை மாற்று உற்பத்தி விகிதமாகும் (Marginal Rate of Transformation-MRT).

வாய்ப்பு வழிச்செலவுக் கோட்பாட்டில் வெவ்வேறு உற்பத்திச் செலவு நிலைகளில் உற்பத்திச் சாத்தியவளைகோட்டின் அமைப்புத்தான் பன்னாட்டு வாணிபத்தில் எவ்வளவு ஆதாயம் கிடைக்கின்றதென்பதைத் தீர்மானிக்கின்றது. வளர்ந்துசெல் வாய்ப்பு வழிச்செலவில், மாறாத வாய்ப்பு வழிச்செலவில், குறைந்துசெல் வாய்ப்பு வழிச் செலவில் பன்னாட்டு வாணிபம் எப்படி அமையும் என்பதை விளக்கலாம்.

**மாறாத வாய்ப்பு வழிச்செலவில் வாணிபம்** (Trade Under Constant Opportunity cost): மாறாத வாய்ப்பு வழிச் செலவில் உற்பத்திச் சாத்திய வளைகோடு ஒரு நேர்கோடாக இருக்கும். A,B என்னும் இரு நாடுகளின் நிலையினை கீழ்கண்ட வரைபடங்களின் மூலம் விளக்கலாம்.







**படம் 1.1** **படம் 1.2**

1.1 படத்தில், A நாட்டின் உற்பத்திச் சாத்தியக் கோட்டினை PA கோடும், B நாட்டின் உற்பத்திச் சாத்தியக் கோட்டினை PB கோடும் காட்டுகின்றன. A நாடு Y பொருளை OP அளவும் அல்லது X பொருளை NA அளவும் உற்த்தி செய்ய முடியும். இதே பேல B நாடு Y பொருளை OP அளவும் அல்லது X பொருளை OB அளவும் உற்பத்தி செய்யும்.

இரண்டு நாடுகளும் இரண்டு பொருட்களையும் உற்பத்தி செய்ய விரும்பினால், அவை அவற்றிற்குரிய உற்பத்திச் சாத்தியக்கோட்டில் ஏதாவது ஒரு புள்ளியில் உற்பத்தி அளவுகளை அமைத்துக்கொள்ள வேண்டும். எடுத்துக்காட்டாக B நாடு E அளவில் உற்பத்தி செய்ய விரும்பினால் OX1 அளவு X பொருளையும் OY1 அளவு Y பொருளையும் உற்பத்தி செய்ய முடியும். உற்பத்திச் சாத்தியக்கோட்டின் சாய்வுநிலை (Slope) இருபொருட்களின் சார்பு விலைகளை நிர்ணயிக்கின்றது. உற்பத்திச் சாத்தியக்கோடு நேர்கோடாக இருப்பதால், அவற்றின் சார்பு விலைகள் அந்தக் கோட்டின் எல்லாப் புள்ளிகளிலும் ஒரே விகிதத்திலேயே இருக்கும். ஆதலால் இரண்டு பொருட்களின் உற்பத்திச் செலவு விகிதம் (அதாவது சார்பு விலைகள்) B நாட்டில் OP/OB என்றும் A நாட்டில் OP/OA என்றும் இருக்கும்.

இரண்டு நாடுகளிலும் சார்பு விலைகள் வேறுபடுவதால் இவற்றிற்கிடையில் வாணிபம் நடைபெறும் சாத்தியக்கூறு உள்ளது. A,B என்னும் இரு நாடுகளும் Y பொருளை OP (ஒரே) அளவில் உற்பத்தி செய்கின்ற வாய்ப்பினைப் பெற்றிருக்கின்றன. ஆனால் A நாடு X பொருளை மிகுதியாகவும், B நாடு X பொருளைக் குறைவாகவும் உற்பத்தி செய்கின்றன. ஆதலால் A நாட்டில் X பொருள் விலை மலிவாக இருக்கும். இதிலிருந்து A நாடு X பொருள்

உற்பத்தியிலும் B நாடு Y பொருள் உற்பத்தியிலும் ஒப்பீட்டு நன்மை அடைவதை அறியலாம். இத்தகைய சூழலில், A நாடு X பொருள் உற்பத்தியிலும் B நாடு Y பொருள் உற்பத்தியிலும் சிறப்புத் தேர்ச்சி பெற்று, அந்தப் பொருளை மற்றைய நாட்டிற்கு அனுப்புவது இலாபம் தருவதாக இருக்கும்.

குறிப்பு

இரண்டு நாடுகளில் A பெரியதென்றும் B சிறியதென்றும் வைத்துக்கொள்வோம். A பெரிய நாடென்பதால் அதனுடைய உள்நாட்டு விலை விகிதமே (PA) B நாட்டிற்கும் பன்னாட்டு விலை விதமாக இருப்பதாகக் கொள்வோம். வாணிபத்திற்கு முன்னால் B நாடு E புள்ளியில் உற்பத்தி செய்து நுகர்கிறது என்று வைத்துக்கொள்வோம். வாணிபத்திற்குப் பிறகு Y பொருள் உற்பத்தியில் சிறப்பாக ஈடுபடும். அதனுடைய உற்பத்தி E புள்ளியிலிருந்து P புள்ளிக்குச் செல்லும். அது தன்னுடைய நுகர்வை புதிய பன்னாட்டு விலைக்கோட்டில் (PA) C புள்ளிக்குக் கூட்ட முடியும். அந்தப் புள்ளியில் PT அளவு X பொருளை A நாட்டிலிருந்து இறக்குமதி செய்து நுகரும். அதற்கு TC அளவு Y பொருளை ஏற்றுமதி செய்யும். இம்முறையில் B பன்னாட்டு வாணிபத்தின் மூலம் திட்டவட்டமாக இலாபம் பெறுவதைக் காணலாம்.

ஆனால் வாணிபத்திற்கு முன்னும் பின்னும் A நாட்டுப் பொருட்களின் சார்பு விலைகளில் மாற்றம் இல்லாததால் A நாடு பன்னாட்டு வாணிபம் மூலம் ஆதாயம் பெறவில்லை.

இரண்டு நாடுகளும் இலாபம் பெறக்கூடிய நிலையை 1.2 வரைபடம் காட்டுகின்றது. அதில் PR என்ற புதிய பன்னாட்டு விலைக்கேடு வரையப்பட்டுள்ளது. B நாடு E புள்ளியிலிருந்து புதிய பன்னாட்டு விலைக்கோடு வரையப்பட்டுள்ளது. B நாடு E புள்ளியிலிருந்து புதிய பன்னாட்டு விலைக்கோட்டில் (PR) C புள்ளிக்குச் செல்கின்றது. இப்பொழுது TC அளவு Y பொருளை ஏற்றுமதி செய்து PT அளவு X பொருளைப் பெறுகின்றது. இந்நிலையில் B நாட்டிற்கு முதலில் கிடைத்ததை விட ஆதாயம் குறைகின்றது. ஆனால் A நாடும் KC அளவு ஆதாயம் பெறுவது குறிப்பிடத்தக்கதாகும்.

வளர்கின்ற வாய்ப்பு வழிச்செலவில் வாணிபம் (Trade under Increasing Opportunity Cost): வளர்ந்துசெல் வாய்ப்பு வழிச்செலவில், ஒரு நாடு தனக்கு ஒப்பீட்டு நன்மை இருக்கும் பொருளை சிறப்பாக அதிக அளவில் உற்பத்தி செய்யும்பொழுது அதனுடைய வாய்ப்பு வழிச்செலவு கூடும். ஆதலால்

இந்நிலையில் உற்பத்தி சாத்தியவளைகோடு மூலப்புள்ளிக்கு புறங்குவிந்ததாக இருக்கும். இதனை வரைபடங்கள் 1.3 மற்றும் 1.4 காட்டுகின்றன.

குறிப்பு




**படம் 1.3** **படம் 1.4**

படம் 1.3 இல் A நாட்டின் உற்பத்திச் சாத்தியக்கோடான $AA_1$ ஐக் காணலாம். இந்தக்கோட்டின் வளைவிலிருந்து A நாடு X பொருளின் உற்பத்தியில் சிறப்பாக ஈடுபடுமென்பதை அறியலாம். வளைகோட்டில் A புள்ளியிலிருந்து $A_1$ புள்ளிக்கு நகர்ந்து செல்லும் பொழுது, அதிக அளவில் Y பொருளின் உற்பத்தியை விட்டுக்கொடுத்துத் தான் கூடுதலாக X பொருளை உற்பத்தி செய்ய வேண்டியுள்ளது. இப்படி A நாடு X பொருளை ஒவ்வொரு கூடுதல் அலகு உற்பத்தி செய்யவும் வளர்கின்ற வாய்ப்புச் செலவினை ஏற்க வேண்டியுள்ளது.

அதே நேரத்தில் B நாட்டின் உற்பத்திச் சாத்தியவளைகோட்டை வரைபடம் 1.4 காட்டுகின்றது. இது B நாடு Y பொருள் உற்பத்தியில் சிறப்பாக ஈடுபடுமென்பதைக் காட்டுகின்றது. இந்த வளைகோடு B நாடு $B_1$ புள்ளியிலிருந்து B புள்ளிக்கு மேல்நோக்கி நகர்கின்றபொழுது அதிக அளவில் X பொருள் உற்பத்தியை விட்டுக்கொடுத்து கூடுதலாக Y பொருளின் அலகுகளை உற்பத்தி செய்ய வேண்டியுள்ளது. ஆதலால் Y பொருள் உற்பத்தியை வளர்ந்து செல் வாய்ப்பு வழிச்செலவில் மேற்கொள்ள வேண்டியுள்ளது.

பன்னாட்டு வாணிபம் இல்லாத நிலையில், A நாடு K புள்ளியில் X பொருளையும் Y பொருளையும் உற்பத்தி செய்து நுகர்வதாக வைத்துக்கொள்வோம். K புள்ளியில் $AA_1$ உற்பத்திச் சாத்தியக்கோட்டில் aa கோடு இணைதொடு கோடாக இருக்கின்றது. aa கோடு X, Y பொருளின்

உள்நாட்டு சார்பு நிலை விகிதத்தைக் காட்டுகின்றது. இதேபோல் B நாடு $K_1$ புள்ளியில் இரண்டு பொருட்களை உற்பத்தி செய்து பயன்படுத்துகின்றது. அதனுடைய விலைக்கோடு bb உற்பத்திச் சாத்தியக்கோட்டின் $BB_1$ தொடு புள்ளியாக இருப்பதைக் (படம் 1.4) காணலாம்.

குறிப்பு

இரண்டு நாடுகளுக்கிடையிலும் வாணிபம் நடைபெற வேண்டுமானால் அவற்றின் இரு பொருட்களின் பன்னாட்டுவிலை விகிதத்திற்கு உள்நாட்டு அங்காடியில் நிலவும் விலை விகிதத்திற்கும் இடையில் விலை விகித்தில் வேறுபாடு இருக்கவேண்டும். பன்னாட்டு விலை விகிதம் A நாட்டிற்கு PL கோடாகவும், B நாட்டிற்கு $P_1 L_1$ கோடாகவும் இருப்பதாகக் கொள்வோம். இரண்டு ($PL, PL_1$) இணை கோடுகளாக இருப்பதால், இரு நாடுகளுக்கிடையிலும் உள்ள பன்னாட்டு வாணிப வீதம் ஒன்றாக இருக்கின்றதென்பதை அறியலாம்.

A நாட்டில் புதிய சமநிலை PL விலைக்கோட்டில் E புள்ளியில் இருக்கும் (படம் 1.3). A நாடு தனது உற்பத்தி அளவு அதனுடைய உற்பத்திச் சாத்தியக் கோட்டில் K புள்ளியிலிருந்து E புள்ளிக்குச் செல்கின்றது. இந்நிலையில் X பொருளை OR அளவும் Y பொருளை OQ அளவும் உற்பத்தி செய்கின்றது. A நாட்டின் நுகர்வுநிலை PL விலைக்கோட்டில் C புள்ளியாக இருக்கும். இந்நிலையில் A நாடு TR அளவு X பொருளை ஏற்றுமதிசெய்து விட்டு QS அளவு Y பொருளை இறக்குமதி செய்யும். உள்நாட்டில் X பொருளில் OT அளவும் Y பொருளில் OQ அளவும் நுகர்வார்கள். அதனுடைய ஏற்றுமதி-இறக்குமதியை CDE முக்கோணம் காட்டுகின்றது. DE அளவு X பொருளை ஏற்றுமதி செய்கின்றனர். DC அளவு Y பொருளை இறக்குமதி செய்கின்றனர். பன்னாட்டு வாணிபத்தி ஈடுபடுவதன் மூலம் A நாடு X, Y ஆகிய இரு பொருட்களையும் மிகுதியாக நுகர முடிகின்றது. C புள்ளி K புள்ளிக்கு மேலாக வலது பக்கத்தில் இருப்பத்திலிருந்து இதனை அறியலாம்.

இதேபோல B நாட்டிலும் பன்னாட்டு விலைக்கோட்டில் $P_1L_1$ புதிய சமநிலை $E_1$ புள்ளியில் இருக்கின்றது. அதனுடைய உற்பத்திநிலை $K_1$ லிருந்து $E_1$க்கு மாறுகின்றது. அதனுடைய நுகர்வுநிலை $C_1$ ஆக இருக்கும். இந்நிலையில் $D_1$ C1 அளவு X பொருளை இறக்குமதி செய்து $D_1E_1$ அளவு Y பொருளை ஏற்றுமதி செய்யும். உள்நாட்டு நுகர்வுக்கு $OS_1$ அளவு Y பொருளும் $OR_1$ அளவு X பொருளும் கிடைக்கின்றன. இரு பொருட்களையும் மிகுதியாக நுகர்வதால் B

நாடும் பன்னாட்டு வாணிபத்தால் நன்மை பெறுகின்றது. $C_1$ புள்ளி $K_1$ புள்ளிக்கு மேல் வலது பக்கத்தில் இருப்பதிலிருந்து இதனை அறியலாம்.

குறிப்பு

குறைந்து செல் வாய்ப்பு வழிச் செலவில் வாணிபம் (Trade Under Decrearing Opportunity Cost): இரண்டு நாடுகளிலும் உற்பத்திச் சாத்திய வளைகோடு மூலப் புள்ளிக்கு உட்குவிந்ததாக இருக்கும். குறைந்துசெல் வாய்ப்பு வழிச் செலவு நிலையில் உற்பத்தி அகச்சிக்கனங்களின் காரணமாக வளர்ந்துசெல் விளைவுவிதி செயல்படும். இதனால் ஒவ்வொரு நாடும் பன்னாட்டு வாணிபத்தில் ஈடுபட்ட பிறகு ஒரு பொருளின் உற்பத்தியில் மட்டுமே சிறப்பாகக் கவனம்செலுத்தும். இதனை வரைபடம் 1.5 உதவியோடு விளக்கலாம்.




**படம் 1.5**

A நாட்டின் உற்பத்திச்சாத்திய வளைகோடு $AA_1$. B நாட்டின் உற்பத்தி சாத்திய வளைகோடு $BB_1$. வாணிபத்திற்கு முன்னால் நாட்டின் உற்பத்தி நிலை K. அந்தப் புள்ளியில் உள்நாட்டு விலைக்கோடு aa உற்பத்திச் சாத்திய கோட்டிற்கு தொடு புள்ளியாக இருக்கின்றது. இதேபோல B நாட்டின் உற்பத்திநிலை $K_1$. இந்தப் புள்ளியில் அந்த நாட்டின் உள்நாட்டு விலைக்கோடு bb உற்பத்திச் சாத்தியக்கோட்டின் தொடு புள்ளியாக உள்ளது. A நாட்டின் உள்நாட்டு விலைக்கோட்டின் சாய்வுநிலை X பொருளை உற்பத்தி செய்வதில் ஒப்பீட்டு நன்மை இருப்பதைக் காட்டுகின்றது. இதேபோல B நாட்டின் உள்நாட்டு விலை விகிதக்கோடு அந்நாட்டிற்கு Y பொருளை உற்பத்தி செய்வதில் ஒப்பீட்டுச் செலவு நன்மை இருப்பதைக் காட்டுகின்றது.

இரண்டு நாடுகளும் வாணிபத்தில் ஈடுபட பன்னாட்டு விலைக்கோடு $BA_1$ என்ற வைத்துக்கொள்வோம். A நாடு X பொருள் உற்பத்தியிலும் B நாடு Y பொருள் உற்பத்தியிலும் ஈடுபடும். அதாவது A நாடு K புள்ளியிலிருந்து $A_1$ புள்ளிக்குச் செல்லும். B நாடு $K_1$ புள்ளியிலிருந்து B புள்ளிக்குச் செல்லும்.

குறிப்பு

இரண்டு நாடுகளும் C புள்ளியில் நுகா்வினை அமைத்துக் கொள்ளும். இந்தப் புள்ளியில் A நாடு $D_1A_1$ அளவு X பொருளை B நாட்டிநற்கு ஏற்றுமதி செய்து விட்டு $D_1C$ அளவு Y பொருளை இறக்குமதி செய்யும். இதேபோல B நாடு DB அளவு Y பொருளை ஏற்றுமதி செய்து DC அளவு Y பொருளை இறக்குமதி செய்யும். இதனால் இரண்டு நாடுகளும் ஆதாயம் பெறுகின்றன.

**திறனாய்வு** : வாய்ப்பு வழிச் செலவுக் கோட்பாட்டினை ஜேகப்வைனா் (Jacop Viner) வன்மையாகச் சாடுகின்றாா். அவரது கருத்துப்படி நல மதிப்பீட்டினை இது சரியாகச் செய்வதில்லை. வாய்ப்பு வழிச் செலவுக் கோட்பாடு தியாகங்கள் போன்ற உண்மைச் செலவுகளைக் கணிக்கத் தவறிவிடுகின்றது. மேலும் வைனா் உற்பத்திச் சாத்தியக் கோடு உற்பத்திக் காரணிகளின் அளிவில் ஏற்படும் மாற்றங்களையும், வருவாயை விட ஓய்வின் மீது இருக்கும் விளைவினையும் கணக்கில் எடுத்துக் கொள்வதில்லை என்று கூறுகின்றாா்.

குறைகள் கூறப்பெற்ற போதிலும் வாய்ப்பு வழிச் செலவுக் கோட்பாட்டின் சிறப்புக்களைப் பொருளியலறிஞா்கள் கட்டிக்காட்டுகின்றனா். அவற்றைத் தொகுத்துக்கூறலாம்.

1. மிகவும் யதாா்த்தமானது: தொன்மைப் பொருளியலறிஞா்களின் ஒப்பீட்டுச் செலவுக் கோட்பாட்டுடன் ஒப்பிடுகையில் இது மிகவும் யதாா்த்தமானதாகும். ஏனென்றால் இது மதிப்புப் பற்றிய உழைப்புக் கோட்பாட்டைப் புறக்கணித்துவிட்டது.
2. வேறுபட்ட செலவு நிலைகள் : ஒப்பீட்டுச் செலவுக் கோட்பாடு மாறாத செலவு நிலையில் பன்னாட்டு வாணிபத்தை விளக்குகின்றது. மாற்று வழிச் செலவுக் கோட்பாடு வளா்கின்ற, மாறாத, குறைகின்ற செலவு நிலைகளில் எப்படி பன்னாட்டு வாணிபம் நடைபெறுகின்றதென்பதை விளக்குகின்றது.
3. உற்பத்திச் சாத்தியக்கோடு: புறங்குவிந்த உற்பத்திச் சாத்தியக் கோட்டினைப் பயன்படுத்தி விளக்குவது இக்கோட்பாட்டின் சிறப்பாகும்.

4. பொதுச் சமநிலை மாதிரி: வாய்ப்பு வழிச்செலவுக் கோட்பாடு பொதுச் சமநிலையை எளிமையாக விளக்குவதாக ரிச்சர்டு கேவ்ஸ் (Richard Caves) கருதுகின்றார்.

இத்தகைய சிறப்புக்களினால் வாய்ப்பு வழிச்செலவுக் கோட்பாடு மேலும் மேலும் செல்வாக்குப் பெற்றுத்திகழ்கின்றது.

குறிப்பு

## b).பணச் செலவின் அடிப்படையில் ஒப்பீட்டுச் செலவுக்கோட்பாடு (Theory of Comparative Costs in Terms of Money)

தொன்மைப் பொருளியலறிஞர்களின் ஒப்பீட்டுச் செலவுக் கோட்பாடு உழைப்புச் செலவு, பண்டமாற்று ஆகிய உண்மைக்குப் புறம்பான எடுகோள்களைச் சார்ந்து அமைந்தது. இந்த எடுகோள்களை நீக்கிவிட்டு, நடைமுறை உண்மைக்கேற்ப பணச்செலவின் அடிப்படையில் பன்னாட்டு வாணிபத்தை பேராசிரியர் டாசிக் விளக்குகின்றார். அவருடைய பகுத்தாய்வு கீழ்க்கண்ட எடுகோள்களைச் சார்ந்து அமைகின்றது.

**எடுகோள்கள்:**

1. அமெரிக்கா, ஜெர்மனி என்னும் இரு நாடுகள் உள்ளன.
2. அவை கோதுமை, துணி ஆகிய இரு பொருட்களை உற்பத்தி செய்கின்றன.
3. இரு நாடுகளிலும் குறிப்பிட்ட அளவுகளில் பணத்தில் கூலி கொடுக்கின்றனர்.
4. இரண்டு நாடுகளுக்கிடையிலும் பணவிலையில் முழுமையான வேறுபாடு உள்ளது.
5. இரு நாடுகளுக்கிடையிலும் அயல்நாட்டுச் செலுத்து நிலையில் சமன்பாடு இருக்கின்றது. இந்தச் சமன்பாடு பாதிக்கப்பட்டால் பற்றாக்குறை நாட்டிலிருந்து எச்சமுள்ள நாட்டிற்குச் செல்லும். இதனால் விலையும் பண வருவாயும் சமநிலை ஏற்படும் வரை மாறும்.

டாசிக்கின் எடுத்துக்காட்டை, மேலே கூறிய எடுகோள்களின் அடிப்படையில் விளக்கலாம். அமெரிக்காவில் 10 நாட்கள் உழைப்பில் 20 அலகு கோதுமையும், 20 அலகு துணியும் உற்பத்தியாகின்றது. ஜெர்மனி 10 நாள் உழைப்பில் 10 அலகு கோதுமையும், 15 அலகு துணியும் உற்பத்தி செய்கின்றது.

குறிப்பு

இந்த எடுத்துக்காட்டில், அமெரிக்காவிற்கு இருபொருள் உற்பத்தியிலும் முழு அளவில் நன்மை இருக்கின்றது. ஆனால் ஜெர்மனிக்கு ஒப்பீட்டு நிலையில் துணி உற்பத்தியில் நன்மை இருக்கின்றது. ஆதலால் அமெரிக்கா கோதுமை உற்பத்தியிலும் ஜெர்மனி துணி உற்பத்தியிலும் சிறப்பாக ஈடுபடலாம்.

தினக்கூலி ஒரு நாளைக்கு அமெரிக்காவில் 1.5 டாலர்; ஜெர்மனியில் 1 டாலர் எனக்கொண்டு, இந்த உண்மைச்செலவினை பணச்செலவில் மாற்றி அமைத்தால் ஏற்படும் நிலையினைக் கீழ்க்கண்ட அட்டவணை காட்டுகின்றது.

| **நாடு** | **தினக்கூலி (டாலரில்)** | **10 நாட்களுக்கு மொத்தக்கூலி (டாலரில்)** | **10 நாட்களில் மொத்த உற்பத்தி (அலகுகள்)** | **ஓர் அலகு உற்பத்திக்குப் பணச்செலவு (டா)** |
|---|---|---|---|---|
| அமெரிக்கா | 1.5 | 15 | கோதுமை 20 | 0.75 |
| | 1.5 | 15 | துணி 20 | 0.75 |
| ஜெர்மனி | 1.0 | 10 | கோதுமை 10 | 1.00 |
| | 1.0 | 10 | துணி 15 | 0.66 |

**அட்டவணை 1**

அட்டவணையிலிருந்து அமெரிக்காவில் கோதுமை உற்பத்திச் செலவு ஜெர்மனியைவிடக் குறைவாக, அதாவது ஓர் அலகிற்கு 0.75 டாலராக இருக்கின்றது. ஜெர்மனியில் துணி உற்பத்திச்செலவு அமெரிக்காவை விடக்குறைவாக, அதாவது 0.66 டாலராக உள்ளது. ஆதலால் அமெரிக்கா கோதுமையையும், ஜெர்மனி துணியையும் உற்பத்தி செய்து ஏற்றுமதி செய்து, ஒப்பீட்டுச் செலவின் அடிப்படையில் இரு நாடுகளுக்கும் நன்மை பயப்பதாக இருக்கும்.

### இரு பொருட்களுக்கு மேற்பட்ட வாணிபத்தில் ஒப்பீட்டுச் செலவு

இரு நாடுகளுக்கிடையில் இரு பொருட்களில் மட்டும் வாணிபம் நடைபெறுகின்றதென்ற எடுகோளின் அடிப்படையில் ரிக்கார்டோவின் ஒப்பீட்டுச் செலவுக்கோட்பாடு அமைந்துள்ளது. ஆனால் நடைமுறையில் பல பொருட்களில்

வாணிபம் நடைபெறுகின்றது. ஆதலால் பேராசிரியர் ஹேபர்லர், இரண்டு பொருட்களுக்கு மேல் பன்னாட்டு வாணிபம் நடைபெறுகின்ற பொழுது ஒப்பீட்டுச் செலவின் அடிப்படையில் எப்படி நடைபெற முடியுமென்பதைக் கூறுகின்றனர்.

குறிப்பு

ஹேபர்லர் தனது கோட்பாட்டில் விளக்குகின்றார். ஒரு நாடு தான் ஏற்றுமதி செய்யும் எல்லாப் பொருட்களிலும் மற்றைய நாட்டிலிருந்து இறக்குமதி செய்யும் பொருட்களோடு ஒப்பிடுகையில் மிகுதியாக ஒப்பீட்டுச் செலவு நன்மை பெறும். இது மற்றைய நாட்டிற்கும் பொருந்தும்.

இரண்டு நாடுகள் ஒப்பீட்டு நன்மையின் அடிப்படையில் என்னென்ன பொருட்களை ஏற்றுமதி செய்யும்; எவற்றை இறக்குமதி செய்யும் என்பதை, கூலி விகிதம், மாற்றுவிகிதம் ஆகிய இரண்டு முக்கிய மாறிகள் தான் தீர்மானிக்கின்றனவென்பதை ஹேபர்லர் தனது கோட்பா்டடின் மூலம் காட்டுகின்றார். இதனால் மொத்த உற்பத்தி கூடும். இரண்டு நாடுகளுக்கிடையில் ஆதாயம் எப்படி பகிர்நதளிக்கப்படுமென்பதை அவற்றின் ஏற்றுமதி இறக்குமதிப் பொருட்களுக்கிடையில் உள்ள பகுப்பு நிலை காட்டும்.

**இரண்டு பொருட்கள் பல நாடுகளுக்கிடையில் வாணிபம்:-**

ஒப்பீட்டுச் செலவுக் கோட்பாடு இரு நாடுகளுக்கிடையில் மட்டும் வாணிபம் நடைபெறுகின்றதென்ற உண்மைக்குப் புறம்பான எடுகோளின் மீது அமைந்துள்ளது. ஆதலால் பல நாடுகளுக்கிடையில் வாணிபம் எப்படி ஒப்பீட்டுச் செலவின் அடிப்படையில் அமைகின்றதென்பதை ஓர் எடுத்துக்காட்டின் மூலம் காட்டலாம்.

A,B,C என்னும் மூன்று நாடுகளுக்கிடையில் X,Y என்னும் இரு பொருட்களில் வாணிபம் நடைபெறுவதாக வைத்துக்கொள்வோம். அவற்றின் உற்பத்திச் செலவு நிலைகளைக் கீழ்க்கண்ட அட்டவணை காட்டுகின்றது.

ஓரலகு X,Y பொருளை உற்பத்தி செய்யத் தேவையான உழைப்பு நேரம் (மணிகள்)

| பொருட்கள் | நாடுகள் | | |
|---|---|---|---|
| | A | B | C |
| X | 15 | 15 | 15 |

| | | | |
|---|---|---|---|
| Y | 30 | 45 | 35 |
| ஒப்பீட்டுச் செலவு விகிதம் | 1:2 | 1:3 | 1:2.33 |

**அட்டவணை 2**

குறிப்பு

முதலில் A,B ஆகிய இரண்டு நாடுகளையும் ஒப்பிட்டுப் பார்க்கலாம். A நாடு Y பொருள் உற்பத்தியில் ஒப்பீட்டு நன்மை பெறுகின்றது. B நாடு X பொருள் உற்பத்தியில் குறைந்த அளவில் ஒப்பீட்டுத் தீமை அடைகின்றது. ஆதலால் A நாடு Y பொருளை B நாட்டிற்கு ஏற்றுமதி செய்து விட்டு, அதனிடமிருந்து X பொருளை இறக்குமதி செய்யும்.

C நாட்டைப் பொறுத்தவரை Y பொருள் உற்பத்தியில் B நாட்டைவிட ஒப்பீட்டு நன்மை பெறுகின்றது. ஆகையால் அது B நாட்டிற்கு Y பொருளை ஏற்றுமதி செய்துவிட்டு X பொருளை அதனிடமிருந்து இறக்குமதி செய்யும்.

A,C ஆகிய இரு நாடுகளையும் ஒப்பிட்டால், A நாடு Y பொருள் உற்பத்தியில் ஒப்பீட்டு நன்மை பெறுகின்றது. ஆகையால் Y பொருளை C நாட்டிற்கு ஏற்றுமதி செய்துவிட்டு X பொருளை அதனிடமிருந்து இறக்குமதி செய்யும்.

இந்த மூன்று நாடுகளுக்கிடையிலும் உள்ள வாணிபத் தொடர்பினை முக்கோண வரைபடம் விளக்குகின்றது.

1. A நாடு B,C ஆகிய இருநாடுகளுக்கு Y பொருளை ஏற்றுமதி செய்யும். அவற்றிடமிருந்து X பொருளை இறக்குமதி செய்யும்.
2. B நாடு X பொருளை A,C ஆகிய இரு நாடுகளையும் ஏற்றுமதி செய்து விட்டு அவற்றிடமிருந்து Y பொருளை இறக்குமதி செய்யும்.



**படம் 1.6**





3. C நாட்டைப்பொறுத்தவரை அதற்கு மூன்று வகையான வாய்ப்புகள் உள்ளன. (i) அது Y பொருளை உற்பத்தி செய்து B நாட்டிற்கு அனுப்பிவிட்டு X பொருளைப் பெற்றுக்கொள்ளலாம். (ii) X பொருளை உற்பத்தி செய்து A நாட்டிற்கு ஏற்றுமதி செய்து விட்டு அதனிடமிருந்து Y பொருளை இறக்குமதி செய்து கொள்ளலாம். (iii) இரண்டில் எந்தப் பொருளிலும் வாணிபம் செய்யாமல் சொந்தத் தேவைக்கு மட்டும் உற்பத்தி செய்து கொள்ளலாம்.

**பல நாடுகள் பல பொருட்களுக்கிடையில் வாணிபம்**

முந்திய பகுத்தாய்வு முறையைப் பயன்படுத்தி பல நாடுகளுக்கிடையில் பல பொருட்களுக்கிடையில் எப்படி வாணிபம் நடைபெறுமென்பதை விளக்கலாம். இதனை கணக்கின் துணையால் விளக்கினால் மிகவும் சிக்கலாகி விடும். ஆனால் எளிமைப்படுத்தி விளக்கலாம்.

A,B,C,D என்று நான்கு நாடுகள், W,X,Y,Z என்னும் நான்கு பொருட்களை உற்பத்தி செய்வதாகக் கொள்வோம். அவற்றின் உற்பத்திச் செலவு நிலைகளைக் கீழ்க்கண்ட அட்டவணை காட்டுகின்றது.

ஒவ்வொரு பொருளின் ஓரலகை உற்பத்தி செய்யத் தேவையான உழைப்பு நேரம

| .பொருள் | நாடுகள் | | | |
|---|---|---|---|---|
| | **A** | **B** | **C** | **D** |
| W | 30 | 40 | 45 | 50 |
| X | 30 | 25 | 35 | 40 |
| Y | 30 | 45 | 20 | 25 |
| Z | 30 | 50 | 32 | 15 |

**அட்டவணை 3**

அட்டவணையிலிருந்து, உற்பத்திச் செலவு குறைவாக எந்தெந்த நாட்டில் என்னென்ன பொருளுக்கு இருக்கின்றதென்பதை ஒப்பிட்டு அறியலாம். அதன்படி

A நாடு W பொருளையும், B நாடு X பொருளையும், C நாடு Y பொருளையும், D நாடு Z பொருளையும் சிறப்பாக உற்பத்தி செய்யும்.

குறிப்பு




**படம் 1.7**

ஏற்றுமதி எப்படி நடைபெறுமென்பதை வரைபடம் 1.6 விளக்குகின்றது. இதில் அம்புக்குறி ஏற்றுமதியின் போக்கினைக் காட்டுகின்றது. A நாடு W பொருளை B நாட்டிற்கும், B நாடு X பொருளை C நாட்டிற்கும், C நாடு Y பொருளை D நாட்டிற்கும், D நாடு Z பொருளை A நாட்டிற்கும் ஏற்றுமதி செய்யும். ஒவ்வொரு நாடும் ஏற்றுமதி செய்யும் நாட்டிலிருந்து இறக்குமதி செய்யும் பணத்தை வைத்து வேறு நாட்டிலிருந்து இறக்குமதி செய்துகொள்ளும். ஒவ்வொரு நாடடின் மொத்த ஏற்றுமதியும் மொத்த இறக்குமதியும் சமமாக இருக்கும். இறுதியில் உலக வாணிபம் சமப்படுத்தப்படும்.

**ஒப்பீட்டுச் செலவுக் கோட்பாட்டில் போக்குவரத்துச் செலவு**

தொன்மைப் பொருளியலறிஞர்களின் ஒப்பீட்டுச் செலவுக்கோட்பாடு போக்குவரத்துச் செலவு இல்லை என்ற உண்மையற்ற எடுகோளைச் சார்ந்த அமைகின்றது. போக்குவரத்துச் செலவைச் சேர்த்துக் கொள்கின்றபொழுது, இரு நாடுகளுக்கிடையில் ஒரு பொருளின் விலை வேறுபாடு போக்குவரத்துச் செலவையும் விடக்கூடுதலாக இருந்தால் தான் அவற்றிற்கிடையில் வாணிபம் நடைபெறும்.

போக்குவரத்துச் செலவின் நேரடி விளைவினை வரைபடம் 1.8 விளக்குகின்றது. ஜெர்மனி, அமெரிக்கா ஆகிய இரு நாடுகளுக்கிடையில் துணி என்னும் ஒரு பொருளில் மட்டும் வாணிபம்




**படம் 1.8**

நடைபெறுவதாகக் கொள்வோம். அமெரிக்கா துணியை ஏற்றுமதி செய்கின்றது. ஜெர்மனி துணியை இறக்குமதி செய்கின்றது. துணியின் விலையை பொது செங்குத்துக் கோட்டில் O அளிக்கின்றோம். துணியின் உற்பத்தி, தேவை அளவினை ஏற்றுமதி செய்யும் அமெரிக்காவிற்கு O விற்கு வலது பக்கக் (X) கோட்டிலும்; இறக்குமதி செய்யும் ஜெர்மனிக்கு (m) இடது பக்கக் கோட்டிலும் அளக்கின்றோம். இரண்டு நாடுகளின் தேவைக் கோட்டை D அளிப்புக்கோட்டை Sம் குறிக்கின்றன.

வாணிபத்திற்க்கு முன்னால் இரண்டு நாடுகளும் அவற்றின் தேவை அளிப்புக் கோடுகள் நிர்ணயிக்கும் விலைக்கேற்ப உற்பத்தி செய்யும். இது ஜெர்மனியில் Em அளவாகவும்; அமெரிக்காவில் Ex அளவாகவும் இருக்கும். இரு நாடுகளுக்கிடையிலும் வாணிபத் தொடர்பு ஏற்பட்டவுடன், இறக்குமதி செய்யும் ஜெர்மனியில் விலை குறையும்; ஏற்றுமதி செய்யும் அமெரிக்காவில் விலைகூடும். இப்பொழு விலை OP ஆக இருக்கும். இது PP படுக்கைக் கோட்டில் பிரதிபலிக்கின்றது. இந்தக்கோடு ஜெர்மனியில் $D_1S$ வளைகோடுகளை G மற்றும் $G_1$ புள்ளிகளிலும் அமெரிக்காவில் A மற்றும் $A_1$ புள்ளிகளிலும் வெட்டுகின்றது. அமெரிக்கா OsX அளவு உற்பத்தி செய்து OdX அளவுப் பொருளை

நுகர்கின்றது. dxsX ஏற்றுமதி செய்கின்றது. ஜெர்மனி OSm அளவு உற்பத்தி செய்து, Sm,dm அளவு இறக்குமதி செய்து, Odm அளவுப் பொருளை நுகர்கின்றது.

குறிப்பு

இப்பொழுது போக்குவரத்துச் செலவைச் சேர்த்துக் கொள்வோம். இது அமொக்காவிற்கு விலையில் குறைப்பதைப் போன்றது. இதனால் இரண்டு நாடுகளின் தேவை, அளிப்புக்கோடுகளில் மாற்றம் ஏற்படுகின்றது. அமெரிக்காவில் விலை OP யிலிருந்து $OP_1$ ஆகக்குறைகின்றது. இருநாடுகளின் விலை வேறுபாடு போக்குவரத்துச் செலவுக்குச் சமமாக இருக்கும். இப்பொழுது அமெரிக்கா துணி விலைகுறைப்பின் காரணமாக OSx அளவு உற்பத்தி செய்யும். இது முன்பு உற்பத்தி செய்ததைவிட அதிகமாகும். இது $OSX_1$ துணி உற்பத்தி செய்துவிட்டு $Odx_1$ துணியை நுகரும். $dx_1$,$Sx_1$ அளவுத் துணியை ஏற்றுமதி செய்யும்.

இறக்குமதி செய்யும் ஜெர்மனியில் $P_1P_1$ விலைக்கோடு புதிய தேவை, அளிப்புக்கோடுகளை $G_2$ $G_3$ புள்ளிகளில் வெட்டிச் செல்கின்றது. துணிவிலை கூடுவதன் காரணமாக, உற்பத்தி OSm லிருந்து $OSm_1$ ஆகக் கூடுகின்றது. நுகர்வு Odm லிருந்து $Odm_1$ ஆகக் குறைகின்றது. இறக்குமதியும் dm,sm லிருந்து $dm_1$ sm ஆகக் குறைகின்றது. அமெரிக்கா ஏற்றுமதி ஜெர்மனியின் இறக்குமதி அளவிற்குச் சமமாக இருக்கும்.

போக்குவரத்துச் செலவினால் உற்பத்தியும், வாணிப அளவும் குறைகின்றன; வாணிப ஆதாயமும் குறைகின்றது.

**மாறுகின்ற உற்பத்திச் செலவில் ஒப்பீட்டுச் செலவுக்கோட்பாடு**

தொன்மைப் பொருளியலறிஞர்களின் ஒப்பீட்டுச் செலவுக்கோட்பாடு நடைமுறை உண்மைக்குப் புறம்பான மாறாத செலவு (மாறாத விளைவு) விதியின் அடிப்படையில் அமைந்துள்ளது. ஆனால் நடைமுறையில் வளர்ந்துசெல் செலவு விதியும், குறைந்து செல்செலவு விதியும் செயல்படுவதால், அத்தகைய உற்பத்திச் செலவு நிலைகளில் எப்படி பன்னாட்டு வாணிபம் நடைபெறும் என்பதை விளக்கலாம்.

**வளர்ந்து செல்செலவு விதி**: ஹேர்பலர் அவரது வாய்ப்பு வழிச்செலவுக் கோட்பாட்டின் மூலம் வளர்ந்து செல்செலவு விதியின் பன்னாட்டு வாணிபம் எப்படி நடைபெறுமென்பதை விளக்குகின்றார். மாறுகின்ற செலவு நிலைகளில் இரண்டு

நாடுகளுக்கிடையில் வாணிபம் உற்பத்திச் செலவுகளின் வேறுபாட்டால் மட்டுமல்ல தேவையின் அளவுகளை ஒட்டியும் நிர்ணயிக்கப்பெறுகின்றது.

இரண்டு நாடுகள் கோதுமையிலும் துணியிலும் வாணிபம் செய்தால், ஒவ்வொரு நாடு சிறப்பாக ஏதாவது ஒரு பொருள் உற்பத்தியில் கவனம் செலுத்தினாலும் இரண்டு பொருட்களையும் தொடர்ந்து உற்பத்தி செய்து கொண்டிருக்கும். இரண்டு நாடுகளும் வாணிப நிலைக்கு முன்பு இருந்ததை விட வாணிபத்திற்குப்பின் இரண்டு பொருட்களையும் மிகுதியாக நுகரும். இருந்தாலும் வளர்ந்து செல்செலவு விதி நிலையில் முழுமையற்ற சிறப்புத் தேர்ச்சிதான் ஏற்படும். இதனால் வாணிபத்தில் கிடைக்கின்ற ஆதாயம் முழுமையான சிறப்புத் தேர்ச்சியில் கிடைப்பதைவிடக் குறைவாக இருக்கும்.

குறிப்பு

குறைந்துசெல் செலவு விதியில்: பிராங்க் கிரகாம் (Frank Graham) குறைந்து செல்செலவு விதியில் எப்படி வாணிபம் நடைபெறுமென்பதை விளக்குகின்றார். குறைந்துசெல் செலவு விதியில் உற்பத்தி நடைபெறுகின்ற பொழுது, சிறப்பாக ஒரு பொருள் உற்பத்தியில் கவனம் செலுத்துகின்ற பொழுது இரண்டு நாடுகளின் உற்பத்தி அளவும் கூடுமென்ற தொன்மைப் பொருளியலறிஞர்களின் கருத்தை மறுக்கின்றார். கணிதத்தைப் பயன்படுத்தி, இரண்டு நாடுகளும் சிறப்புத் தேர்ச்சியில் ஈடுபடுவதால் மொத்த உற்பத்தி வாணிபம் செய்யும் இரண்டில் ஒருநாட்டில் குறிப்பிடத்தக்க அளவில் குறையுமென்று கூறுகின்றார். இதனால், குறைந்து செல் செலவு விதியில் செயல்படும் தொழிலை காப்புவரிகளின் மூலம் பாதுகாக்க வேண்டிய அவசியத்தைக் கூறுகின்றார்.

### பன்னாட்டு வாணிபத்தின் தற்காலக் கோட்பாடு (The modern theory of international trade)

### (பொதுச் சமநிலைக் கோட்பாடு –General Equilibrium Theory)

பன்னாட்டு வாணிபம் பற்றியத் தொன்மைக் (ஒப்பீட்டுச் செலவுக்) கோட்பாடு ஏன் ஒரு நாடு ஒரு பொருள் உற்பத்தியில் தேர்ச்சி பெறகின்றதென்பதையும், வாணிப வீதம் எப்படி நிர்ணயிக்கப்படுகின்றதென்பதையும் விளக்க முயன்றது. ஆனால் அது கொண்ட உண்மைக்குப் புறம்பான எடுகோள்களின் காரணமாகவும், உழைப்புச்செலவுக் கோட்பாட்டின் காரணமாகவும் நடைமுறைக்கு ஏற்றதாக இல்லாமல் போய்விட்டது. அதனை மாற்றி, செப்பனிட மேற்கொண்ட முயற்சிகளும் வெற்றி பெறவில்லை. ஆதலால் தொன்மைக் கோட்பாட்டின்

குறைகளற்ற, நடைமுறைக்குப் பொருத்தமான, நேரடியான ஒரு கோட்பாடு தேவைப்பெற்றது.

குறிப்பு

ஸ்வீடன் நாட்டுப் பொருளியலறிஞரான எலிஹெக்ஷர் (Eli Heckscher) 1919-இல் எழுதிய ஒரு கட்டுரையில் புதிய கோட்பாட்டிற்கான கருத்துக்களை வழங்கியிருந்தார். இவற்றின் அடிப்படையில் பெர்டில் ஓலின் (Bertil Ohlin) ஒரு முழுமையான புதிய பொதுச் சமநிலைக் கோட்பாட்டை (General EQuilibrium Theory) 1933இல் அவரது "பலபிரதேச பன்னாட்டு வாணிபம்" (Interregional and International Trade) என்னும் நூலில் வெளியிட்டார். அதனை வைனர் (Winer), ஹெர்பலர் (Heberler), வால்ராஸ் (Walres), பெரட்டோ (Paretol) போன்றோர் மேலும் வளமாக்கியுள்ளார்.

**ஹெக்ஷர்-ஓலின் கோட்பாடு** : உற்பத்திக் காரணிகளின் அளிப்புகள் தராதர (Relative) நிலையில் கிடைப்பதுதான் உற்பத்தி அமைப்பு, சிறப்புபத் தேர்ச்சி, வட்டாரங்களுக்கிடையில் வாணிபம் ஆகியவற்றை நிர்ணயிக்கின்றதென்று ஹெக்ஷர்-ஓலின் கோட்பாடு கூறுகின்றது. வட்டாரங்கள் (நாடுகள்) வேறுபட்ட நிலையில் உற்பத்திக் காரணிகளின் அளிப்பைப் பெற்றிருக்கின்றன.

சில நாடுகளில் மூலதனம் அதிகமாக இருக்கின்றது. சில நாடுகளில் உழைப்பு மிகுதியாகக் கிடைக்கின்றது. மூலதனத்தை அதிகமாகப் பெற்றிருக்கும் நாடுகள் மூலதனச் செறிவுள்ள பொருட்களை உற்பத்தி செய்து ஏற்றுமதி செய்யும். உழைப்பை மிகுதியாகப் பெற்றிருக்கும் நாடு உழைப்புச் செறிவுள்ள பொருட்களை உற்பத்தி செய்து ஏற்றுமதி செய்யும். சில நாடுகளிலிருந்து சில பொருட்களை மிகவும் மலிவான விலைக்கு வாங்க முடியும். அவற்றை உள்நாட்டில் உற்பத்தி செய்ய வேண்டுமானால் செலவு அதிகமாகும். இதனை ஓலின், "பன்னாட்டு வாணிபத்திற்கான உடனடிக்காரணத்தை விலை வேறுபாடுகளில்தான் காணவேண்டும். வேறு சொற்களில் கூறினால், பல பிரதேச (அதாவது பன்னாட்டு) வாணிபம் ஒரு விலை பற்றிய நிகழ்ச்சியாகும்," என்கின்றார்.

**எடுகோள்கள்:** ஹெக்ஷர்-ஓலின் கோட்பாடு கீழ்க்கண்ட எடுகோள்களின் அடிப்படையில் உருவாக்கப்பெற்றுள்ளது.

1. இது ஓர் 'இரட்டை (Double) மாதிரி முறையாகும். இதில் இரண்டு நாடுகள்; இரண்டு பொருட்கள்; உழைப்பு, முதல் ஆகிய இரண்டு உற்பத்திக் காரணிகள் இருப்பதாகக் கருதுகின்றோம்.

குறிப்பு

2. இரண்டு நாடுகளிலும் (உழைப்பு, முதல் ஆகிய) இரண்டு உற்பத்திக் காரணிகளின் தராதர அளிப்பில் ஏற்றத்தாழ்வு இருக்கும். அளவின் அடிப்படையில் இரண்டு உற்பத்திக் காரணிகளின் அளிப்பில் வேறுபாடு இருக்கும். ஆனால் தரத்தில் அவற்றிற்கிடையில் வேறுபாடு இருக்காது.
3. உற்பத்திக் காரணிகள் உள்நாட்டிற்குள் தாராளமாக இடம்பெயரும். ஆனால் அவை நாடுகளுக்கிடையில் இடம்பெயர்ந்து செல்லாது.
4. உற்பத்திக் காரணிகள் அங்காடியிலும், பொருட்கள் அங்காடியிலும் நிறைவுப்போட்டி நிலவுகின்றது.
5. வளங்களை முழுமையாகப் பயன்படுத்துகின்றனர்.
6. இரண்டு பொருட்களின் உற்பத்திச் சார்புகள் வேறுபட்ட காரணிகளின் செறிவு நிலையில் இருக்கும். அதாவது உழைப்புச் செறிவுடையதாகவும், மூலதனச் செறிவுடையதாகவும் இருக்கும்.
7. உற்பத்திச் சார்புகள் வேறுபட்ட பொருட்களுக்கு வேறுபட்டிருக்கும். ஆனால் இரண்டு நாடுகளிலும் ஒவ்வொரு பொருள்கும் ஒன்று போலிருக்கும்.
8. உற்பத்திக் காரணிகளின் செறிவு நிலைகளை மாற்ற முடியாது.
9. போக்குவரத்துச் செலவு இல்லை.
10. இரண்டு நாடுகளுக்கிடையிலும் கட்டுப்படுத்தப்பெறாத, சுதந்திர வாணிபம் நடைபெறும்.
11. ஒவ்வொரு பிரதேசத்திலும் உற்பத்தி செய்யும் ஒவ்வொரு பொருளிலும் மாறாத விளைவு அளவுகள் இருக்கும்.
12. இரண்டு நாடுகளிலும் நுகர்வோரின் விருப்பங்களும், அவற்றின் தேவையின் அமைப்பும் ஒன்று போலிருக்கும்.
13. தொழில்நுட்ப அறிவில் மாற்றமிருக்காது.

மேலே குறிப்பிடப்பெற்ற எடுக்கோள்களின் அடிப்படையில் ஹெக்ஷரும் ஓலினும் அவர்களது கோட்பாட்டை விளக்குகின்றனர். இரண்டு நாடுகளுக்குமிடையில் உற்பத்திக் காரணிகளின் அளிப்பில் வேறுபாடு இருக்கின்றது. இதனால் உற்பத்திக் காரணிகளின் தராதரத்; தேவை, அளிப்பில் வேறுபாடு தோன்றுகின்றது. இதன்விளைவாக பொருட்களின் தராதர விலையில் வேறுபாடு வருகின்றது. இதுன் பன்னாட்டு வாணிபத்திற்கு உடனடிக் காரணமாகும். இரண்டு பிரதேசங்களுக்கிடையில் வாணிபம் நடைபெற வேண்டுமென்றால், உற்பத்திக் காரணிகளில் தராதரப் பற்றாக்குறை, அதாவது தேவையோடு ஒப்பிடும்பொழுது பற்றாக்குறையான அளிப்பு இருக்கும். பற்றாக்குறையான காரணிகளைப் பயன்படுத்தி உற்பத்தி செய்யும் பொருட்களின் விலை அதிகமாக

குறிப்பு

இருக்கும். ஆதலால் அவற்றை இறக்குமதி செய்வது ஆதாயமாக இருக்கும். ஏராளமாகக் கிடைக்கும் காரணிகளைக் கொண்டு உற்பத்தி செய்யும் பொருட்கள் மலிவாக இருக்குமாதலால் அவற்றை ஏற்றுமதி செய்யலாம்.

இரண்டு வகையான இலக்கணங்களின் மூலம் ஹெக்ஷர் ஓலின் கோட்பாட்டை விளக்கலாம். (1) விலையின் அடிப்படையை தேர்வு முறையாகக் கொண்டு உற்பத்திக் காரணி ஏராளமாக (அல்லது பற்றாக்குறையாக) இருப்பதனை விளக்குதல்; (2) பருப்பொருள் (Physical) அளவைத் தேர்வுமுறையாகக் கொண்டு உற்பத்திக் காரணி ஏராளமாக (அல்லது பற்றாக்குறையாக) இருப்பதனை விளக்குதல். இந்த இரண்டு முறைகளையும் ஒன்றன்பின் ஒன்றாக ஆராயலாம்.

(i) காரணிகளின் விலை அடிப்படையில் காரணிகள் ஏராளமாக இருத்தல்: ஒருநாடு ஓர் உற்பத்திக் காரணியை வளமாகப் பெற்றிருப்பதை உற்பத்தி விலையின் அடிப்படையில் விளக்கலாம். A நாட்டில் மூலதனம் ஏராளமாகவும், B நாட்டில் உழைப்பு மிகுதியாகவும் இருக்கின்றன. இதனால் A நாட்டில் மூலதனம் மலிவாகவும், B நாட்டில் உழைப்பு மலிவாகவும் உள்ளன. ஆதலால் A மூலதனச் செறிவுடைய பொருளையும், B உழைப்புச் செறிவுடைய பொருளையும் ஏற்றுமதி செய்கின்றன. இதனைப் படம் 1.9 விளக்குகின்றது.




**படம் 1.9**

வரைபடத்தில் உழைப்புச் செறிவுடைய பொருட்களை X படுக்கை அச்சிலும், மூலதனச் செறிவுடைய பொருட்களை Y செங்குத்து அச்சிலும்

குறிக்கின்றோம். xx சம அளவு வளைகோடு X பொருளையும் லல சமநோக்கு வளைகோடு Y பொருளையும் குறிக்கின்றன. A நாட்டில் இரு காரணிகளின் விலை சார்பு நிலையை $AA^1$ கோடு காட்டுகின்றது. E புள்ளியில் ஓரளவு Y பொருளை உற்பத்தி செய்ய OC அளவு மூலதனமும் OD அளவு உழைப்பும் தேவைப்படுகின்றன. இந்தப் புள்ளியில்தான் சம அளவுச் செலவுக் கோடும் $AA^1$ சம உற்பத்தி அளவுக் கோடும், சமமாக இருக்கின்றன.

இதே ஆய்வு முறையின் அடிப்படையில் பார்த்தால் ஓரலகு X பெருளை A நாட்டில் உற்பத்தி செய் OM அளவு மூலதனமும், ON அளவு உழைப்பும் தேவைப்படுகின்றன. A நாட்டில் மூலதனம் மிகுதியாகவும், மலிவாகவும் கிடைப்பதால், அது மூலதனச் செறிவுடைய Y பொருள் உற்பத்தியில் சிறப்பாக்க கவனம் செலுத்தும். அதனை B நாட்டிற்கு ஏற்றுமதி செய்யும்.

B நாட்டில் உழைப்பு ஏராளமாகவும், மலிவாகவும் கிடைக்கின்றது. அதனுடைய உற்பத்திக் காரணி விலைக்கோடு $BB^1$ yy சம அளவு வளைகோட்டிற்குத் தொடு புள்ளியாக –சிறிது தட்டையாக- இருக்கின்றபொழுது B நாடு G புள்ளியில் இருக்கும். ஓரலகு Y பொருளை உற்பத்தி செய்ய முழு அளவு மூலதனமும் OH அளவு உழைப்பும் தேவைப்படும். அதே போன்ற உற்பத்திக் காரணி விலைக்கோடு $BB_1$ க்கு இணைாக, xx சம அளவு வளைகோட்டிற்கு S புள்ளியில் தொடு கோடாக ஓர் உற்பத்திக்காரணி வளை கோட்டினை $B_1B_2$ வரைகின்றோம். ஓரலகு X பொருளை உற்பத்தி செய்ய OR அளவு உழைப்பும்; OT அளவு மூலதனமும் வேண்டும். B நாட்டில் உழைப்பு மலிவாகக் கிடைப்பதால் அது Y பொருள் உற்பத்தியில் சிறப்புத் தேர்ச்சி பெற்ற அதனை ஏற்றுமதி செய்யும்.

(ii) பருப்பொருள் அடிப்படையில் (Physical /Terms) உற்பததிக்காரணி மிகுதியாக இருத்தல்: A நாட்டில் ஒப்பீட்டு அளவில் மூலதனம் மிகுதியாகவும் B நாட்டில் ஒப்பீட்டு அளவில் உழைப்பு மிகுதியாகவும் இருப்பதாகக்கொள்வோம். இதனை வரைபடம் 1.10 விளக்குகின்றது.

குறிப்பு




படம் 1.10

A நாட்டின் உற்பத்திச் சாத்திய வளைகோடு $AA_1$ ஆகவும், B நாட்டின் உற்பத்திச் சாத்திய வளைகோடு $BB_1$ ஆகவும் இருக்கின்றன. இரண்டு நாடுகளும் இரு பொருட்களையும் உற்பத்தி செய்தால் அவை OR கோட்டின் வழியில் உற்பத்தி செய்யும். A நாடு E புள்ளியிலும் B நாடு F புள்ளியிலும் உற்பத்தி அளவுகளை அமைத்துக்கொள்ளும். இந்நிலைகளில் A நாடு அங்கு மலிவாக இருக்கும் Y பொருளிலும், B நாடு அங்கு மலிவாக இருக்கும் X பொருளிலும் கவனம் செலுத்தும். இதனை A நாட்டின் விலைக்கோட்டையும் ST, B நாட்டின் விலைக்கோட்டையும் KR வரைந்து நிரூபிக்கலாம். B நாட்டின் விலைக்கோட்டையும் வரைந்து நிரூபிக்கலாம். B நாட்டின் விலைக்கோடு சிறிது தட்டையாக இருப்பதனைக் கவனிக்கலாம்.

## 2.2 உங்கள் முன்னேற்றத்தை சரிபார்க்கும் வினாக்கள்

1. வாய்ப்புவழி செலவு கோட்பாடை பற்றி கூறுக?

2. மாற்றுவழி கோட்பாடின் இரு எடுகோள்கள் யாவை?

## 2.3 உங்கள் முன்னேற்றத்தை சரிபார்க்கும் பதில்கள்

1. வாய்ப்பு வழிச் செலவுக் கோட்பாட்டின்படி, ஒரு நாடு X அல்லது Y என்னும் பொருட்களில் எதனையும் உற்பத்தி செய்ய முடியுமென்றால், X என்ற பொருளின் வாய்ப்பு வழிச்செலவு, X என்ற பொருளை ஓர் அலகு கூடுதலாக உற்பத்தி செய்ய எவ்வளவு Y என்ற பொருளின் உற்பத்தியைக்

கைவிடவேண்டுமோ அந்த அளவின் மதிப்பாகும். இரண்டு பொருட்களின் மாற்று வீதத்தை அவற்றின் வாய்ப்பு வழிச்செலவுகளின் அடிப்படையில் கூறுகின்றோம்.

2. உழைப்புதான் ஒரேயொரு உற்பத்திக் காரணி; (2) உழைப்பு ஒரே வகையாக இருக்கின்றது; (3) உழைப்பினை எல்லாப் பொருட்களின் உற்பத்தியிலும் ஒரே விகிதத்தில் பயன்படுத்துகின்றோம், என்னும் எடுக்கோள்கின் அடிப்படையில் அமைந்துள்ளது.

குறிப்பு

## 2.4சுருக்கம்

ரிக்காடோ ஹெப்லர் மற்றும் ஒலின் கோட்பாடுகள் சில தொடர்பினை சிக்கலான நிகழ்ச்சிகளை மித மிஞ்சி எளிமையாக்கிறது. இக்கோட்பாடு பன்னாட்டு வாணிப தத்துவத்தின் சில அம்சங்களை முழுமையாக விளக்குவதில்லை என்று அண்மையில் குறைகூறப்பட்டுள்ளது இருந்த போதிலும் பன்னாட்டு சிறப்பு தேர்ச்சி வாணிபம் ஆகியவற்றின் அடிப்படையை பொருத்தமான முறையிலும் முக்கியமான வழியிலும் தெளிவாக இது விளக்குகிறது.

## 2.5முக்கிய வார்த்தைகள்

ஒப்பீட்டுச் செலவுக் கோட்பாடு, வளர்ந்து செல்செலவு விதி

## 2.6சுய மதிப்பீட்டு பயிற்சி வினாக்கள்

**குறுகிய வினாக்களுக்கு விடையளி.**

1. வாய்ப்புவழி செலவு கோட்பாடை பற்றி கூறுக?
2. மாற்றுவழி கோட்பாடின் இரு கோள்கள் யாவை?

**நெடு வினாக்களுக்கு விடையளி.**

1. பணச் செலவின் அடிப்படையில் ஒப்பீட்டுச் செலவுக்கோட்பாடு விவரி.
2. ஹெக்ஷர்-ஒலின் கோட்பாட்டினை விவரி.

## 2.7பரிந்துரைக்கப்படும் நூல்கள்

சூல்வட்டுர். D. (2007), பன்னாட்டுப் பொருளாதாரம், வைலீ இந்தியா, புது டெல்லி.

## அலகு – 3 வர்த்தக நிபந்தனை

குறிப்பு

**3.1. வர்த்தக நிபந்தனை**

**3.2. வர்த்தக நிபந்தனை கருத்துக்கள்**

**3.3. வர்த்தக விதிகளின் நிர்ணயம்**

**3.4. நிலையான மற்றும் மாறும் வர்த்தக ஆதாயங்கள்**

**3.5. விவசாயம் மற்றும் தொழில் இடையே வர்த்தக விதிமுறைகள்**

**3.6உங்கள் முன்னேற்றத்தை சரிபார்க்கும் வினாக்கள்**

**3.7உங்கள் முன்னேற்றத்தை சரிபார்க்கும் பதில்கள்**

**3.8. சுருக்கம்**

**3.9. முக்கிய வார்த்தைகள்**

**3.10. சுய மதிப்பீட்டு பயிற்சி வினாக்கள்**

**3.11. பரிந்துரைக்கப்படும் நூல்கள்**

### 3.1. வர்த்தக நிபந்தனை

**a).முன்னுரை**

பன்னாட்டு வாணிபத்தில் பங்கு பெறுகின்ற நாடுகள் எல்லாம் இலாபம் பெறுகின்றன. இலாபம் எல்லா நாடுகளுக்கும் ஒன்று போலக் கிடைப்பதில்லை. தொன்மைப் பொருளியலறிஞர்கள் வாணிபத்தின் அளவை ஒட்டி இலாபம் அமையுமென்று கருதினர். வாணிபம் பெருகப் பெருக இலாபமும் கூடுமென்று எண்ணப் பெற்றது. ஆனால் பின்னால் வாணிபத்தின் அளவை ஒட்டியல்ல. மாற்று வீதம் (Exchange Ratio) எந்த நாட்டிற்குச் சாதகமாக அமைகின்றதோ அந்த நாடே மிகுதியாக இலாபம் பெறுமென்று கருதினர். ஒப்பீட்டுச் செலவுக் கோட்பாடு இந்த மாற்றுவீதம் நிர்ணயமாகக் கூடிய குறைந்த அளவையும் உச்சவரம்பையும் குறிப்பிட்டது. பணப் பொருளாதாரத்தில் வாணிப வீதங்களிலிருந்து எந்த நாட்டிற்கு அதிக ஆதாயமென்பதை அறியலாம்.

### 3.2. வர்த்தக நிபந்தனை கருத்துக்கள்

**b).விளக்கம்:**

வாணிப வீதங்கள் (Terms of Trade) எந்த வீதத்தில் ஒரு குறிப்பிட்ட அளவு ஏற்றுமதிப் பொருட்கள் ஒரு குறிப்பிட்ட அளவு இறக்குமதிப் பொருட்களுக்கு மாற்றப் பெறுகின்றன என்பதைக் குறிக்கின்றன. இதனை, ஒரு நாடு தனது ஏற்றுமதிப் பொருட்களுக்கு செலுத்தும் விலைகளுக்கும் அது

இறக்குமதி செய்யும் பொருட்களுக்கும் செலுத்தும் விலைகளுக்கும் உள்ள தொடர்பினை இவை அளவிடுகின்றன என்று எல்ஸ்வொர்த் கூறுகின்றார்.

ஒரு நாட்டிற்கு பன்னாட்டு வாணிபத்தில் இருவகை விலைகள் இருக்கின்றன. ஒன்று இறக்குமதிப் பொருட்களுக்கு அது தரவேண்டிய உலக விலைகள் மற்றொன்று ஏற்றுமதிப் பொருட்களுக்குரிய உலக விலைகள், இரண்டுக்கும் உள்ள தொடர்பை வாணிப வீதங்களிலிருந்து தெரிந்து கொள்கின்றோம். வாணிப வீதத்தில் ஏற்படுகின்றன. மாற்றங்களுக்கும் ஒரு நாட்டின் பொருளாதார வாழ்விற்கும் நெருங்கிய தொடர்பு இருக்கின்றது.

குறிப்பு

## 3.3. வர்த்தக விதிகளின் நிர்ணயம்

**c).வாணிபத்தின் வீதங்களைக் கணக்கிடுதல்:**

ஏற்றுமதி இறக்குமதிப் பொருட்களுக்குரிய விலைகளிலிருந்து தொடர்பினைக் குறியீட்டு எண்களைக் கொண்டு கணக்கிடலாம். ஒரு குறிப்பிட்ட ஆண்டிலுள்ள வாணிப வீதங்களைக் கணக்கிட ஓர் அடிப்படை ஆண்டு முதல் ஏற்றுமதி இறக்குமதி விலைகள் ஏற்பட்டிருக்கும் மாற்றங்களைக் குறிக்கும் ஏற்றுமதி, இறக்குமதி விலைகளின் குறியீட்டெண்களைத் தயாரிக்க வேண்டும். பொதுவாக

$$\text{வாணிப வீதங்கள்} = \frac{\text{இறக்குமதிகளின் பண மதிப்பு}}{\text{ஏற்றுமதிகளின் பண மதிப்பு}}$$

கூறுவதுண்டு, குறியீட்டெண்களைப் பயன்படுத்தி வாணிப வீதங்களை கண்டறிய கீழ்க்கண்ட வாய்ப்பாடுப் பயன்படுத்தப் பெறுகின்றது.

குறிப்பிட்ட ஆண்டில் வாணிப வீதங்கள்

$$= \frac{\text{இறக்குமதிகளின் பண மதிப்பு}}{\text{ஏற்றுமதிகளின் பண மதிப்பு}} \times 100$$

எப்படி வாணிப வீதங்களைக் கணிப்பதென்பதை ஓர் எடுத்துக்காட்டின் மூலம் விளக்கலாம். இந்தியாவில் 1958 ஆம் ஆண்டை அடிப்படை ஆண்டாகக் கொண்டு கணக்கிட 1965 இல் இறக்குமதிப் பொருட்களின் விலைகளின் குறியீட்டெண் 146 ஆகவும் ஏற்றுமதி விலைகளின் குறியீட்டெண் 135 ஆகவும்

குறிப்பு

உயர்ந்துள்ளது. மேலே குறிப்பிட்ட வாய்ப்பாட்டைப் பயன்படுத்தி வாணிப வீதத்தை $\overline{x}$ 108 என்று கணக்கிடுகிறோம். இது இந்தியாவிற்குப் பாதகமான முறையில் வாணிப வீதம் மாறி இருப்பதைக் குறிக்கின்றது. குறியீட்டெண் 100 மதிப்புள்ள பொருட்களைப்பெற இந்திய 108 மதிப்புள்ள பொருட்களை ஏற்றுமதி செய்ய வேண்டும். வாணிப வீதக் குறியீட்டெண் 100க்கு மேலிருப்பது பாதக வாணிப நிலையையும் 100க்கு கீழிலிருப்பது சாதக வாணிப நிலையையும் குறிக்கின்றது.

“அடிப்படைக் காரணியான வாணிப வீதத்தை தேவை அளிப்பு சக்திகள் நிர்ணயிக்கின்றன. இவற்றை மொத்தமாக பரஸ்பரத் (Reciprocal) தேவை” என்று ஜே.எஸ்.மில் குறிப்பிடுகின்றார். ஒரு வெளிநாட்டிலுள்ள தேவையையும் ஒட்டி அமைகின்றது. வெளி நாட்டுப் பொருட்களுக்கு உள்நாட்டிலுள்ள தேவையை விட மிகுதியாக இருந்தால் வாணிப வீதம் பாதகமாக இருக்கும்.

பொதுவாக வாணிப வீதங்களை 1) நாட்டின் இறக்குமதிக்குரிய தேவை நெகிழ்ச்சி 2) அதனுடைய ஊற்றுமதிக்கு வெளி நாட்டிலுள்ள தேவை நெகிழ்ச்சி 3) ஏற்றுமதிக்குரிய அதன் அளிப்பு நெகிழ்ச்சி: 4) வெளி நாட்டின் அளிப்புக்குரிய தேவை நெகிழ்ச்சி ஆகிய காரணிகள் நிர்ணயிக்கின்றன.

**சாதக வாணிப வீதம்:** ஒரு நாட்டின வாணிப வீதத்திலிருந்து அந்த நாட்டிற்குப் பன்னாட்டு வாணிபத்தில் கிடைக்கின்ற ஆதாயத்தை அறிந்து கொள்ளலாம். கீழ்க்கண்ட சூழ்நிலைகளில் ஒரு நாட்டின் வாணிப வீதங்கள் சாதகமாக அமைகின்றனவென்று கூறலாம்.

1.இறக்குமதிப் பொருட்களின் குறியீட்டெண் ஏற்றுமதிப் பொருட்களின் குறியீட்டெண்ணைவிடக் குறைவாக இருந்தால் வாணிப வீதம் சாதகமாக இருக்கும். ஏனென்றால் குறைந்த அளவு ஏற்றுமதியின் மூலம் கூடிய அளவில் பொருட்களை இறக்குமதி செய்ய முடியும்.

2.வாணிபம் செய்யும் இரு நாடுகளில் எது சிறியதாக இருக்கின்றதோ, அதற்குச் சாதகமாகவே வாணிப மாற்று வீதம் அமையும் பெரிய நாட்டால் தனக்கு வேண்டிய எல்லா பொருட்களையும் சிறிய நாட்டிடமிருந்து இறக்குமதி செய்ய முடியாது ஆதலால் தானும் அந்தப் பொருளை உற்பத்தி செய்ய வேண்டும். ஆனால் மாற்று வீதம் பன்னாட்டு வாணிபம் இல்லாவிட்டால் உள்நாட்டில் என்ன வீதம் இருக்குமோ அதனை நெருங்கியே அமையும்.

சிறியநாடு தனக்குத் தேவையானதை எல்லாம் இறக்குமதி செய்யுமாதலால் மிகுந்த ஆதாயம் பெறும்.

3.எந்த நாடு மிகவும் முக்கியமான பொருளை ஏற்றுமதி செய்துவிட்டு முக்கியமில்லாத பொருளை இறக்குமதி செய்கிறதோ அதனுடைய வாணிப வீதும் சாதகமாக இருக்கும்.

குறிப்பு

4.இறக்குமதிப் பொருட்கள் மிகுந்த தேவை நெகிழ்ச்சி உடையனவாகவும், ஏற்றுமதிப் பொருட்கள் குறைந்த தேவை நெகிழ்ச்சி உடையனவாகவும் இருந்தால் வாணிப வீதம் சாதகாமாக அமையும்.

**II.வாணிப வீதத்தைப் பாதிக்கும் காரணிகள்( Determinants of Terms of Trade)**

ஒரு நாட்டின் வாணிப வீதத்தைப் பல்வேறு காரணிகள் பாதிக்கின்றன. அவற்றைத் தொகுத்துக் கூறலாம்.

1. பரிமாற்றத் தேவை (Reciprocal Demand): ஒரு நாட்டின் வாணிப வீதம் பரிமாற்றத் தேவையைச் சார்ந்து அமைகின்றது. மற்றைய நாட்டின் பொருளுக்கு ஒவ்வொரு நாட்டிலும் இருக்கும் தேவையின் பலத்தையும் நெகிழ்ச்சியையும் சார்ந்தே வாணிப வீதம் அமைகின்றது.

இந்தியா, பர்மா என்ற இரு நாடுகளுக்கிடையில் வாணிபம் நடைபெறுவதாகக் கொள்வோம். இந்தியா அரிசியையும், பர்மா ரப்பரையும் உற்பத்தி செய்கின்றன. பர்மாவின் ரப்பருக்கு இந்தியாவில் தேவை நெகிழ்ச்சியற்றதாக இருந்தால் ரப்பரின் விலை அரிசி விலையை விட அதிகமாகக் கூடும். வாணிப மாற்று வீதம் இந்தியாவுக்குப் பாதகமாகவும் பர்மாவுக்கு சாதரகமாகவும் மாறும். அதேபோல இந்தியாவின் அரிசிக்கு பர்மாவின் தேவை அதிகரித்தார் அரிசியின் விலை ரப்பரின் விலையைவிடக் கூடும். வாணிப வீதம் இந்தியாவுக்குச் சாதகமாகவும் பர்மாவுக்குப் பாதகமாகவும் மாறும்.

உண்மையான மாற்று வீதம் ஒவ்வொரு நாட்டின் தேவையின் நெகிழ்ச்சியை ஒட்டி அமையும். மிகவும் நெகிழ்ச்சியற்றதாக தேவை இருந்தால் வாணிப மாற்று வீதம் பாதகமாக இருக்கும். தேவை மிகவும் நெகிழ்ச்சியுடையதாக இருந்தால் வாணிப மாற்று வீதம் மிகவும் சாதகமாக இருக்கும்.

2.காரணிகள் கொடை அளிப்பில் மாற்றங்கள் (Change in Factor Endowment): ஒரு நாட்டின் உற்பத்திக் காரணிகளின் கொடை அளிப்பில்

குறிப்பு

ஏற்படும் மாற்றங்கள் அந்த நாட்டின் வாணிப வீதத்தைப் பாதிக்கின்றன. உற்பத்திக் காரணிகளின் அளிப்பில் ஏற்படும் மாற்றங்கள் ஏற்றுமதிகளைக் கூட்டவோ குறைக்கவோ செய்யலாம். வீதுங்களை மாற்றும் ஏற்றுமதி கூடுகின்றபொழுது வாணிப வீதம் சாதகமாகவும் குறைகின்றபொழுது வாணிப வீதம் பாதகமாவும் மாறும்.

3.தொழில் நுட்ப மாறுதல் (changes in Technology) தொழில் நுட்ப மாறுதல் வாணிப வீதத்தை மாற்றும். தொழில் நுட்ப மாற்றத்தால் ஏற்றுமதி கூடினால் வாணிப வீதம் சாதகமாகும். ஏற்றுமதி குறைந்தால் வாணிப வீதம் பாதகமாகும்.

**4.மக்களின் சுவையுணர்வில் மாற்றம் (Changes in Tastes):** மக்களின் சுவையுணர்வில் ஏற்படும் மாற்றங்கள் ஒரு நாட்டின் வாணிப வீதத்தை மாற்றுகின்றன. எடுத்துக்காட்டாக, இந்திய மக்கள் இலங்கையிலிருந்து இறக்குமதியான தேயிலைக்குப் பதிலாக உள்நாட்டுக் காபியை விரும்புகின்றார்களென்று வைத்துக்கொள்வோம். இதனால் இந்தியா குறைந்த அளவு காபியை ஏற்றுமதி செய்து குறைவான தேயிலையை இறக்குமதி செய்யும். இதனால் வாணிப மாற்று வீதம் இந்தியாவிற்குச் சாதகமாக மாறும்.

**5.பொருளாதார வளர்ச்சி:** ஒரு நாட்டில் பொருளாதார வளர்ச்சி ஏற்படுகின்றபொழுது அதனுடைய உற்பத்திதிறன் கூடுகின்றது. இதனால் வாணிப மாற்று வீதும் பாதிக்கப்படுகின்றது. மொத்த உற்பத்தி கூட வாணிப வீதம் சாதகமாகமாறும்.

**6.சுங்கவரி (Tariff):** இறக்குமதியில் விதிக்கின்ற வரி ஒரு நாட்டின் வாணிப வீதத்தைக் கூட்டுகின்றது. இதனால் வாணிப வீதம் சாதகமாக மாறும்.

**7.பண மதிப்புக் குறைப்பு (Devaluaiton):** ஒரு நாடு தனது பணத்தின் மதிப்பைக் குறைக்கின்ற பொழுது இறக்குமதிப் பொருட்களின் உள்நாட்டு விலைகள் கூடும். ஏற்றுமதி செய்யும் பொருட்களின் வெளிநாட்டு விலை குறையும். இதனால் வாணிப வீதம் சாதகமாக மாறும்.

**8.நாடுகளின் அளவு:** ஒரு நாட்டின் பரப்பளவு அந்த நாட்டின் வாணிப வீதத்தைப் பாதிக்கின்றது. பொதுவாக வாணிப வீதம் சிறிய நாட்டிற்குச் சாதகமாகவும் பெரிய நாட்டிற்கும் பாதகமாகவும் இருக்கும்.

**9.பொருளின் இயல்பு:** ஏற்றுமதி, இறக்குமதி செய்யும் பொருட்களின் இயல்பு வாணிப மாறறு வீதத்தைப் பாதிக்கின்றது. முக்கியமற்ற பொருளை இறக்குமதி செய்து முக்கியமற்ற பொருளை ஏற்றுமதி செய்கின்ற நாட்டிற்கு வாணிப வீதம் சாதகமாக இருக்கும்.

குறிப்பு

**வாணிப வீதமும் பொருளாதார வளர்ச்சியும்**

சாதக வாணிப வீதம் வளர்ச்சி குறைந்த நாடுகளின் விரைவான பொருளாதார வளர்ச்சிக்கு மிகவும் துணை செய்கின்றது. சாதக வாணிப வீதத்தைப் பெற்றிருக்கும் நாடு ஒரு குறிப்பிட்ட அளவு ஏற்றுமதிக்கு அதிக அளவில் பொருட்களை இறக்குமதிசெய்து கொள்ள முடியும். இதன் மூலம் நாட்டில் கிடைக்கின்ற வளங்கள் கூட விரைவான பொருளாதார வளர்ச்சி நடைபெறும். நாட்டு வருவாய் கூடும். நர்க்ஸ் இதனால்தான் நன்மை பயக்கும் வாணிப நிலையை மூலதன ஆக்கத்திற்கு ஓர் ஆற்றல் மிக்க மூலமாகக் கருதுகின்றார்.

சாதக வாணிப வீதத்தின் மூலம் கிடைக்கின்ற கூடுதலான மூலவளங்கசை் சேமித்து, பயனுள்ள வகையில் முதலீடு செய்தால் மட்டும் தான் பொருளாதார வளர்ச்சி ஏற்படும். மாறாக கூடுதலாகக் கிடைக்கும் ஆதாயத்தை நுகர்ந்து விட்டால் மூலதன ஆக்கமோ பொருளாதார வளர்ச்சியோ ஏற்படாது.

**பாதகச் சூழ்நிலைகள்:** சாதக வாணிப வீதத்தால் கிடைக்கின்ற வளர்ச்சி வாய்ப்புகளைச் சில பாதகச் சூழ்நிலைகள் கெடுத்து விடுகின்றன. அத்தகைய பாதகச் சூழல்களைத் தொகுத்துக் கூறலாம்.

1. ஏற்றுமதியைக் கட்டுப்படுத்திச் சாதக வாணிப வீதத்தைப் பெறுகின்ற பொழுது ஏற்றுமதித் தொழில்களில் மூலவளங்கள் முழுமையாகப் பயன்படுத்தாமல் இருக்கும். இதனால் வேலைவாய்ப்பு உற்த்தி வருவாய் ஆகியவை குறையும்.
2. பணவீக்கத்தால் ஏற்படும் அதிக உற்பத்திச் செலவினால் சாதக வாணிப வீதத்தைப் பெற்றால் பொருளாதார வளர்சசியில் ஏற்படும் பணவீக்கத்தின் கிடைக்கும் நன்மைகளைக் கெடுத்துவிடும்.
3. ஏற்றுமதியின் அளிப்புக் குறைய, ஏற்றுமதி பொருட்கிள்ன விலை கூடுவதால் சாதக வாணிப வீதம் கிடைத்தால் மொத்த ஏற்றுமதி குறைவதால் ஏற்படும் பாதகவிளைவுகள் பொருளாதாரத்தின் வளர்ச்சியைப் பாதிக்கும்.

**சீர்கெடக் காரணங்கள்:** சாதக வாணிப வீதம் அமைந்தும் ஏழை நாடுகளில் பொருளாதார வளர்ச்சி பாதிக்கப்பட்டு சீர்குலைவதற்கான காரணங்களைச் சுட்டிக்காட்டலாம்.

1.மக்கள் தொகை அதிகமாக இருப்பதாலும் விரைவில் வளர்வதாலும் மூலதனப் பொருட்களின் இறக்குமதி கூடுகின்றது.

2.வளர்ச்சி குறைந்த நாடுகளில் ஏற்றுமததித் தொழில்கள் குவிதல் முறையில் அமைவதால் உலகப்போட்டி அங்காடியில் அவற்றின் விலை குறைகின்றது.

3. செல்வவளமிக்க நாடுகளில் உற்பத்தி கூடுவதால் அவை ஏழை நாடுகளிலிருந்து இறக்குமதி செய்யும் அளவு குறைகின்றது.

4.வளர்ச்சி பெற்ற நாடுகளில் ஏற்படுகின்ற தொழில் நுட்ப வளர்ச்சியையும் கண்டுபிடிப்புகளும் அவற்றின் இறக்குமதியை குறைத்துவிடுகின்றன.

5.வளர்ச்சி பெற்ற நாடுகளில் ஏழை நாடுகளுக்குரிய பொருட்களின் தேவை நெகிழ்ச்சி மிகவும் குறைவாக இருக்கின்றது. ஆனால் ஏழை நாடுகளின் இறக்குமதித் தேவை மிகவும் நெகிழ்ச்சியுடையதாக உள்ளது.

6.வளர்ச்சி பெற்ற நாடுகள் உலக அங்காடி விலை மாற்றங்களுக்கேற்ப உற்பத்தி செய்யும் பொருட்களை மாற்றிக்கொள்கின்றன. ஏழை நாடுகளால் பொருள் உற்பத்தியில் எளிதாக மாற்றம் செய்ய முடிவதில்லை.

7.உலக அங்காடியில் ஏழை நாடுகளின் பேரம் பேசும் சக்தி குறைவாக உள்ளது.

## IV.வாணிப வீதங்களின் சமநிலை (Equilibrium of Terms of Trade)

இரண்டு நாடுகள், இரண்டு பொருட்களை உற்பத்தி செய்து வாணிபம் செய்கின்ற பொழுது வாணிப வீதங்கள் எப்படி சமநிலைக்கு வருமென்பதை விளக்கலாம்.

பிரிட்டனும் அமெரிக்காவும் வாணிபம் செய்வதாகக் கொள்வோம் பிரிட்டன் துணியையும் அமெரிக்கா கோதுமையையும் ஏற்றுமதி செய்கின்றன. வாணிப வீதம் இரண்டு நாடுகளுக்கும் ஆதாயமாக இருக்கும பொழுது சமநிலை ஏற்படும்.

இரு நாடுகளின் அளிப்பு வளைகோடுகளைக் (ழுககநச ஊரசஎநள) கொண்டு இதனை விளக்கலாம். வளர்ந்துசெல் செலவு விதி செயல்படுகையில் பிரிட்டன் அதனுடைய துணி ஏற்றுமதியைக் கூட்ட வேண்டுமானால் அதிக அளவில் கோதுமையை இறக்குமதி செய்வதுதான் பிரிட்டனுக்கு ஆதாயமாக இருக்கும். இது பிரிட்டனின் தேவை அளிப்பு நிலைகளைக் குறிக்கின்றது. இதனைப் போன்றே அமெரிக்காவின் நிலையையும் அறியலாம்.

குறிப்பு

வாணிப அளவு என்பது வாணிப வீதங்களின் சார்பு நிலையாகும். இந்தச் சார்பு (function) அளிப்புத் தேவை நிலைகளை ஒட்டி அமைகின்றது.

இரண்டு நாடுகளின் வாணிப வீதங்களை (அளிப்பு-தேவை நிலைகளை) அறிந்து ஒப்பிடும் பொழுது ஏதாவது ஒரு வாணிப வீதம் இரு நாடுகளுக்கும் ஏற்புடையதாக இருக்கும். அதாவது அந்த வாணிப வீதத்தில் பிரிட்டன் ஏற்றுமதி செய்ய விரும்புகின்ற துணியின் அளவும் அமெரிக்கா ஏற்றுமதி செய்கின்ற கோதுமையின் அளவும் பிரிட்டன் இறக்குமதி செய்கின்ற கோதுமையின் அளவும் சமமாக இருக்கும் இந்த வாணிப வீதம்தான் சமவிலை வாணிப வீதம்.

## V.வாணிப வீதத்தில் சுங்கவரியின் விளைவுகள் (Effects of Tariff on Terms of Trade)

ஒரு நாடு சுங்கவரி விதிக்கின்றபொழுது அந்த நாட்டின் வாணிப வீதம் சாதகமாக மாறுகின்றது. சுங்கவரி விதிக்கின்ற நாட்டின் ஏற்றுமதிக்குரிய தேவை அதிகமாகவும் நெகிழ்ச்சியற்றும் இருந்தால் சுங்கவரியினால் இந்த விளைவை ஏற்படுத்த முடியும்.

சுங்கவரியின் மூலம் இறக்குமதியைக் கட்டுப்படுத்துகின்ற பொழுது ஏற்றுமதியின் மூலம் இலாபம் பெற்ற நாடுகள் அவற்றினுடைய ஏற்றுமதியைப் பெருக்க முயலும். இதற்காக வெளிநாட்டினர் அவர்களது ஏற்றுமததிப் பொருட்களின் விலையைக் குறைப்பார்கள். இதனால் சுங்கவரி விதிக்கும் நாட்டில் இறக்குமதிப் பொருட்களின் விலை குறைவாக இருக்கும். இறக்குமதி கூடும். சுங்கவரி விதித்தால் விடைக்க வேண்டிய நன்மைகள் கிடைக்காமல் போகும்.

சுங்கவரியால் வாணிப வீதத்தில் எவ்வளவு நன்மைகிடைக்மென்பது இறக்குமதி செய்யும் நாட்டில் எவ்வளவு விலை கூடுமென்பதையும் ஏற்றுமதி செய்யும் நாடடில் எவ்வளவு விலை குறையுமென்பதையும் சார்ந்து அமைகின்றது. இது வாணிபம் செய்யும் நாடுகளின் பரிமாற்றத் தேவையின் நெகிழ்ச்சிகளை ஒட்டின இருக்கின்றது.

குறிப்பு

மற்றைய நாடுகள் எதிர் நடவடிக்கை எடுக்கவில்லை என்றால் தான் சுங்கவரி வதிப்பால் சாதக வாணிப வீதும் ஏற்பட்டு பலன்கள் கிடைக்கும். ஆனால் இரண்டு நாடுகளும் மாற்றி மாற்றி எதிர் நடவடிக்கை எடுத்தால் சுங்கவரியால் பலன் கிடைக்காது. இரு நாடுகளும் நட்டப்படும். மாறாக இரண்டு நாடுகளும் இசைந்து சுங்கவரியை நீக்கினால் இரண்டு நாடுகளின் வாணிப அளவு கூட இரண்டு நாடுகளும் நன்மை பெறும்.

## 3.4. நிலையான மற்றும் மாறும் வர்த்தக ஆதாயங்கள்

### VI. நிலையான மற்றும் மாறும் சாதக நிலை:(Static and Dynamic Gains from Trade)

**வகை 1 : நிலையான வாணிப சாதக நிலை:**

நாடுகளிடையே வர்த்தகம் திறந்து கொண்டிருக்கும்போது நலன்புரி நிலையின் பயன்பாடு அல்லது மட்டத்தில் அதிகரிப்பதன் மூலம் வர்த்தகத்தில் இருந்து நிலையான லாபங்கள் அளவிடப்படுகின்றன. நவீன பொருளாதாரத்தில் பயன்பாட்டினை அல்லது நலனில் அதிகரிப்பு அலட்சிய வளைவுகளில் அளவிடப்படுகிறது என்பதை நினைவில் கொள்ளுங்கள். வெளிநாட்டு வா்த்தக்த்தின் விளைவாக, ஒரு நாடு ஒரு குறைந்த அலட்சியம் வளைவை உயா்ந்ததாக மாற்றும் போது, அது மக்களின் நலன் அதிகரித்துள்ளது என்பதைக் குறிக்கிறது.

வா்த்தகத்தில் இருந்து நிலையான லாபங்களை காட்ட, ஒரு எடுத்துக்காட்டு எடுத்துக் கொள்ளலாம். இந்தியா மற்றும் யூ.எஸ்.ஏ ஆகிய இரண்டு நாடுகளிலும் வா்த்தகத்தில் ஈடுபடுவதற்கு முன்னா் இரண்டு பொருட்களின் துணி மற்றும் கோதுமை உற்பத்தி செய்யப்பட வேண்டும். அவா்களின் உற்பத்தி சாத்தியம் மற்றும் அலட்சியம் வளைவுகள் புள்ளிவிவரங்கள் 23.8 மற்றும் 23.9 இல் காட்டப்பட்டுள்ளன. வா்த்தகத்தில இந்தியா முன் சமநிலையில் இருக்கும் (எ.கா. AFL) உற்பத்தி விலை PP உற்பத்தி வாய்ப்பு வளைவு AB மற்றும் இலட்சியம் வளைவு $IC_1$ இரண்டையும் குறிக்கும்.

இந்தியாவின் இரண்டு பொருட்களின் விலை-விகிதம் (அல்லது விலை விகிதம்), விலை வரிகளின் சரிவு, சா்வதேச விலை விகிதம் (வா்த்தகத்தின் விதிமுறைகள்) PPP பிரதிநிதித்துப்படுத்தும் உள்நாட்டு விலை-விகிதத்திலிருந்து வேறுபட்டால் இந்தியாவைப் பெற முடியும். வா்த்தகம் முடிந்தால், இந்தியாவிற்கும் அமெரிக்காவிற்கும் இடையில் பொருட்களை பரிமாறிக்கொள்ளும்

விலை விகிதத்தை வர்த்தக வரிகளின் அடிப்படையில் நாம் அடிப்படையில் நாம் பெறுவோம். இது வரி செலுத்தல் (அதாவது, விகிதம் வரி) ஆகும்.

குறிப்பு

இந்தியாவில் உற்பத்தி வரியின் விதிமுறைகள், அதன் உற்பத்தி சாத்தியக்கூறு விளைவுகளுக்கு இடையில் இருக்கும் புள்ளியைக் குறிக்கும். 23.8 புள்ளியில் இருந்து, R இல், F-ஐ விட ஒப்பிடும்போது, இந்தியாவின் ஒப்பீட்டளவில் கூடுதலாகவும், கோதுமை குறைவாகவும் இந்தியா அதிக துணியை உற்பத்தி செய்யும். இதன் உற்பத்தி சாத்தியக்கூறு வளைவில் இந்தியா R புள்ளியில் உற்பத்தி செய்யும்.வர்த்தக வரி tt இதன் உற்பத்தி சாத்தியம் வளைவு AB க்கு tangent உள்ளது. அது புள்ளி R குறிக்கும் கோதுமை மற்றும் துணி அளவு நுகர்வு இல்லை.

வர்த்தக வரிகளின் வதி முறைகளால் பிரதிநிதித்துவம் செய்யப்படும் புதிய விலைவிகிதத்தினால், பொருட்களின் நுகர்வு நாட்டினுடைய கோரிக்கையின் அடிப்படையில் இருக்கும். இந்த காரணி இணைத்துக் கொள்ள நாம் நாட்டில் சமூக அலட்சியத்தை வளைவுகள் $IC_1$ $IC_2$ வரையப்பட்டிருக்கிறது. இந்த சமூக அலட்சியம் வளைவுகள் இரண்டும் பொருட்களுக்கான கோரிக்கைகளை பிரதிநிதித்துவப்படுத்துகின்றன அல்லது வேறுவிதமான கூறினால், சமூகத்தின் இரு பொருட்களுக்கு இடையே உள்ள விருப்பங்களின் அளவு MFK;




**Fig. 23.8.** *Gain from Trade : India.*

23.8.8ல் இருந்து இந்தியாவின் சமூக அறியாமை வளைவு ஐ.எஸ்.எஸ்.எஸ் புள்ளியில் வர்த்தக வரி tt என்பது தற்செயலாக 23.8ல் இருந்து காணப்படுகின்றது. ஆகையால் வர்த்தக இந்தியா இந்தியாவின் துணி, கோதுமை

குறிப்பு

ஆகியவற்றை சுத்திகரிக்கிறது. எனவே பிரத்தியேக மற்றும் வர்த்தகத்தின் விளைவாக, இந்தியா F இன்மையின்மை வளைவு ICI இலிருந்து புள்ளி விவரம் FI ஐ விட உயர்ந்த பண்பேற்ற வளைவு $IC_2$க்கு மாற முடியும்

இது சிறப்பு மற்றும் வா்த்தகத்தின் இருந்து பெறப்பட்ட ஆதாயம் மற்றும் அதன் உற்பத்தி அதன் சாத்தியக்கூறு வளைவு AB க்கு அப்பாற்பட்டது என்று புள்ளி காணப்படுகிறது.

சிறப்பு மற்றும் வா்த்தகம் ஏற்படும் போது நாட்டெனால் உண்டாகும் இரண்டு பொருட்களின் அளவு அளவால் தயாரிக்கபடும் இரண்டு பொருட்களின் அளவுகளிலிருந்து மாறுபடும். Figure ல் 23.8 புள்ளிவிபரத்தின் படி இரண்டு பொருட்களின் இறக்குமதி காரணமாக வேறுபாடு எழுகிறது. 23.8, இந்தியாவில் எம்.ஆர்.ஆர் அளவு துணி ஏற்றுமதி செய்யும் பொது அது MS அளவு கோதுமை இறக்குமதி செய்யும்.

இப்போது யூ.எஸ்.ஏ.யின் நிலைப்பாட்டை எண்ணி பாருங்கள். படம் 23.9 அமெரிக்காவின் காரணி மற்றும் துணி இடையே உற்பத்தி சாத்தியக்கூறின் குறுவட்டு அதன் காரணி நன்மைகள் சி.டி ஆகும். இது அமெரிக்காவின் காரணி ஆதாயங்கள் கோதுமை உற்பத்தி வாய்ப்பு குறுவட்டிலிருந்து தெளிவாகிறது.

இது சந்தைக்கு முன்னா், யூ.சி.ஏ. உற்பத்தி செய்யும் போது அதன் உற்பத்தி சாத்தியம் வளைவு குறுவட்டு மீது எச்.ஏ. உற்பத்தி மற்றும் நுகா்வு செய்யும். இது உள்நாட்டு விலை விகிதம் வரி பிபி மற்றும் அலட்சியம் வளைவு ICI ஆகியவை அவற்றிற்கு தொடுக்கும் அமேரிக்காவில் இருந்து வேறு விலை விகிதத்தில் விற்க முடியுமா என்றால் அமேரிக்கா வா்த்தகத்திலிருந்து பெறலாம். வா்த்தக வரிகளின் விதிமுறைகள் tt யை வைத்துக் கொள்வோம்.

இந்த வரி வா்த்தகம் tt உடன் யு.எஸ்.ஏ. அதன் உற்பத்தி சாத்தியம் வளைவு குறுவட்டு மீது புள்ளி ஜி மணிக்கு உற்பத்தி செய்யும்.அவள் இப்போது அதிகமான கோதுமைகளை உற்பத்தி செய்கிறாள், அதில் அது முன்பு ஒப்பிடும்போது ஒப்பீட்டளவிலான நன்மையும் குறைவான துணியும் உள்ளது. மறுபுறம் , வரி விகிதத்தை பிரதிநிதித்துவப்படுத்தும் விலை விகிதம், அமெரிக்கா எடுக்கும் இரு பொருட்களின் அளவை எச்.ஐ. எச்.எச்.ஹெ என்கின்றோம்.

இந்தியாவுடனான சிறப்பு மற்றும் அதன் விளைவாக வா்த்தகம் செய்வது, அதன் குறைந்த அலட்சியப் போக்கு வளைவு ICI யிலிருந்து I.K 1ஐ

அதிகபடுத்தியுள்ளது. இது அவர் வர்த்தகத்தில் இருந்து பெறும் லாபமாகும். யு.எஸ்.ஏயின் உற்பத்தி மற்றும் நுகர்வுப் புள்ளிகளை ஒப்பிடுவதன் மூலம், யு.ஜி.ஏ. கோதுமை மற்றும் என்.எச்.

குறிப்பு

தொடர்சியான வாய்ப்புக்கான செலவில் , ஒவ்வொரு நாட்டிலும் முழுமையான நிபுணத்துவம் பெறுகிறது என்பதை நினைவில் கொள்ள வெண்டும், அதாவது, வர்த்தகத்திற்குப் பிறகு இரண்டு பொருட்களில் ஒன்றை உற்பத்தி செய்கிறது. அதிகரித்து வரும் வாய்ப்புக் கட்டணத்தில், ஒருநாடு ஒப்பீட்டளவிலான நன்மையைக் கொண்டிருக்கும் ஒரு நல்ல அளவு மட்டுமே உற்பத்தி செய்கிறது.

**வகை 2: மாறாத வர்த்தக ஆதாயங்கள் : சர்வதேச வர்த்தக மற்றும் பொருளாதார வளர்ச்சி :**




**Fig. 23.9.** *Gain from Trade : U.S.A.*

சர்வதேச வர்த்தகம் தொடந்து விசேஷமானது இரண்டு நாடுகளுக்கும் முன்பை விட அதிகமானதைக் கொண்டிருப்பதை சாத்தியமாக்குகிறது.

பொருட்களின் இந்த கூடுதலான உற்பத்தி என்பது வெவ்வேறு பொருட்களின் உற்பத்தியில் பல்வேறு நாடுகளால் நிபுணத்துவம் பெறுவதன் மூலம், பின்னர் ஒருவருக்கொருவர் வரத்தகம் செய்வது ஆகும். பல்வேறு பொருட்களின் உற்பத்தியில் பல்வேறு நாடுகளால் விசேஷ உற்பத்தி மற்றும் ஆதார ஏற்றத்தாழ்வு ஆகியவற்றின் படி, உலக உற்பத்தியில் அவர்களின் உற்பத்தி திறனை அதிகரிக்கின்றது.

பல்வேறு நாடுகளின் உயர்ந்த உற்பத்தித்திறன் மிகவும் அடிப்படையாகக் கொண்டிருக்கும் உழைப்புப் பிரிவு மற்றும் விசேஷ அம்சங்களை இது சாத்தியாக்குகிறது. பல்வேறு நாடுகளின் சிறப்புப் பணியாளர்களின் பொருட்களைப் பரிமாறிக்கொள்ள முடியாவிட்டால், ஒவ்வோன்றும் தன்னிறைவுடையதாக இருக்க வேண்டும். அதாவது, ஒவ்வொன்றும் அது தேவைப்படும் அனைத்து பொருட்களையும் தயாரிக்க வேண்டும், திறம்பட உற்பத்தி செய்ய முடியாதவை கூட இதன் விளைவாக, அவர்களின் உற்பத்தித்திறன் மற்றும் வாழ்க்கை நிலையானது கீழே போகும்.

குறிப்பு

**வாணிப வீதமும் பொருளாதார நலமும் (Terms of Trade and Economic Welfare)**

சாதக வாணிப வீதம் பொருளாதார வளர்ச்சியைத் தூண்டும் பொழுது உற்பத்தி எல்லைகள் விரிவடைகின்றன. இதனால் நாட்டின் மொத்த வருவாயும் அதன் வழி மக்கிளன் தலைவீத வருவாயும் கூடுகின்றன. மக்களின் வருவாய் கூட அவர்களது வாங்கும் சக்தி கூடும். மக்கிளன் நுகர்வு அதிகரிக்க அவர்களது பொருளாதார நலமும் உயரும்.

பன்னாட்டு வாணிபத்தால் நுகர்வோருக்குப் பலவகையாக பொருட்கள் கிடைக்கின்றன. சாதக வாணிப நிலையில் குறைந்த ஏற்றுமதியில் அதிகப் பொருட்களை இறக்குமதி செய்தால் நுகர்வோரின் நுகர்வு அளவு கூடுகின்றது. அந்த அளவிற்கும் பொருளாதார நலம் கூடும். பாதக வாணிபவீதம் மக்களின் பொருளாதார நலத்தைப் பாதிக்கும் ஆதலால் சாதக வாணிப நிலையைப்பெற ஒவ்வொரு நாடும் முயல்கிறது.

## 3.5 விவசாயத்திற்கும் தொழிலுக்கும் இடையிலான வர்த்தக விதிமுறைகள்

வளர்ச்சி செயல்முறை பொதுவாக விவசாயத் துறையில் தொடங்கப்படுகிறது. ஆரம்ப கட்டங்களில், உழைப்பு மற்றும் மூலதனம் விவசாயத் துறையிலிருந்து தொழில்துறை துறைக்கு மாற்றப்படுகின்றன. இந்த சூழ்நிலைகளில், பொருளாதாரம் முன்னேறும் போது விவசாயத்திற்கு ஆதரவாக வர்த்தக விதிமுறைகள் மாறுவதற்கான வலுவான வாய்ப்பு இருப்பதாக பெரும்பாலான பொருளாதார வல்லுநர்கள் நம்புகின்றனர்.

அதற்கு பல காரணங்கள் உள்ளன. விவசாயத் துறையை விட தொழில்துறை துறையில் தனிநபர் உற்பத்தி மற்றும் வருமானம் மிக விரைவான

வேகத்தில் அதிகரிக்கும். இது தொழில்துறை பொருட்களின் தேவையை விட விவசாய பொருட்களுக்கான தேவையை ஒப்பீட்டளவில் அதிகரிக்கும்.

தொழில்துறை துறையில் தொழில்நுட்ப முன்னேற்றத்தின் ஒப்பீட்டளவில் மிக விரைவான விகிதம் விவசாய உற்பத்திகளை விட தொழில்துறை பொருட்களின் விநியோகத்தில் பெரிய அதிகரிப்புக்கு வழிவகுக்கும். இந்த இரண்டு முன்னேற்றங்களும் தொழில்துறை பொருட்களின் அடிப்படையில் விவசாய பொருட்களுக்கு அதிக செலவு செய்யும். இந்த மாற்றத்தால், விவசாயத் துறையிலிருந்து தொழில்துறை துறைக்கு மூலதன ஓட்டம் குறையும். தொழில்துறை துறையின் வளர்ச்சி விகிதம் பின்னர் வீழ்ச்சியடையும்.

குறிப்பு

வேளாண் துறையில் மூலதனத்தின் ஓரளவு உற்பத்தித்திறன் அதிகமாக இருப்பதால், தொழில்துறை துறையிலிருந்து விவசாயத் துறைக்கு மூலதனம் நகரும் வாய்ப்பு உள்ளது. இதுதான் தெற்கு அமெரிக்காவில் ஒரு காலத்தில் அனுபவித்தது.

அபிவிருத்தி முன்னேறும்போது விவசாயத்திற்கு ஆதரவாக வர்த்தக விதிமுறைகள் மாறும் என்பதைக் காட்ட முயற்சிக்கும் பல்வேறு மாதிரிகள் உள்ளன. டபிள்யூ.ஏ. லூயிஸ் கொடுத்த மாதிரி லேசாக மட்டுமே முடிகிறது.

வேளாண் துறையில் நிகழும் மாற்றங்களை இந்த மாதிரி தீவிரமாக ஆராயவில்லை என்பதே இதற்குக் காரணம். ∴பீ மற்றும் ரானிஸால் வழங்கப்பட்ட மாதிரியும், தொழில்துறைமயமாக்கல் முன்னேறும்போது வர்த்தகத்தின் விதிமுறைகள் விவசாயத்திற்கு ஆதரவாக மாறும் என்ற உண்மையை ஜோர்கென்சன் வலுவாக வெளிப்படுத்துகிறார்.

ஜோர்ஜென்சனின் மாதிரியானது ∴பை மற்றும் ரானிஸின் மாதிரியைப் போலவே ஒரே வித்தியாசத்தைக் கொண்டுள்ளது, அதேசமயம் வேளாண் துறையில் உபரி உழைப்பு தீர்ந்துவிட்ட பின்னரே வர்த்தக மாற்றத்தின் விதிமுறைகள் இருப்பதாக ∴பீ மற்றும் ராணிஸ் கருதுகின்றனர், வர்த்தக விதிமுறைகள் தொடங்குகின்றன என்று ஜோர்கென்சன் கருதுகிறார் தொழில்துறை மற்றும் தொழிலாளர் துறையிலிருந்து தொழில்துறை துறைக்கு தொழிலாளர் மற்றும் மூலதனத்தை மாற்றுவதன் மூலம் தொழில்மயமாக்கல் தொடங்கியவுடன் விவசாயத்திற்கு ஆதரவாக மாறுகிறது.

வர்த்தக விதிமுறைகள் தொழில்துறைக்கு எதிராக மாறும்போது (அதாவது விவசாயத்திற்கு ஆதரவாக), தொழில்துறை வளர்ச்சி பாதிக்கப்பட வாய்ப்புள்ளது. மேலும், அரசின் குறுக்கீடு இல்லாவிட்டால், வளர்ச்சி

குறிப்பு

முன்னேறும்போது வர்த்தக விதிமுறைகள் தொழில்துறை துறைகளுக்கு எதிராக மாறும் சாத்தியக்கூறுகள் உள்ளன.

எனவே பல பொருளாதார வல்லுநர்கள் விவசாயத்திற்கு எதிரான வர்த்தக விதிமுறைகளை ஆரம்ப கட்டங்களில், விலைக் கட்டுப்பாடு போன்ற செயற்கை வழிமுறைகள் மூலமாகவோ அல்லது விவசாயத் துறைக்கு அதிக வரி விதிக்கவோ நடவடிக்கை எடுக்க வேண்டும் என்று பரிந்துரைத்துள்ளனர்.

இது தொடர்பாக, நசீர் அகமது கான் மற்றும் ஒகாவா போன்ற சில பொருளாதார வல்லுநர்கள், விவசாயத் துறையிலிருந்து (சேமிப்பு போன்றவை) வளங்களை வரிவிதிப்பு, கடன் வாங்குதல் அல்லது சிறிய சேமிப்பு மூலம் எளிதில் திரட்ட முடியாது என்று கருதுகின்றனர். இந்த நடவடிக்கைகள் வெற்றிகரமாக இருந்தாலும், மகசூல் மிகவும் சிறியதாக இருக்கும்.

எனவே, விவசாயத்திற்கு எதிரான வர்த்தக விதிகளை மாற்றுவதற்கு விவசாய மற்றும் தொழில்துறை விலைகளை நேரடியாக கையாளுதல் அவசியம் என்பதை அவர்கள் வலியுறுத்துகின்றனர். அத்தகைய நடவடிக்கையின் மூலம் மட்டுமே, விவசாயத் துறையிலிருந்து வளங்கள் தொழில்துறை வளர்ச்சிக்கு கிடைக்கும்.

கான் கருத்துப்படி, விவசாயத்திற்கு எதிரான வர்த்தக விதிமுறைகளில் ஏற்பட்ட மாற்றம், தொழில்துறை துறைக்கு சேமிப்புகளை மாற்றுவது மட்டுமல்லாமல், இவை உற்பத்தி நோக்கங்களுக்காகப் பயன்படுத்தப்படும், ஆனால் அதிக சந்தைப்படுத்தப்பட்ட உபரிக்கும் வழிவகுக்கும்.

எவ்வாறாயினும், ராஜ் கிரிஷன் இந்த பரிந்துரைக்கு தகுதியான ஆதரவை மட்டுமே தருகிறார். அவரது கருத்து என்னவென்றால், விவசாய உற்பத்தியின் மிக முக்கியமான குறைந்தபட்ச வளர்ச்சி விகிதம் உள்ளது, இது தொழில்துறை வளர்ச்சி சீராக தொடர வேண்டுமானால் உறுதி செய்யப்பட வேண்டும். விவசாயத்திற்கு எதிரான வர்த்தக விதிமுறைகள் மிகவும் கையாளப்பட வேண்டும், இந்த முக்கியமான குறைந்தபட்சம் பாதிக்கப்படாது.

எவ்வாறாயினும், வேளாண்மை மற்றும் தொழில்துறைக்கு இடையிலான வர்த்தக விதிமுறைகளின் போக்கு குறித்த மேலேயுள்ள முடிவுகளுடன் மெல்லர் உடன்படவில்லை, பொருளாதாரத்தின் வளர்ச்சிக்கு வர்த்தகத்தின் விதிமுறைகள் தானாகவே விவசாயத்திற்கு ஆதரவாக மாறும் என்று நம்பவில்லை. தொழில்மயமாக்கல் செயல்முறை ஓரளவிற்கு செல்கிறது. மேற்கண்ட

முடிவுகளுக்கு வரும்போது இரண்டு முக்கியமான விஷயங்கள் புறக்கணிக்கப்பட்டதாக அவர் கருதுகிறார்.



முதலாவதாக, விவசாய பொருட்களுக்கான தேவையின் விலை நெகிழ்ச்சி வளர்ந்த நாடுகளின் கீழ் ஒற்றுமைக்கு அருகில் உள்ளது. விவசாய பொருட்களுக்கான தேவை அதிகரிக்கும் போது இது விவசாய பொருட்களின் விலையில் ஏற்படும் தாக்கத்தை குறைக்கும், ஆனால், அத்தகைய பொருட்களின் வழங்கல் அதே அளவிற்கு அதிகரிக்காது.

## 3.6 உங்கள் முன்னேற்றத்தை சரிபார்க்கும் வினாக்கள்

1. வாணிபவீதம் என்றால் என்ன?
2. சாதக வாணிப வீதத்தைப் பற்றி கூறுக?

## 3 .7 உங்கள் முன்னேற்றத்தை சரிபார்க்கும் பதில்கள்

**1.** ஒரு குறிப்பிட்ட ஆண்டிலுள்ள வாணிப வீதங்களைக் கணக்கிட ஓர் அடிப்படை ஆண்டு முதல் ஏற்றுமதி இறக்குமதி விலைகள் ஏற்பட்டிருக்கும் மாற்றங்களைக் குறிக்கும் ஏற்றுமதி, இறக்குமதி விலைகளின் குறியீட்டெண்களைத் தயாரிக்க வேண்டும்.

பொதுவாக

$$\text{வாணிப வீதங்கள்} = \frac{\text{இறக்குமதிகளின் பண மதிப்பு}}{\text{ஏற்றுமதிகளின் பண மதிப்பு}}$$

கூறுவதுண்டு,

2. சாதக வாணிப வீதம் வளர்ச்சி குறைந்த நாடுகளின் விரைவான பொருளாதார வளர்ச்சிக்கு மிகவும் துணை செய்கின்றது. சாதக வாணிப வீதத்தைப் பெற்றிருக்கும் நாடு ஒரு குறிப்பிட்ட அளவு ஏற்றுமதிக்கு அதிக அளவில் பொருட்களை இறக்குமதிசெய்து கொள்ள முடியும். இதன் மூலம் நாட்டில் கிடைக்கின்ற வளங்கள் கூட விரைவான பொருளாதார வளர்ச்சி நடைபெறும். நாட்டு வருவாய் கூடும்

## 3.7 சுருக்கம்

பன்னாட்டு வாணிபத்தில் பங்குபெறுகின்ற நாடுகளுக்காக லாபம் பெறுகின்றன தொன்மை பொருளியல் அறிஞர்கள் வாணிபத்தின் அளவை ஒட்டி லாபம் அமையும் என்று கருதினர் வாணிபம் பெருக பெருக லாபம் பெருகும்

என்று கூறப்பட்டது. மாற்று வீதம் எந்த நாட்டிற்கு சாதகமாக அமைகின்றதோ அந்த நாடே மிகுதியாக லாபம் பெறும் என்று கருதினர்.

## 3.8 முக்கிய வார்த்தைகள்

குறிப்பு

வாணிப வீதம், மாற்று வீதம்

## 3.9 சுய மதிப்பீட்டு பயிற்சி வினாக்கள்

**குறுகிய வினாக்களுக்கு விடையளி.**

1. சாதக வாணிப வீதத்தைப் பற்றி கூறுக?
2. சுங்கவரி என்றால் என்ன?

**நெடுவினாக்களுக்கு விடையளி.**

1. வர்த்தக நிபந்தனை கருத்துக்கள், வர்த்தக விதிகளின் நிர்ணயம் மற்றும் நிலையான மற்றும் மாறும் வர்த்தக ஆதாயங்கள் விவரி.

2. விவசாயம் மற்றும் தொழில் இடையே வர்த்தக விதிமுறைகஜளு விளக்குக.

## 3.10 பரிந்துரைக்கப்படும் நூல்கள்

குருக்மேமன் P.R. மற்றும் M.ஓப்ஸ்கீல்டு(2006), "பேரியல் பொருளாதாரம் : கருத்து மற்றும் கொள்கை" அடிசன் வெஸ்லி, புது டெல்லி

# அலகு – 4 தடையற்ற வாணிபம் (Free Trade)



குறிப்பு

## 4.1. இலவச வர்த்தகம்: பொருள்

**a).முன்னுரை-விளக்கம்:**

நாடுகளிடையில் பொருட்களின் ஓட்டத்தைத் தடைப்படுத்தும் சுங்க வரிகள் அளவுசார்ந்த கட்டுப்பாடுகள் (Quantitative Restrictions) மற்றும் ஏனைய கருவிகள் ஏதேனும் எங்கு விதிக்கப்படவில்லையோ அக்கொள்கையே தடையற்ற வாணிபக்கொள்கை எனப்படுகிறது. அதாவது, தடையற்ற வாணிபம் என்பதற்கு பன்னாட்டு வாணிபத்தின் சுதந்திரம் என்று பொருள்.

ஆடம்ஸ்மித்தின் கருத்துப்படி. ‘‘உள்நாட்டு மற்றும் வெளிநாட்டுப் பொருள்களிடையே எந்த வேறுபாட்டையும் வரையாத ஒரு வணிகக் கொள்கை முறையையே ஒரு தடையற்ற வாணிபக் கொள்கை குறிக்கிறது. ஆகவே, இது அயல்நாட்டுப் பொருட்கள் மீது எந்தவிதமான கூடுதல் சுமைகளையும் சுமத்த வழங்குவதில்லை’’. இம்முறையின் கீழ், ஆதாய வரிகள் (Revenue Tariffis) விதிக்கப்படலாமே தவிர பாதுகாப்பு வரிகள் (Protective ) தவிர்க்கப்படுகின்றன. பண்டைக்காலப் பொருளியல் வல்லுநர்கள் தடையற்ற வாணிபத்திற்குச் சாதகமாகவே வாதிட்டனர். ஒரு நாட்டிலிருந்து மற்றொரு நாட்டிற்குப் பொருட்கள் தங்கு தடையின்றி நகர்ந்து செல்லும் பொழுதுதான் பன்னாட்டு வாணிபத்தில் நன்மைகள் எழும் என்று அவர்கள் நம்பினர்.

பேராசிரியர் லிப்சி (Prof./Lipsey) என்பவரின் கருத்துப்டி, ‘‘ஏற்றுமதி செய்தல் மற்றும் இறக்குமதி செய்தல் மீது எந்த வகையான தடையையும் சுங்க வரியையும் விதிக்காத ஒன்றே தடையற்ற வாணிபமாக இருக்க முடியும். அவ்வித

குறிப்பு

உலகில், ஒரு நாடு உள்நாட்டில் தயாரிக்க ஆகும் செலவை விடக் குறைந்த வழங்கல் விலையில் வெளிநாட்டிலிருந்து வாங்கக்கூடிய அனைத்துப் பொருட்களையும் இறக்குமதி செய்யும்''

பேராசிரியர் ஜகதீஷ் பகவதே குறிப்பிடுகின்றார். ''உற்பத்தி, காரணி பயன்பாடு மற்றும் நுகர்வு மீது சுங்கவரிகள், கோட்டாப் பங்குகள் (Quotas) பரிமாற்றக் கட்டுப்பாடுகள், வரிகள் மற்றும் உதவி நிதிகள் (Subsidies) போன்ற எதுவும் முற்றிலும் இல்லாத ஒரு நிலையே தடையற்ற வாணிபம் ஆகும்''

ஹேபர்லர் தடையற்ற வாணிபத்தைப் பின்வருமாறு வரையறுக்கிறார். ''பொருளாதார விசைகளின் தடையற்ற இயக்கத்துடன் அரசின் ஒவ்வொரு குறுக்கீட்டையும் எதிர்க்கும் தாராளமயமான வெளிப்புற வாணிப முறையே தடையற்ற வாணிபம் ஆகும்.

சுருங்கக் கூறின், நாடுகளிடையிலான பொருட்களின் ஓட்டத்தின் மீது எந்தவிதத் தடைகளுமற்ற பன்னாட்டு வாணிபத்தின் முழுமையான ஒரு தடையற்ற வாணிபத்திலும் இறக்குமதி வரிகள் ஆதாயம் பெறும் நோக்கில் விதிக்கப்படுவது தடுக்கப்படவில்லை. பாதுகாப்பு நோக்கில் விதிக்கப்படும் வரிகள் எதுவும் அனுமதிக்கப்படுவதில்லை.

1840 முதல் 1870 வரையிலான காலகட்டம் உலகின் வணிகம்சார்ந்த வரலாற்றில் "தடையற்ற வாணிபக் காலம் (Year of Free Trade ) எனக் கருதப்படுகிறது. தொழிற்புரட்சி உற்பத்தியை சக்திமயமாகிறது. இங்கிலாந்து 19 ஆம் நூற்றாண்டின் கால் நூற்றாண்டில் தடையற்ற வாணிபத்தைப் பின்பற்றியது. 1850-ல் கார்ன் சட்டங்களும், கடற்பயணச் சட்டங்களும் (Navigation Laws) முழுமையாக ஒழிக்கப்பட்டு இறக்குமதி வரிகள் கணிசமான அளவில் குறைக்கப்பட்டன.

## 4.2.இலவச வர்த்தகம் மற்றும் எதிராக வழக்கு

### b).தடையற்ற வாணிபத்தின் நன்மைகள்(Advantages of Free Trade)

பொருளாதார வல்லுநர்களால் பின்வரும் வாதங்கள் தடையற்ற வாணிபத்திற்கு ஆதரவாக முன் வைக்கப்படுகின்றன.

1. வெளிநாடுகையினை அதிகபட்சமாக்குதல் (Maximis of Output) தடையற்ற வாணிபக் கொள்கையின் கீழ் ஒவ்வொரு நாடும் சுங்கவரிகள் மற்றும் ஏனைய கட்டுப்பாடுகளிலிருந்து விடுவிக்கப்படுகின்றன. இது உலகெங்கிலும் உள்ள நாடுகளை, தாம் அதிக அளவு நன்மைகளைக் கொண்டு உள்ள பொருளின்

குறிப்பு

உற்பத்தியில் தனித்தேர்ச்சி பெற்று, அதை அதிக அளவில் தயாரித்து, ஏற்றுமதி செய்யவும் மற்றும் அவை மலிவாக இறக்குமதி செய்யக்கூடிய பொருட்களை இறக்குமதி செய்யவும் ஊக்குவிக்கிறது. இது பன்னாட்டு வாணிபத்தில் ஈடுபடும் அனைத்து நாடுகளின் வெளியிடுகையின் அளவையும் உயர்த்துகிறது. ஆகவே தடையற்ற வாணிபம் என்பது வெளியிடுகையினை அதிகபட்சமாக்குவதோடு மட்டுமல்லாமல், வருமானம், வேலைவாய்ப்பு ஆகிய அனைத்தையுமே அதிகபட்சமாக்குகிறது.

2. உற்பத்திசார்ந்த வள ஆதாரங்களின் உத்தம அளவுப் பயன்பாடு (Optimum Utilisation of Productive Resource) தடையற்ற வாணிபக் கொள்கையின் கீழ், நாடுகள் தான் உயர்ந்தபட்ச ஒப்பீட்டு நன்மைகளை் கொண்ட பொருளை மட்டுமே உற்பத்தி செய்கின்றன. இது உற்பத்திசார்ந்த வள ஆதாரங்களை உத்தம அளவில் பயன்படுத்துவதற்கு நாடுகளுக்கு உதவுகின்றது.

3. நுகர்வை மலிவான விலைகளில் செய்வதை எளிதாக்குகிறது (Facilitates Consumption at Cheaper Prices): தடையற்ற வாணிபக் கொள்கையின் கீழ், அனைத்து நாடுகளும் தான் உயர்ந்தபட்ச ஒப்பீட்டு நன்மையைப் பெறும் பொருட்களை மட்டுமே தயாரிக்கின்றன மற்றும் அவற்றை ஏற்றுமதி செய்கின்றன. மற்ற பொருட்களை மலிவான விலைகளில் தயாரிக்கும் நாடுகளிலிருந்து இறக்குமதி செய்கின்றன. ஆகவே, தடையற்ற வாணிபம் பொருட்களின் பல்வேறு ரகங்களையும் மலிவான விலைகளில் வாங்க மக்களுக்கு உதவுகறது.

4. காரணி அலகுகள் உயர்ந்த அளவு வீதங்களைப் பெறுகின்றன (Factor Units Secure Higher Rates): தடையற்ற வாணிபக் கொள்கையின் கீழ், நிலம், உழைப்பு, முதல் போன்ற பல்வேறு காரணிகளும் உயர்ந்த வீதத்தில் வருமானத்தைப் பெறுகின்றன. இது ஏனெனில், உற்பத்திக் காரணிகள் தங்களது சேவைகளுக்கு என உயர்ந்த ஊதியத்தைப் பெற நாடுவிட்டு நாடும். நாடுகளுக்கு உள்ளேயும் எளிதில் நகர முடியும். ஆகவே, அவை உயர்ந்த கூலி, வட்டி, வாடகை மற்றும் இலாபத்தை பெறுகின்றன.

5. உற்பத்தித் தன்மையில் அதிகரிப்பை ஊக்குவிக்கிறது (Encourages increase in Productivity) தடையற்ற வாணிபக் கொள்கையின் கீழ், போட்டியானது பன்னாடு சார்ந்ததாக இருக்கிறது. இது உள்நாட்டு உற்பத்தியாளர்களை உற்பத்தி தன்மையை அதிகரிக்கும்படி ஊக்குவிக்கிறது. இது

குறிப்பு

உற்பத்தியாளர்களை புதிய உற்பத்தி முறைகளைக் கண்டுபிடிக்கவும் அமைப்பை மேம்படுத்தவும் ஊக்குவிக்கிறது.

6. உலகளாவிய தேவையை உருவாக்குகிறது (Creates Global Demand) தடையற்ற வாணிபக் கொள்கையின் கீழ். ஒட்டுமொத்த உலகமும் அனைத்துப் பொருட்களுக்கும் சந்தையாக இருப்பதால், உலகளாவிய தேவை உருவாக்கப்படுகிறது. பொருட்களுக்கான உலகளாவிய போட்டியின் காரணமாக பொருட்கள் மலிவான விலையில் தரமானதாகவும் தயாரிக்கப்படுகின்றன.

7. ஏகாதிபத்தியங்களின் உருவாக்கத்தைத் தவிர்க்கிறது (Prevents Formation of Monopolies) தடையற்ற வாணிபக் கொள்கையின் கீழ், ஒவ்வொரு நாடும் ஒரு சில பொருட்களின் உற்பத்தியில் தனித்தேர்ச்சி பெறுகிறது நிறுவனங்கள் உத்தம அளவில் இருக்கின்றன. ஆகவே, பொருளின் உற்பத்திச் செலவு குறைவாக இருக்கிறது. போட்டி சுதந்திரமானதாகவம் கட்டுப்பாட்டின்றியும் இருக்கிறது. உலகம் முழுவதும் உள்ள உற்பத்தியாளர்கள் உலகச் சந்தையில் பொருட்களின் புதிய ரகங்களை அறிமுகப்படுத்துகின்றனர். இவை அனைத்தும் ஏகாதிபத்தியம் உருவாவதைத் தவிர்க்கின்றன.

8. புதிய நுட்பங்கள் போன்றவற்றைக் கண்டுபிடிக்க உற்பத்தியாளர்களைத் தூண்டுகின்றது. (Stimulates the producers to Invent New Techniques etc): தடையற்ற வாணிபத்தின் கீழ், வாணிபம், போட்டி ஆகிய இரண்டுமே தரமான பொருட்களை மலிவான வீதங்களில் தயாரிக்க நாடுகளை ஊக்குவிக்கிறது. இது இறுதியில் உயர்ந்த இலாபத்திற்கு வழிவகுக்கிறது. ஆகவே புதிய உற்பத்தி நுட்பங்கள் மற்றும் நடைமுறைகளைக் கண்டுபிடிக்க உற்பத்தியாளர்கள் தூண்டப்படுகின்றனர். மேலும், உற்பத்தியாளர்கள் புதிய சந்தைகளையும், மூலப் பொருட்களின் புதிய ஆதாரங்கள் போன்றவற்றைக் கண்டுணரவும் ஊக்குவிக்கப்படுகின்றன.

9. போக்குவரத்து மற்றும் தகவல்தொடர்பின் மேம்பாட்டினை ஊக்குவிக்கிறது (Encourages the Development of Transport) : தடையற்ற வாணிபத்தின் கீழ், நாடுகளுக்கிடையிலும் நாடுகளுக்குள்ளும் பல்வேறு போக்குவரத்து மற்றும் தகவல்தொடர்பு வழி வகைகளும் ஊக்குவிக்கப்படுகின்றன. தடையற்ற மற்றுடம் மேம்பட்ட போக்குவரத்து மற்றும் தகவல் தொடர்பு வசதிகள் எங்கு உள்ளனவோ அங்கு மட்டுமே உலாகளவிய வாணிபம் சாத்தியமாகும்.

குறிப்பு

10. நாடுகளிடையே பன்னாட்டு ஒத்துழைப்பை ஊக்குவிக்கிறது (Promotes International Co-operation among the Nations): தடையற்ற வாணிபம் இருதரப்பான மற்றும் பல தரப்பான வாணிகப் பிரச்சனைகளைத் தீர்ப்பதற்கு என நாடுகளிடையே ஒத்துழைப்பை ஊக்குவிக்கிறது. தடையற்ற வாணிபத்தின் கீழ், பல்வேறு நாடுகளும் ஒன்று மற்றொன்றுடன் தொடர்பு, ஏற்படுத்திக்கொண்டு, பேச்சு வார்த்தைகளை மேற்கொண்டு பிரச்சனைகளைத் தீர்த்துக்கொள்கின்றன. மேலும், உலக வாணிப அமைப்பு (WTO) போன்ற பன்னாடுசார்ந்த அமைப்புகளும் வாணிப பிரச்சனைகளைத் தீர்த்து, பன்னாடுசார்ந்த ஒத்துழைப்பை மேம்படுத்துவதில் தம்மைத் தாமே ஈடுபடுத்திக் கொள்கின்றன.

11. பொருளதார மேம்பாட்டிற்கான சிறந்த கொள்கை (Ideal Policy for Economic Development): தடையற்ற வாணிபக் கொள்கை பொருளாதார மேம்பாட்டிற்கான சிறந்த கொள்கையாகக் கருதப்படுகிறது. ஏனெனில், இது சில திருத்தங்கள் மற்றும் விலகலுடன் தடையற்ற வாணிபத்திற்கு வாய்ப்பை அளிக்கின்றது. மேலும் இது மேம்பாட்டை பின்வரும் வழிகளில் தீவிரப்படுத்துகிறது.

1. மூலதனப் பொருட்கள் மற்றும் மூலப்பொருட்களின் இறக்குமதி வாய்ப்பை அளிக்கிறது.
2. நாட்டை மேம்படுத்தும் நோக்கில் புதிய கருத்துக்களைப் புகுத்துகிறது. தொழில்நுட்ப அறிவு, ஆற்றல்கள் போன்றவற்றைக் கொண்டு வருகிறது.
3. அயல்நாட்டு மூலதனத்தின் இடப்பெயர்ச்சிக்கு வசதியை ஏற்படுத்தித்தருகிறது.
4. ஆரோக்கியமான போட்டியை ஊக்குவித்து ஏகாதிபத்தியத்தைத் தடுக்கிறது.

### c).தடையற்ற வாணிபத்தின் தீமைகள் (Disadvantages of Free Trade)

தடையற்ற வாணிபத்திற்கு எதிராக எண்ணிக்கையிலடங்காக் கோட்பாடு சார்ந்த மற்றும் நடைமுறை சார்ந்த மறுப்புகள் எழுப்பப்பட்டுள்ளன. அவற்றுள் முக்கியமானவை கீழே தரப்பட்டுள்ளன.

1. தடையற்ற வாணிபம் மற்றும் முழுநிறைவான போட்டியின்மை (Absence of Laisez-faire and Perfect Competition): தடையற்ற வாணிபமும் முழுநிறைவான போட்டியும் தடையற்ற வாணிபக்கொள்கையின் இன்றியமையாத முன் நிபந்தனைகளாகும். ஆனால், நடைமுறையில் இவை காணப்படுவதில்லை. ஆகவே தடையற்ற வாணிபத்தின் நன்மைகள்,

குறிப்பு

கோட்பாட்டளவில் மட்டுமே நிரூபிக்கப்பட்டுள்ளதே தவிர நடைமுறையில் உணரப்படவில்லை என்பதே உண்மை.

2. சமநிலையற்ற மேம்பாடு (Uneven Development) : தடையற்ற வாணிபக் கொள்கையின் கீழ் ஒப்பீட்டு நன்மையைக் கொண்டுள்ள தொழில்கள் மட்டுமே மேம்பாடு அடைகின்றன. ஏனைய தொழில்கள் மேம்படுவது இல்லை. அதாவது, ஒரே ஒரு வகையான தொழில் மட்டுமே மேம்பாடு அடைகிறது. ஏனைய தொழில்கள் தவிர்க்கப்படுகின்றன. இது பொருளாதாரத்தின் ஒரு பக்கமான வளர்ச்சிக்கு வழிவகுக்கிறது. இதற்குப் பல சமூக, பொருளாதார, கலாச்சாரம் சார்ந்த மற்றும் அரசியல்சார்ந்த பின் விளைவுகள் உள்ளன.

3. தரக்குறைவான பொருள்களின் வாணிபத்திற்கான சாத்தியம் (Possibility of Interior Goods to be Traded): தடையற்ற வாணிபக் கொள்கையின் கீழ், பொருட்களின் ஓட்டம் சுதந்திரமாக அனுமதிக்கப்படுகிறது. மற்றும் கட்டுப்பாடுகள் எதுவும் விதிக்கப்படுவதில்லை. ஆகவே, தரக்குறைவான பொருட்கள் உற்பத்தி செய்யப்பட்டு வாணிபமும் செய்யப்பட சாத்தியம் உண்டு. இது சமூகத்தின் நலத்தை பாதிக்கச் செய்துவிடும்.

4. பலத்த போட்டி (Heavy Competition): தடையற்ற வாணிபக்கொள்கையின் கீழ், குறிப்பிட்ட பொருட்களில் ஒப்பீட்டு நன்மையைக் கொண்ட நாடுகள, மற்ற நாடுகளுடன் ஒப்பிடும்பொழுது அப்பொருட்களை மலிவான விலைகளில் தயாரிக்கின்றன. இது உலகச் சந்தையில் கடுமையான போட்டிக்கு வழிவகுத்துவிடுகிறது. அதன் விளைவு நாடுகள் அதன் பொருட்களை உலக சந்தையில் மலிவான விலைகளில் விற்கும்.

5. பன்னாடுசார்ந்த கழகங்கள் மற்றும் ஏகாதிபத்தியங்களின் உருவாக்கம் (Formation of MNCs and Monopolies) : தடையற்ற வாணிபமும் பலத்த போட்டியும் பல வணிக நிறுவனங்களைத் தவிர்த்து விடுகின்றன. இது ஏகாதிபத்தியத்தின் உருவாத்திற்கு வழிவகுத்து விடுகின்றது. ஏகாதிபத்தியத்தின் உருவாக்கம் உள்நாட்டுத் தொழில்களுக்குப் ஏனைய நாடுகளுக்கும் தீங்கு விளைவிக்கும் தன்மையுடையது ஆகும்.

6. வாணிப நெகிழ்வுகளின் பகிர்மானம் (Transmission of Trade Fluctuations). தடையற்ற வாணிபமானது அழுத்தம் (Depression), பண வீக்கம் (Inflation) போன்ற வாணிப நெகிழ்வுகளை நாடுகளிடையே பகிர்கிறது. இது இறுதியில் ஒட்டுமொத்த உலகத்திற்கே பாதிப்பை ஏற்படுத்தி விடுகிறது. வாணிபத் தடைகளால் இவ்விதப் பகிர்மானத்தை ஆற்றலோடு தவிர்க்க முடியும்.

7. அயல்நாடுகளின் மீது அதிகபட்ச சார்பு (Too much Reliance on Foreign Countries): தடையற்ற வாணிபக் கொள்கையின் கீழ், ஒப்பீட்டு நன்மையைக் கொண்டுள்ள பொருட்களையே நாடுகள் உற்பத்தி செய்கின்றன. ஆகவே, இவை தமது கூடுதல் உற்பத்தியை விற்பனை செய்ய அயல்நாடுகளையே நம்பி இருக்கின்றன. தவிரவும், இவை உற்பத்தி செய்யாத பொருட்களைப் பெறவும் மற்ற நாடுகளைப் பெரிதும் நம்பி இருக்கின்றன. இது மிகவும் அபாயகரமானது. குறிப்பாக போர்க்காலங்களில் இதன் அபாயம் மிகவும் பயங்கரமானதாக இருக்கும்.

குறிப்பு

8. வளர்ச்சி குன்றிய நாடுகளைச் சுரண்டுதல் (Exploitation of Lower Developed Countries): தடையற்ற வாணிபமானது வளர்ச்சி குன்றிய நாடுகளில் மேம்பாட்டு நடைமுறையை ஊக்குவிக்கிறது என்ற ஹேபர்லரின் கருத்தை பொருளாதார வல்லுநர்கள் மறுக்கின்றனர். இது ஏனெனில், 19 மற்றும் 20 ஆம் நூற்றாண்டுகளில், தடையற்ற வாணிபமானது வளர்ச்சி குன்றிய நாடுகளைச் சுரண்டிய காட்சி கண்கூடாகக் காணப்பட்ட ஒன்றே ஆகும்.

மேற்கண்ட ஆய்விலிருந்து தடையற்ற வாணிபம் முன்னேற்றமடைந்த நாடுகளுக்கு மட்டுமே பொருத்தமானதாகக் கருதப்படுகிறது. ஆனால் வளர்ந்து வரும் மற்றும் வளர்ச்சி குன்றிய நாடுகளுக்கு தடையற்ற வாணிபத்தில் போட்டியிடுவது கடினமாக இருக்கலாம். இந்தியா ஆங்கிலேயர்களின் பிடியில் இருந்த பொழுது தடையற்ற வாணிபக் கொள்கையைப் பின்பற்றி வந்தது.

## 4.3. உங்கள் முன்னேற்றத்தை சரிபார்க்கும் வினாக்கள்

1.தடையற்ற வாணிபம் என்றால் என்ன?

2.தடையற்ற வாணிபத்தின் நன்மைகளைக் கூறுக.

## 4.4. உங்கள் முன்னேற்றத்தை சரிபார்க்கும் பதில்கள்

1. நாடுகளிடையில் பொருட்களின் ஓட்டத்தைத் தடைப்படுத்தும் சுங்க வரிகள் அளவுசார்ந்த கட்டுப்பாடுகள் (Quantitative Restrictions) மற்றும் ஏனைய கருவிகள் ஏதேனும் எங்கு விதிக்கப்படவில்லையோ அக்கொள்கையே தடையற்ற வாணிபக்கொள்கை எனப்படுகிறது. அதாவது, தடையற்ற வாணிபம் என்பதற்கு பன்னாட்டு வாணிபத்தின் சுதந்திரம் என்று பொருள்.

குறிப்பு

**2. தடையற்ற வாணிபத்தின் நன்மைகள்**

- மூலதனப் பொருட்கள் மற்றும் மூலப்பொருட்களின் இறக்குமதி வாய்ப்பை அளிக்கிறது.
- நாட்டை மேம்படுத்தும் நோக்கில் புதிய கருத்துக்களைப் புகுத்துகிறது. தொழில்நுட்ப அறிவு, ஆற்றல்கள் போன்றவற்றைக் கொண்டு வருகிறது.
- அயல்நாட்டு மூலதனத்தின் இடப்பெயர்ச்சிக்கு வசதியை ஏற்படுத்தித்தருகிறது.
- ஆரோக்கியமான போட்டியை ஊக்குவித்து ஏகாதிபத்தியத்தைத் தடுக்கிறது.

## 4.5. சுருக்கம்

நாடுகளின் இடையில் பொருட்களின் ஓட்டத்தை தடைப்படுத்தும் சுங்க வரிகள் அளவுசார்ந்த கட்டுபாடுகள் மற்றும் ஏனைய கருவிகள் தடையற்ற வாணிப கொள்கையைக்குறிக்கிறது. பண்டைய கால பொருளியல் வல்லுனர்கள் தடையற்ற வாணிபத்திற்கு சாதகமாகவே வாதிட்டனர்.

## 4.6. முக்கிய வார்த்தைகள்

தடையற்ற வாணிபக் காலம், அதிகபட்ச சார்பு

## 4.7. சுய மதிப்பீட்டு பயிற்சி வினாக்கள்

**குறுகிய வினாக்களுக்கு விடையளி.**

1. தடையற்ற வாணிபம் என்றால் என்ன?
2. தடையற்ற வாணிபத்தின் நன்மைகளை கூறுக?

**நெடுவினாக்களுக்கு விடையளி.**

1. இலவச வர்த்தகம் மற்றும் எதிராக வழக்கு பற்றி விவரி.
2. இலவச வர்த்தகம் பற்றி விவரி.

## 4.8. பரிந்துரைக்கப்படும் நூல்கள்

சோடர்சன், B மற்றும் பு.ரீட்(1999),” பன்னாட்டுப் பொருளியல்”, McMillan Press டுவன.இவண்டன்

# அலகு – 5 பாதுகாப்பு: பொருள்



குறிப்பு

## 5.1. பாதுகாப்பு (Protection)

**a).விளக்கம்:**

இன்று நடைமுறையில் தடையற்ற வாணிபம் என்பது அதன் உண்மையான பொருளில் முற்றிலும் காணப்படவில்லை என்பதே உண்மை. பெரும்பாலும் அனைத்து நாடுகளும் ஏதேனும் ஒரு வகையில் கட்டுப்பாடுகளை விதிக்கும் கொள்கையையே பின்பற்றி வருகின்றன.

பாதுகாப்பு என்பதும் ஒரு வகையான வாணிபக் கொள்கையே ஆகும். இதன் கீழ், அயல்நாட்டுப் போட்டியில் இருந்த உள்நாட்டுத் தொழில்கள் பாதுகாக்கப்படுகின்றன. இது பின்வரும் ஏதேனும் முறைகளை பின்பற்றப்படுவதன் மூலம் அடையப்படலாம்.

1. விலை மலிவான பொருட்களின் இறக்குமதி மீது தடைகளை விதிப்பதன் மூலம் உள்நாட்டுப் பொருட்களுக்கான தேவை ஊக்குவிக்கப்படலாம்.
2. உள்நாட்டுப் பொருட்களுக்குச் சமமாக வெளிநாட்டுப் பொருட்களின் விலையை அதிகரிக்கும் நோக்கில் இறக்குமதி வரிகளைச் சுமத்துதல்.
3. இறக்குமதிப் பங்கை நிர்ணயித்தல் அல்லது ஏனைய வரிகளற்ற கட்டுப்பாடுகளான உரிமம் போன்றவற்றை விதித்தலின் மூலம் மலிவான அயல்நாட்டுப் பொருட்களின் இறக்குமதியை சாத்தியமில்லாததாகவோ அல்லது கடினமான பணியாகவோ ஆக்குதல்.

4. மலிவான அயல்நாட்டு பொருட்களுடன் போட்டி போட எதுவாக உள்நாட்டுத் தொழில்களுக்கு உதவி நிதி வழங்குதல்.
5. மற்றும் வீதங்களை (Exchange Rate) மாற்றுதல்.
6. அந்நியச் செலாவணித் தடைகளை அமலப்படுத்துதல்.

குறிப்பு

## 5.2.பாதுகாப்பிற்குச் சாதகமான விவாதங்கள் (Arguments for Protection)

பாதுகாப்பிற்கு ஆதரவாக வைக்கப்பட்ட பல்வேறு விவாதங்கள் பின்வருமாறு.

1. வாணிபத்தின் கூறுகளை மேம்படுத்துகிறது (Improves Terms of Trade): இறக்குமதிகள் மீதான சுங்க வரிகளானது நாட்டின் இறக்குமதிக்கு பரிமாற்றப்படும் ஏற்றுமதிகளின் வீதத்தை நிச்சயம் அபிவிருத்தி செய்யும் என்று நவீனப் பொருளியல் வல்லுநர்கள் வாதிடுகின்றனர். அதாவது, சுங்கவரி வாணிபத்தின் கூறுகளை மேம்படுத்துகிறது. ஏனெனில், இறக்குமதி வரியின் ஒரு பகுதியை அயல்நாட்டு ஏற்றுமதியாளர் அளிக்குமாறு வலியுறுத்தப்படுகிறார். ஆயினும், இது ஒரு நாட்டின் செலுத்தல் சமநிலையில் உள்ள சமனற்ற நிலையைச் சரிசெய்ய உதவுகிறது. வாணிபக் கூறுகளுடைய அபிவிருத்தியின் அளவு உள்நாட்டு மற்றும் அயல்நாட்டுச் சந்தைகளின் தொடர்புடைய அளிப்பு மற்றும் தேவை நெகிழ்வுகளைப் பெரிதும் சார்ந்துள்ளது.
2. வாணிப பேச்சு வார்த்தைகளில் பேரம் பேசுதலை எளிதாக்குதல் (Facilitaties Bargaining in Trade Negotiations): சுங்க வரிச் சுமை மற்ற நாடுகளுடனான வாணிபத்தில் பேரம் பேச உள்நாட்டிற்கு உதவுகிறது. இங்கு மற்ற நாட்டின் சுங்க வரியை குறைக்கத் தூண்டும் ஒரு கருவியாக சுங்க வரி பயன்படுத்தப்படுகிறது. பழிவாங்கப்படுவோம் என்ற பயம் ஒருவர் மற்றவருக்கு பரஸ்பரம் சலுகைகளை வழங்க நாடுகளைத் தூண்டலாம்.
3. குவிக்கப்படுதலைக் களைக்கிறது (Removes the Threat of Dumping) உள்நாட்டுச் சந்தையில் உள்ளதைவிடக் குறைவான விலையில் அயல்நாட்டுச் சந்தையில் பொருள் விற்கப்படுதலே குவிக்கப்படுதல் எனப்படுகிறது. ஆனால் சுங்கவரிகள் அயல்நாட்டு பழம்பொருட்கள் உள்நாட்டுச் சந்தையில் குவிக்கப்படுதலைப் தவிர்ப்பதையே நோக்கமாகக் கொண்டுள்ளது.
4. உள்நாட்டுத் தொழில்கள் பரவலாக்கப்படுதலை ஏதுவாக்குகிறது (Enables the Diversification of Home Industries): பாதுகாப்பானது பல தொழில்களின்

குறிப்பு

மேம்பாட்டை ஊக்குவிக்கிறது. தடையற்ற வாணிபத்தின் கீழ், ஒப்பீட்டு நன்மையைக் கொண்டுள்ள தொழில்கள் மேம்பாடு அடையும். ஆனால் மற்ற தொழில்கள் தவிர்க்கப்படும். இது ஒரு பக்கமான மேம்பாட்டிற்கு வழிவகுத்து விடும். இது நாட்டிற்கு நல்லதல்ல. பொருளாதார வளர்ச்சி சமநிலையானதாக இருக்க வேண்டும். அப்பொழுதான் பொருளாதாரத்தின் அனைத்துத் துறைகளும் வளர்ச்சியுறும் ஆயினும், பாதுகாப்பு மட்டுமே பொருளாதாரத்தை பரவலாக்கும் ஒரே வழிவகை அல்ல. இது வேறு பல காரணிகளையும் சார்ந்துள்ளது.

5. தொழில்களின் தொடக்கப் பருவத்தில் பாதுகாப்பை ஏதுவாக்குதல் (Facilitates Protection of Infant Industries) புதிதாகத் தொடங்கப்படும் தொழில்கள் குழந்தைகளைப் போலக் கையாளப்பட்டுப் பாதுகாக்கப்பட வேண்டும். அவை வளரவும் வளர்ந்த தொழில்களுடன் போட்டியில் வகையில் சக்தியைப் பெறவும் அனுமதிக்கப்பட வேண்டும். அயல்நாட்டுப்போட்டி நிச்சயமாகப் புதிய தொழில்களைக் கொன்று விடும்.பயிற்சி பெற்ற தொழிலாளர்களின் சேவைகள், மூலதனம், உற்பத்தி நுட்பம், போன்றவற்றைப் பெறவும், பணியாளர்களுக்கு தனிச்சிறப்பு பெற்ற அறிவை அளிக்கவும், கொஞ்சம் கால அவகாசம் தேவைப்படுகிறது. நன்கு வளர்ந்து விட்ட அயல்நாட்டுக் கம்பெனிகளால் அவற்றின் பொருட்களை மலிவான விலையில் அளிக்க முடியும். அதனால் அவை புதிதாகத் தொடங்கப்பட்டுள்ளன. தொழில்களை அழித்துவிட வாய்ப்பு உள்ளது. ஆகவே, புதிதாகத் தொடங்கப்பட்ட தொழில்களுக்குப் பாதுகாப்பு அளிப்பது அவசியம். இந்த விவாதம் மார்ஷல், பிகு போன்ற பொருளியல் வல்லுநர்களின் அங்கீகாரம் பெற்றது.

6. போட்டித்தன்மையை மறுபடியும் பெறவும் தன்னை மறுபடியும் உருவாக்கிக்கொள்ளவும் வசதிவாய்ப்புகளை அளித்தல் (Provides Facilities for Re-equipping and Regaining Competitivenes): போட்டித்தன்மையை இழந்த தொழில்களைத் தற்காலிகமாகப் பாதுகாக்க சுங்க வரிகள் பயன்படுத்தப்படலாம். இது அவற்றை போட்டித்தன்மையை மறுபடியும் பெறவும், தன்மை மறுபடியும் உருவாக்கிக் கொள்ளவும் அவைகளுக்கு உதவும் இல்லையெனில், இது நாட்டில் வேலையில்லாத் திண்டாட்டம் ஏற்பட வழிவகுத்துவிடும்.

7. முக்கியமான தொழில்களின் பாதுகாப்பிற்கு உதவுதல் (Helps in the Protection of Key Industries): விவசாயம், இரும்பு மற்றும் எஃகு போன்ற

முக்கியமான தொழில்களுக்குப் பாதுகாப்பு மிகவும் இன்றியமையாதது ஆகும் ஏனெனில், இதுவே எந்த நாட்டிலும் அதன் வாணிபக் கொள்கையின் முதன்மை நோக்கமாக இருக்க முடியும்.

குறிப்பு

8. அரசிற்கு ஆதாயத்தை உருவாக்குகிறது (Generatrs Revenue for the Government): சுங்க வரிகள் அரசிற்கு ஆதாயத்தைப் பெருக்க உதவுகின்றன. உள்நாட்டுத் தொழில்களை அயல்நாட்டுப் பொருட்களின் போட்டியிலிருந்து பாதுகாக்கின்றன. குறிப்பாக, வளர்ச்சி குன்றிய நாடுகளில், ஆதாய வசூலே சுங்க வரிகளின் முதன்மையான நோக்கமாகும். ஆயினும், இது உள்நாட்டுத்தொழில்களைப் பாதுகாக்கும் நோக்கிலேயே பயன்படுத்தப்பட வேண்டுமே அன்றி ஆதாயம் பெறும் நோக்கில் அல்ல, இல்லையெனில் இது சில பாதகமான விளைவுகளுக்கு வழிவகுத்து விடும்.

9. வளர்ச்சியுற்ற நாடுகளில் உயர் தொழில்நுட்பத் தொழில்களைப் பாதுகாக்கிறது (Protects High technology industries in Developed Nations) தகவல் தொழில்நுட்பம், தொலை தொடர்புகள், கணிப்பொறி போன்ற உயர் தொழில்நுட்பத் தொழில்கள் அனைத்தும் மிகவும் அபாயகரமானவை மட்டுமல்லாமல் அவை உயர் வளர்ச்சி வாய்ப்பையும் கொண்டுள்ளன. அவ்விதத் தொழில்கள் சுங்க வரிகளை மூலம் பாதுகாக்கப்படுதல் வேண்டும்.

10. இயற்கை வளங்களைச் சேமிக்கிறது (Conserves Naturel Resources) பயன்படுத்தித் தீர்ந்து போகின்ற இயற்கை, வள ஆதாரங்களான நிலக்கரி, மைக்கா, மாங்கனிசு போன்றவற்றின் சேமிப்பிற்கு சுங்க வரிகள் உதவுகின்றன. அதன் மூலம் இயற்கை நாம் நாட்டின் வளர்ச்சிக்கு என உள்நாட்டிலேயே பயன்படுத்தலாம். இது இவ்வள ஆதாரங்களின் மீது அதிக ஏற்றுமதி வரிகளை விதிப்பதன் மூலம் நிறைவேற்றப்படலாம்.

11. உயர்ந்த கூலி வீதங்களை அளிக்கிறது (Failitates High Rates of Wage) குறைந்த கூலி வீத இறக்குமதிப் பொருட்களிலிருந்து அதிகக் கூலி வீத உள்நாட்டுப் பொருட்களைப் பாதுகாக்கும் கருவியாகவும் சுங்க வரிகள் பயன்படுத்தப்படலாம்.

12. உள்நாட்டுச் சந்தையைப் பரவலாக்குகிறது (Widenws Home Market) சுங்க வரிகள் உள்நாட்டில் உற்பத்தியை ஊக்குவித்து ஏற்றுமதியைத் தவிர்த்து உள்நாட்டுச் சந்தையை விரிவுபடுத்துகின்றன. ஆயினும், உள்நாட்டுச் சந்தையானது ஏற்றுமதிக்கான அயல்நாட்டுச் சந்தையின் இழப்பிலேயே விரிவுடுத்தப்படுகிறது.

13. உள்நாட்டில் பணத்தைத் தக்க வைக்கிறது (Retains Money Home): பாதுகாப்பின் கீழ், மக்கள் மறைமுகமாக உள்நாட்டிலேயே பொருட்களை வாங்கத் தூண்டப்படுகின்றனர். இது பொருள், பணம் ஆகிய இரண்டையுமே உள்நாட்டிலேயே தக்க வைக்கிறது. மாறாக நாம் பொருட்களை வெளி நாட்டிலிருந்து வாங்கினால், நாம் பொருட்களைப் பெற்றுக்கொள்கிறோம். அயல்நாட்டவர் பணத்தைப் பெற்றுக்கொள்கின்றனர். ஆயினும், இவ்விவாதம் பொருத்தமாக இல்லை. ஏனெனில் ஒவ்வொரு நாடும் இவ்விதியைப் பின்பற்றினால் பன்னாட்டு வாணிபமே இருக்காது.

14. போர்க்காலங்களில் நாடுகளைக் காக்கிறது (Protects Countries in Times of War): ஒரு நாடு விவசாயம் சார்ந்த மற்றும் தொழில்சார்ந்த பொருட்களுக்கு மற்ற நாடுகளைச் சார்ந்திருக்கும் பட்சத்தில் போர்க்காலங்களில் அதன் நிலை பரிதாபகரமாக இருக்கும். ஆகவே, நாட்டின் பாதுகாப்பிற்கென தேவைப்படும் குறிப்பிட்ட பொருட்களின் உற்பத்தியில் நட்டம் ஏற்பட்டாலும் கூட முடிந்தவரை தன்னிறைவு பெறுதல் அவசியம்.

நாட்டின் பாதுகாப்பிற்கென முழுமையான தன்னிறைவு என்பது வாதத்திற்கு வேண்டுமானால் பொருத்தமாக இருக்கலாமே தவிர, அது நடைமுறையில் சாத்தியமாகாது. ஏனெனில் அது உள்நாட்டுத் தொழில்களின் திறமையின்மை, பன்னாட்டு வாணிபத்திலிருந்து கிடைக்கும் ஆதாயத்தின் இழப்பு போன்றவற்றில் கொண்டு விட்டு விடும். ஆகவே, போர்க் கருவிகளின் தயாரிப்பில் ஈடுபடும் தொழில்களைப் மட்டுமாவது முழமையான பாதுகாப்பின் கீழ் கொண்டு வருவது அவசியம்.

15. தன்னிறைவு பெறுதல் (Attaining Self-sufficiency) தன்னிறைவு பெறும் நோக்கிலும் பாதுகாப்பு பரிந்துரைக்கப்படுகிறது. பொருளாதாரத்தில் தன்னிறைவைப் பெற விரும்பும் ஒரு நாடு அதன் தயாரிப்புத் தொழில்களை மேம்படுத்திக் கொள்தல் வேண்டும். சமீப காலங்களில், உலகின் பல நாடுகளில் தன்னிறைவுத் திட்டங்கள் நிறுவப்பட்டன. அயல்நாடுகளிலிருந்து பலத்த போட்டி அபாயம் இருக்கிறது. ஆகவே, இறக்குமதிப் பொருட்கள் மீது சுங்கவரிகள் விதிக்கப்பட வேண்டும். தன்னிறைவு பெறவும் தன் சொந்தக்காவில் வரிகள் விதிக்கப்பட வேண்டும். தன்னிறைவு பெறவும் தன் சொந்தக்காலில் நிற்கவும் இக்கட்டம் ஒரு நாட்டிற்கு உதவி புரியும் என்பதில் ஐயமில்லை.

குறிப்பு

16. பயன்படுத்தாமல் இருக்கும் வள ஆதாரங்களின் பயன்பாடு (Utilisatrion of Idle Resource): தடையற்ற வாணிபத்தில் கீழ் சில தொழில்கள் மட்டுமே மேம்படும், சில மூலப்பொருட்கள் மட்டுமே பயன்படுத்தப்படும் ஏனைய வளங்கள் பயன்படுத்தப்படாமல் வீணடிக்கப்படும். ஆகவே, ஒரு புறமான மேம்பாடு ஏற்படும். பாதுகாப்புக் கொள்கை பின்பற்றபட்டால், வீணாக இருக்கும் வள ஆதாரங்கள் பயன்படுத்தப்படும் ஒட்டுமொத்த வளர்ச்சி ஏற்படும்.

இவ்விதமாக மதிப்புமிக்க விவாதங்கள் பாதுகாப்பிற்கு சாதகமாக முன் வைக்கப்பட்டாலும் பாதுகாப்பிற்கு என சில குறைபாடுகளும் உள்ளன. பாதுாப்பின் தீமைகள் தடையற்ற வாணிபத்தின் நன்மைகளாகும். தேவையற்ற பாதுகாப்பு அல்லது தேவையற்ற தடையற்ற வாணிபம் இரண்டுமே ஒரு நாட்டின் வளர்ச்சிக்குப் பயன்படாது. ஆகவே இரண்டிற்கும் இடைப்பட்ட ஒரு கொள்கையே பின்பற்றப்பட வேண்டும். நமது நாடு இடைப்பட்டக் கொள்கையையே பின்பற்றி வருகிறது.

### c).பாதுகாப்பிற்கு எதிரான வாதங்கள் Arguments Against Protection

பாதுகாப்பிற்கு எதிராக முன் வைக்கப்பட்ட வாதங்கள் கீழே தொகுத்து வரையப்பட்டுள்ளன:

1. உள்நாட்டுத் தயாரிப்பாளர்கள் தொழிலை வளர்ப்பதில் ஆர்வமும் உற்சாககமும் இன்றிக் காணப்படுகின்றனர். இவர்கள் பாதுகாப்பை ஒரு உரிமையெனக் கோருகின்றனர். ஆகவே, இவர்கள் தங்களின் புதிய நடவடிக்கைகளை கருத்தோடும், கவனமாகவும், தீவிரமாகவும் முயற்சித்து மேற்கொள்வதில்லை. உற்பத்தி நடைமுறை, நுட்பம் போன்றவற்றில் புதிய கண்டுபிடிப்புகளையும் கொண்டு வர முயற்சிப்பதில்லை. இவ்வித சூழல் தொழில்களின் வளர்ச்சிக்கு ஏற்றதல்ல.
2. பாதுகாப்பின் கீழ், நுகர்வோர் நல்னகள் கருத்தில் கொள்ளப்படுவதே இல்லை. ஏனெனில், இவர்கள் பாதுகாக்கப்படும் தொழில்களினால் தயாரிக்கப்படும் பொருட்களுக்கு அதிக விலைகளை அளிக்கின்றனர்.
3. நாளடைவில் ஏனைய நாடுகளும் அவற்றின் பாதுகாப்புச் கொள்கையை பழிவாங்கும் நோக்கில் மாற்றியமைத்து விடலாம். ஆனால் இறுதியில் உள்நாட்டுத் தொழில்களைப் பாதித்து விடலாம்.
4. பாதுகாப்பின் கீழ், காரணி அலகுகள் கட்டாயத்தின் பேரில் அளவு மீள் வருகையைப் பெறுகின்றன. இது தன்னிச்சையாக கிடைப்பதில்லை.

இவை தவிர தடையற்ற வாணிபத்தின் அனைத்து நன்மை குறைபாடுகளாக எடுத்துக் கொள்ளப்படலாம்.

## 5.3.வர்த்தகத்தின் வளர்ச்சியின் விளைவு

**தொழிலாளர் சேமிப்பு கண்டுபிடிப்பு விளைவு :**

மூலதனம், தீவிர தொழிற்துறையில் ஒரு உழைப்பு மற்றும் சேமிப்பு தொழில்நுட்ப வளர்ச்சியைப் பொறுத்தவரையில், புதுமையான நன்மைகளின் அதிகரிக்கும் அல்லது குறைக்கப்படலாம். எனவே துல்லியமான தத்துவார்த்த மதிப்பீடு சாத்தியமானால், வர்த்தகத்தின் அடிப்படையில் எந்த உறுதியான விளைவுகளையும் நாம் பார்க்க முடியாது.

வடிவியல் மாதிரியில், தொழிற்சாலை சேமிப்பு தொழிற்சாலை சேமிப்பு தொழில்நுட்ப முன்னேற்றத்தை Y தொழில் வழக்கில் ஏற்படுத்தும் போது, ஒரு புதிய மாறிவரும் ஒரு மாற்றம் கொண்ட சாய்வுடன் , தோற்றம் நோக்கி நகர்ந்து கொண்டே இருக்கும் . பின்னர் , மூலதன விலை (P. K) விலை உயரும். ஏனென்றால், Y (மூலதன–தீவிர) துறையில் தொழில்நுட்ப கண்டுபிடிப்புகள் ஏற்படுகையில், தயாரிப்பாளர்கள், Y இன் உற்பத்தியை அதிகரிக்கச் செய்வதால், AT இன் தேவை அதிகரிக்கும். மேலும் மூலதன உற்பத்தித்திறன் அதிகரிக்கிறது. மேலும் மூலதன உயர்வுக்கான கோரிக்கையும், இது PK ஆக உயரும். புதிய காரணி விலை வரி P பெறுகிறது. புதிய சமநிலைப் புள்ளிகள் Z மற்றும் M ஆகியவை A தொழிற்துறையிலும் தொழிற்நுட்பத்திலும் இல்லை.(ஆனால் மூலதனத்தின் உயர் விலைக் கணக்கின் காரணமாக, உழைப்பு தீவிர முறை ஏற்றுகொள்ளப்பட்டது) என்பதாக தோன்றுகிறது. இருப்பினும் மூலதனத்தின் உழைப்பு தொழிற்நுட்ப முன்னேற்றம் காரணமாக, உற்பத்தியாளர்கள் உற்பத்தி மூலதன – ஆற்றல் நுட்பத்தை தத்தெடுக்க தூண்டபடலாம். இந்த போக்கு மிகவும் உயர்ந்ததாக இருந்தாலும், மூலதன-தீவிர முறையால் செய்யப்பட்ட பயன்பாடாகும். ஆனால் கண்டுபிடிப்புகள் இன்னும் செலவுகளை குறைக்க வேண்டும் என்றால், Y “Y” isoquant இலிருந்து காணப்படுவது போல், கதை வித்தியாசமாக இருக்கும். பின்னர் புதிய காரணி விலை வரி P பெறுகிறது. புதிய சமநிலை புள்ளிகள் Z மற்றும் M ஆகியவை “தொழில்துறையிலும், தொழில்நுட்பத்திலும் இல்லை (ஆனால் மூலதனத்தின் உயர் விலைக் கணக்கின் காரணமாக, உழைப்பு – தீவிர முறை ஏற்றுக்கொள்ளப்பட்டது) என்பதாக தோன்றுகிறது. இருப்பினும், மூலதனதனத்தின்

குறிப்பு

உழைப்பு தொழில்நுட்ப முன்னேற்றம் காரணமாக, உற்பத்தியாளர்கள் உற்பத்தி மூலதன – ஆற்றல் நுட்பத்தை தத்தெடுக்க துண்டபடலாம். இந்த போக்கு மிகவும் உயர்ந்ததாக இருந்தாலும், மூலதன – தீவிர முறைகளால் செய்யபட்ட பயன்பாடாகும். ஆனால் கண்டுபிடிப்புகள் இன்னும் செலவுகளை குறைக்க வேண்டும் என்றால் , Y “Y” isoquant இலிருந்து காணப்படுவதுபோல், கதை வித்தியாசமாக இருக்கும். பின்னர் , புதிய காரணி விலை வரி $P_2$ ஆக இருக்கும் , அதாவது உழைப்பு தொடர்பான மூலதனத்தின் மிக அதிக செலவு ஆகும். X தொழிற்துறையில் தொழிலாளர் உழைப்பு முறையை பின்பற்றவும் (சமநிலைப் புள்ளி M பார்க்கவும்). அதேபோல், சமநிலைப் புள்ளி Z என்பது Y தொழிற்சாலைகளிலும், மேலும் உழைப்பு தீவிர நுட்பம் பயன்படுத்தப்படும், மூலதனத்தின் உற்பத்தி செயலில், Y இல் Y மற்றும் OM இல் O மற்றும் ‘OM’ ஆல் காட்டப்பட்டுள்ளது. Y இன் தொழில்நுட்ப முன்னேற்றத்தால் துண்டபட்டது. நாட்டில் உழைப்பு தீவிர முறையுடன் Y அதிக உற்பத்தி செய்யும் போது, X இன் தொழிலாளர் உழைப்பு குறைகிறது. X க்கு அதிகமான தேவை இருப்பதால் X விலை உயரும்.

இப்போது, நாட்டின் ஏற்றுமதி பொருட்கள் மற்றும் X அதன் இறக்குமதி பொருட்கள் என்பதாக இருந்தால், நாட்டின் வர்த்தகச் சொற்கள், Y இன் (ஏற்றுமதி செய்யப்படும்) விலையுயர்ந்த உள்நாட்டு விலையின் காரணமாக சாதகமற்றதாக தீர்க்கப்படும், இதனால் அதன் வெளிநாட்டுக் கோரிக்கையின் சுருக்கத்தை அதிகரிக்கும் மற்றும் அதிகரிக்கும் X க்கான உள்நாட்டு தேவை அதன் உயர் இறக்குமதி கோரிக்கை காரணமாக இந்த நிகழ்வில், நாட்டின் சலுகை அளிப்பு ஏற்றுமதியாளரின் குறிப்பிட்ட அளவுக்கு ஏற்றுமதியாளர்களுக்கு அதிக அளவு அளிக்கும் ஏற்றுமதி அச்சுக்கு மாற்றப்படும். எவ்வாறிருப்பினும், Y என்பது இறக்குமதி மாற்றீடாக இருந்தால், இந்த வரிசையில் தொழில்நுட்ப முன்னேற்றம் நாட்டில் பேரம் பேசும் நிலையை மேம்படுத்தும், அதன் வர்த்தக நிலை மேலும் மேம்படும். இருப்பினும் நடுநிலை கண்டுபிடிப்புகளால் ஏற்பட்டுள்ள வர்த்தகம் தொடர்பான விதிகளின் திசையில், ஏற்றுமதி மற்றும் இறக்குமதியின் தேவையை அதிகரிப்பதுடன், மற்ற காரணிகளுடன் மேலும் சார்ந்துள்ளது. ஆறக்குமதி பொருட்களுக்கான தேவைக்கான வருவாய் நெகிழ்ச்சித்தன்மை ஒற்றுமையைக் காட்டிலும் குறைவாக இருந்தால், வர்த்தக அடிப்படையில் சரிவு குறைவாகவே இருக்கும், வர்த்தகத்தில் முன்னேற்றம் என்பது சாதகமான விடயமாக இருக்கும்.

குறிப்பு

**மூலதன — சேமிப்பு தொழில்நுட்ப முன்னேற்றத்தின் விளைவு:**

மூலதன- சேமிப்பு தொழில்நுட்ப முன்னேற்றம், மூலதன-உன்னதமான உற்பத்தியின் உற்பத்தியில் சேர்ந்திருந்தால், ஒரு நாட்டில் வர்த்தகத்தின் சாதகமற்ற விதிகளுக்கு வழிவகுக்கும். தொழில்நுட்ப முன்னேற்றம் இறக்குமதி மாற்று தொழிற்துறை தொடர்பானது (மூலதன-தீவிர துறைக்கு சொந்தமானது), மூலதன- சேமிப்பு கண்டுபிடிப்புகளின் அடிப்படையில் வர்த்தகத்தின் விதிமுறைகள் மேம்படுத்தப்படும். இந்த உதாரரணத்தை விளக்க, எற்கள் உத்தி மாதிரியில், மூலதன- சேமிப்பு புதுமை ஏற்படுகையில், உழைப்பின் ஓரளவு உற்பத்தி அதிகரிக்கிறது. மாறாத காரணி விலைகளில் உற்பத்தியின் முறையானது உழைப்பு தீவிரமாக இருக்கும். பொருட்களின் விலைகள் நிலையானதாக இருக்க வேண்டும் என்றால், மூலதனத்தின் ஆதார விலையில் காரணி விலைகள் மாற்றப்பட ஆவண்டும், எனவே மூலதனமானது மிகவும் அன்பாக மாறிவிட்டது, உற்பத்திளாளர்கள் உற்பத்தித் தொழில்களில் உழைக்கும்ட தீவிர நுட்பங்களை நாடவேண்டும். தொழில்நுட்ப சுருக்கமாக மூலதன- தீவிர துறையின் உழைப்பு — சேமிப்பு தொழில் நுட்ப முன்னேற்றம் அதிகரிக்கும். மூலதனத்தின் ஒப்பீட்டு விலையில் உழைப்பு மற்றும் விகிதம் என்பது உழைப்பு தீவிர உற்பத்திக்கு விழும் துறை ஆகும். மூலதன- தீவிர தொழிற்துறையில் அதிக விகிதம் Y தயாரிப்பு குறைவு என்று பொருள்: ஆனால் ஒரு குறைந்த தொழிலாளர் தீவிர தொழிற்துறையில் அதிக விகிதம் நிலையான விலைகளில் X உற்பத்தி அதிகரிப்பு உன்று அர்த்தம். இதனால், 7 (அதிகரித்த வருமானம் மற்றும் ஒப்பந்த வெளியீடு காரணமாக) அதிகமான தேவை இருக்கும், Y இன் விலை (X)விலை X-(PX) விலையுடன் உயரும் . இருப்பினும், கண்டுபிடிப்புகளால் ஏற்படும். எனவே இது தொடர்பாக ஒரு தீர்மானமான முடிவுக்கு வர முடியாது. மறுசீரமைக்க தொழில்நுட்ப முன்னேற்றம் உற்பத்தி காரணிகளின் குறுகலான உற்பத்தித் திறன்களை பாதிக்கிறது. ஒரு காரணியின் விளைபொருளானது கண்டுபிடிப்பு கணக்கில் எழும் போது இந்த காரணிக்கு அதிகமான விகிதம் புதிய கண்டுபிடிப்புத் தொழிற்துறையை விட புதுமைபடுத்தும் தொழிற்துறையில் பயன்படுத்தபடுகிறது. இதன் விளைவாக, காரணிகளின்மறு ஒதுக்கீடு குறு விவசாய உற்பத்திகளின் முழுமையான மதிப்பின் மாற்றத்தை சார்ந்துள்ளது. தொழில்நுட்ப முன்னேற்றம் இரு காரணிகளின் (இரண்டு-காரணி உற்பத்தி செயல்பாடுகளில்), உற்பத்தி மற்றும் உறவினங்களின் விலைகள் மற்றும் வர்த்தகம் தொடர்வான விதிமுறைகள் ஆகியவற்றின் ஓரளவு உற்பத்தி அதிகரிக்கும் போது காரணிகளில் ஒன்று அல்லது இரண்டு காரணிகளும்

வீழ்ச்சியடைந்து விட்டால் வணிகத்தின் விதிமுறைகளின் விளைவாக ஏற்படும் நிகழ்வு உறுதியாக இருக்காது.

குறிப்பு

இறக்குமதி விநியோகத்(supply) துறையில் உள்ள தொழில்நுட்ப முன்னேற்றம் எப்போதும் நாட்டின் உண்மையான வருமானம் மீது சாதகமான விளைவைக் கொண்டிருப்பதாக கூறுகிறது. அது ஏற்றுமதிதுறை விஷயத்தில் அவ்வளவாக இருந்தால் மற்றும் புதுமைகளால் காரணிகளின் ஓரளவு உற்பத்தித்திறன் குறைந்தால் இது தேசிய வருவாயில் நேர்மறையான விளைவைக் கொண்டிருக்கும் ஆனால் ஏற்றுமதி சார்ந்த கண்டுபிடிப்புகளால் ஏற்படும் அதிகரித்த ஓரளவு உற்பத்தி உண்மையான வருவாயில் ஒரு எதிர்மறை விளைவை ஏற்படுத்துகிறது.

## 5.4.உங்கள் முன்னேற்றத்தை சரிபார்க்கும் வினாக்கள்

1. பாதுகாப்பு என்றால் என்ன?
2. மூலதன- சேமிப்பு தொழில்நுட்ப முன்னேற்றத்தின் விளைவு என்ன?

## 5.5.உங்கள் முன்னேற்றத்தை சரிபார்க்கும் பதில்கள்

**1.** பாதுகாப்பு என்பதும் ஒரு வகையான வாணிபக் கொள்கையே ஆகும். இதன் கீழ், அயல்நாட்டுப் போட்டியில் இருந்த உள்நாட்டுத் தொழில்கள் பாதுகாக்கப்படுகின்றன. இது பின்வரும் ஏதேனும் முறைகளை பின்பற்றப்படுவதன் மூலம் அடையப்படலாம்.

**2.** மூலதன- சேமிப்பு தொழில்நுட்ப முன்னேற்றம், மூலதன-உன்னதமான உற்பத்தியின் உற்பத்தியில் சேர்ந்திருந்தால், ஒரு நாட்டில் வர்த்தகத்தின் சாதகமற்ற விதிகளுக்கு வழிவகுக்கும். தொழில்நுட்ப முன்னேற்றம் இறக்குமதி மாற்று தொழிற்துறை தொடர்பானது (மூலதன-தீவிர துறைக்கு சொந்தமானது), மூலதன- சேமிப்பு கண்டுபிடிப்புகளின் அடிப்படையில் வர்த்தகத்தின் விதிமுறைகள் மேம்படுத்தப்படும்.

## 5.6.சுருக்கம்

பாதுகாப்பு என்பதும் ஒருவகையான வாணிப கொள்கையே ஆகும். உள்நாட்டு பொருளுக்கு சமமாக வெளிகாட்டு பொருள்களின் விலையை அதிகரிக்கும் நோக்கில் இறக்குமதி வரிகளை சுமத்துதல் இவை தவிர தடையற்ற வாணிபத்தின் அனைத்து நன்மை குறைபாடுகளாக எடுத்து கொள்ளலாம்.

## 5.7.முக்கிய வார்த்தைகள்

மூலதன- சேமிப்பு தொழில்நுட்ப முன்னேற்றம், தொழிலாளர் சேமிப்பு கண்டுபிடிப்பு விளைவு

## 5.8.சுய மதிப்பீட்டு பயிற்சி வினாக்கள்

**குறுகிய வினாக்களுக்கு விடையளி.**

1. பாதுகாப்பு என்றால் என்ன?
2. மூலதன- சேமிப்பு தொழில்நுட்ப முன்னேற்றத்தின் விளைவு என்ன?

குறிப்பு

**நெடுவினாக்களுக்கு விடையளி.**

1.பாதுகாப்பு மற்றும் பாதுகாப்புக்கான மற்றும் எதிரான வாதங்களைக் கூறுக.

2. வர்த்தகத்தின் வளர்ச்சியின் விளைவினை விவரி.

## 5.9.பரிந்துரைக்கப்படும் நூல்கள்

சால்வத்தூர் D.(2007), "பேரியல் பொருளாதாரம்"இ Wiley India, புது டெல்லி

# அலகு – 6 தொழில்நுட்ப முன்னேற்றம் மற்றும் வர்த்தகம்

குறிப்பு



## 6.1. தொழில்நுட்ப முன்னேற்றம் மற்றும் வர்த்தகம்

**தொழில் நுட்பமுன்னேற்றம் மற்றும் வர்த்தகம்: Technical Progress and Trade**

நவீன உலகானது மிகவும் இயந்திரமயமாக்கபட்ட உலகமாகும். இது தொழில்நுட்ப முன்னேற்றம் மூலம் வடிவமைக்கப்பட்டுள்ளது. நவீன பொருளாதார சமூகங்களின் விரைவான முன்னேற்றம் தொழில்நுட்ப மற்றும் விஞ்ஞான முன்னேற்றத்தால் ஏற்பட்ட மாற்றங்களால் சாத்தியமானது. இருப்பினும், தொழில்நுட்ப முன்னேற்றம் சர்வதேச அளவின் அளவையும் முறைமையும் ஒரு பெரிய அளவிற்கு பாதிக்கக்கூடும் என்பதை இது அங்கீகரிக்க வேண்டும். தொழில் நுட்ப முன்னேற்றம் உற்பத்தி செயல்பாடு, உறவின் செலவு விலை அமைப்பு, ஆதாரமுறைகளின் வளங்களைப் பயன்படுத்துதல் ஆகியவற்றுடன், வெளிநாட்டு வர்த்தகத்தின் மீதான அதன் விளைவு மிகவும் முக்கியத்துவம் வாய்ந்ததாக இருக்கும்.

## 6.2. நடுநிலை, மூலதனம், சேமிப்பு, தொழிலாளர் சேமிப்பு

**a)நடுநிலை, தொழில் சேமிப்பு, மூலதன சேமிப்பு Neutral, Capital Saving, Labour Saving**

**தொழில் நுட்ப முன்னேற்றத்தின் வகைகள்:**

(a) நடுநிலை தொழில்நுட்ப முன்னேற்றம்:

குறிப்பு

இது ஒரு நடுநிலை கண்டுபிடிப்பை குறிக்கிறது. Hicks இதை வைத்து, இரண்டு காரணி உற்பத்தி செயல்பாடுகளைக் கூறியுள்ளார். அவை உழைப்பு மற்றும் மூலதனம். அதே விகிதத்தில் இரு காரணிகளின் ஓரளவு உற்பத்தித் திறனை உயர்த்துவது நடுநிலை கண்டுபிடிப்புகளின் விளைவு ஆகும். எனவே நடுநிலை தொழில்நுட்ப முன்னேற்றம் தொழிலாளர்களுக்கும் மூலதனத்திற்கும் இடையேயான உறவை பாதிக்காது.

(b) தொழில் சேமிப்பு தொழில் நுட்ப முன்னேற்றம்

அளவு கோலை பயன்படுத்தி, உழைப்பு சேமிப்பு தொழில்நுட்ப முன்னேற்றம் மூலதனத்திற்கு ஒப்பீட்டளவில் உழைப்பின் குறு விவசாய உற்பத்தி அதிகரிக்கும் உற்பத்தி செயல்முறையில் இந்த தொழில்நுட்ப முன்னேற்றம் மற்றும் மாற்றத்தை வரையறுக்கலாம். தொழிலாளர் சேமிப்பு கண்டுபிடிப்புகளின் கீழ், உற்பத்தி செயல்பாடு மூலதனத்தின் அளவு அதிகரித்து, உழைப்பின் உள்ளீடு குறைக்கப்படுகிறது.

(c) மூலதன சேமிப்பு தொழில்நுட்ப முன்னேற்றம்:

இது வேலைதிட்டத்தை குறிக்கிறது. இது ஒப்பீடாக ஒப்பீட்டளவில் குறுக்கு உற்பத்தித் திறனை அதிகரிக்கச் செய்கிறது. உற்பத்தி செயல்பாடுகளின் மூலதன சேமிப்பு கண்டுபிடிப்புகளின் விளைவு மூலதனத்தின் உள்ளீட்டை குறைப்பதோடு, உழைப்பின் குவாண்டம் அதிகரிப்பதாகும். தொழில்நுட்ப முன்னேற்றம் மற்றும் வர்த்தகம் தொடர்பான விதிமுறைகள் தொழில்நுட்ப முன்னேற்றம் உற்பத்தித் தொழிற்சாலை உள்ளீடுகளை பாதிக்கும். ஒரு நாட்டினுடைய வர்த்தகத்தின் விதிகளை பாதிக்கலாம். இது எப்படி நடந்து கொள்வது. நாம் கீழே ஆராய்வோம்.

**நடுநிலை தொழில்நுட்ப முன்னேற்றத்தின் விளைவு:**

ஒரு நாட்டின் ஏற்றுமதி துறைகளில் நடுநிலை தொழில் நுட்ப முன்னேற்றம் நடைபெறுகிறது, என்றால் நாட்டிற்கான வர்த்தக விதிமுறைகள் மோசமடையக்கூடும், அதே நேரத்தில் நாட்டின் இறக்குமதி மாற்றீடுகளில் தொழில்நுட்ப சார்பு அதன் வர்த்தகத்தை மேம்படுத்த உதவுகிறது.

ஒரு நாட்டிற்கு பன்னாட்டு வாணிபத்தில் இருவகை விலைகள் இருக்கின்றன. ஒன்று இறக்குமதிப் பொருட்களுக்கு அது தரவேண்டிய உலக விலைகள் மற்றொன்று ஏற்றுமதிப் பொருட்களுக்குரிய உலக விலைகள்,

குறிப்பு

இரண்டுக்கும் உள்ள தொடர்பை வாணிப வீதங்களிலிருந்து தெரிந்து கொள்கின்றோம். வாணிப வீதத்தில் ஏற்படுகின்றன. மாற்றங்களுக்கும் ஒரு நாட்டின் பொருளாதார வாழ்விற்கும் நெருங்கிய தொடர்பு இருக்கின்றது.

இந்த நிகழ்வுக்கு விளக்கமளிக்க, நாம் இரு காரணி இரண்டு மாதிரிகளை ஏற்றுக் கொள்ளலாம், A மற்றும் B ஆகிய நாடுகளில் காரணிகள் உழைப்பு (l) மற்றும் மூலதன (K) ஆகியவற்றைக் கொண்டுள்ளன, மற்றும் X மற்றும் Y பொருட்களை உற்பத்தி செய்கின்றன. உழைப்பு மற்றும் F மூலதனம் தீவீரமானது.

Y தொழில் முறையில் நடுநிலையான தொழில்நுட்ப முன்னேற்றம் நடைபெறும் போது, அதன் கீழும் சரிவு மாறாமல் மாறும். இது தொழிலாளர் மற்றும் மூலதனத்தின் உற்பத்தித்திறன் விகிதங்களின் விகிதாச்சார உயர்வு காரணமாக, இந்த காரணிகளின் குறைவான உள்ளீடு Y இன் அதே வெளியீடுகளை உற்பத்தி செய்வதற்கு தேவைப்படுகிறது. காரணி விகிதங்கள் முன் உற்பத்தி செயல்பாடு பயன்படுத்தப்படுகிறது. அதே பொருட்கள் விலைகள் பராமரிக்கப்பட வேண்டும் என்றால், காரணி விலைகள் மாற்றப்பட வெண்டும். புதிய காரணி – விலை விகிதம் A

புதிய காரணி – விலை வரி P2 புதிய Y1Yக்கு ‘ tangent old isoquant. இது y தொழில்துறை மூலதனத்தின் தொடர்புடைய விலைகளில் அதிகரித்துள்ளதை பிரதிபலிக்கிறது. உற்பத்தியாளர்கள் மூலதனத்தின் உற்பத்தித்திறன் அதிகரிப்பதைக் கண்டறிந்து, Y இன் உற்பத்திக்கு மூலதனத்தின் தேவை அதிகரிப்பதற்கு வழிவகுக்கும் வகையில் மூலதனத்தின் தேவை அதிகரிக்கிறது என்பதை இதன் காரணமாகும். ஆனால் மூலதனம் விலை உயர்ந்தால் , தயாரிப்பாளர்கள் தொழில்கள் X மற்றும் Y ஆகிய இரண்டு துறைகளிலும் தொழில்துறை தீவிர நுட்பங்கள் காரணி விகிதங்களின் புதிய விகிதம் உற்பத்தியாகிறது.

முன்னேற்றத்தால் ஏற்படும் அதிகரித்த உற்பத்தி காரணமாக வருவாய் விரிவடைவதால் , X மற்றும் Y க்கான தேவை அதிகரிக்கும். எனவே ஒரு நிலையான விலையில், X தேவை அதன் விநியோக தொடர்பாக அதிகமாக இருக்கும், மேலும் Y தொழிற்சாலைக்கு அதிக உழைப்புகளை மாற்றுவதற்கான பணியில் உதவி குறைகிறது. X விலை உயரும். எனவே, ஏற்றுமதி செய்யக்கூடியதாக இருந்தால், நாட்டிற்கு எதிராக வர்த்தக நடவடிக்கைகள்

மேற்கொள்ளப்படும். Y இறக்குமதி என்றால் நாட்டின் வர்த்தக விதிமுறைகள் மேம்படுத்த முனைகின்றன.

## 6.3. உங்கள் முன்னேற்றத்தை சரிபார்க்கும் வினாக்கள்

1. நடுநிலை தொழில்நுட்ப முன்னேற்றம் என்றால் என்ன?
2. தொழில் சேமிப்பு தொழில் நுட்ப முன்னேற்றம் என்றால் என்ன?

குறிப்பு

## 6.4.உங்கள் முன்னேற்றத்தை சரிபார்க்கும் பதில்கள்

1. நடுநிலை தொழில்நுட்ப முன்னேற்றம்:

இது ஒரு நடுநிலை கண்டுபிடிப்பை குறிக்கிறது. Hicks இதை வைத்து, இரண்டு காரணி உற்பத்தி செயல்பாடுகளைக் கூறியுள்ளார். அவை உழைப்பு மற்றும் மூலதனம். அதே விகிதத்தில் இரு காரணிகளின் ஓரளவு உற்பத்தித் திறனை உயர்த்துவது நடுநிலை கண்டுபிடிப்புகளின் விளைவு ஆகும். எனவே நடுநிலை தொழில்நுட்ப முன்னேற்றம் தொழிலாளர்களுக்கும் மூலதனத்திற்கும் இடையேயான உறவை பாதிக்காது.

2.தொழில் சேமிப்பு தொழில் நுட்ப முன்னேற்றம்

அளவு கோலை பயன்படுத்தி, உழைப்பு சேமிப்பு தொழில்நுட்ப முன்னேற்றம் மூலதனத்திற்கு ஒப்பீட்டளவில் உழைப்பின் குறு விவசாய உற்பத்தி அதிகரிக்கும் உற்பத்தி செயல்முறையில் இந்த தொழில்நுட்ப முன்னேற்றம் மற்றும் மாற்றத்தை வறையறுக்கலாம். தொழிலாளர் சேமிப்பு கண்டுபிடிப்புகளின் கீழ், உற்பத்தி செயல்பாடு மூலதனத்தின் அளவு அதிகரித்து, உழைப்பின் உள்ளீடு குறைக்கப்படுகிறது.

## 6.5..சுருக்கம்

நவீன உலகானது மிகவும் இயந்திரமயமாக்கபட்ட உலகமாகும். இது தொழில்நுட்ப முன்னேற்றம் மூலம் வடிவமைக்கப்பட்டுள்ளது. நவீன பொருளாதார சமூகங்களின் விரைவான முன்னேற்றம் தொழில்நுட்ப மற்றும் விஞ்ஞான முன்னேற்றத்தால் ஏற்பட்ட மாற்றங்களால் சாத்தியமானது.

## 6.6..முக்கிய வார்த்தைகள்

நடுநிலை தொழில்நுட்ப முன்னேற்றம், தொழில் சேமிப்பு தொழில் நுட்ப முன்னேற்றம்

குறிப்பு

## 6.7..சுய மதிப்பீட்டு பயிற்சி வினாக்கள்

**குறுகிய வினாக்களுக்கு விடையளி.**

1. நடுநிலை தொழில்நுட்ப முன்னேற்றம் என்றால் என்ன?
2. தொழில் சேமிப்பு தொழில் நுட்ப முன்னேற்றம் என்றால் என்ன?

**நெடு வினாக்களுக்கு விடையளி.**

1. தொழில்நுட்ப முன்னேற்றம் மற்றும் வர்த்தகத்தினை விவரி.
2. நடுநிலை, மூலதனம், சேமிப்பு, தொழிலாளர் சேமிப்பு நிலையினை விவரி.

## 6.9. பரிந்துரைக்கப்படும் நூல்கள்

சோடர்சன் B. மற்றும் G. ரீட்(1999),''பன்னாட்டு பொருளாதாரம்'', McMillan Press Ltd, லண்டன்

# அலகு – 7 வர்த்தக கொள்கை: கட்டணம்



## 7.1. வர்த்தக கொள்கை: கட்டணம்

**சுங்க வரிகளும் அவற்றின் பாதிப்புகளும் (Tariffs and its effects)**

**a).விளக்கம்:**

தடையற்ற வாணிபம் உலக வெளியிடுகையின் அளவை அதிகபட்சமாக்கி அனைத்து நாடுகளுக்கும் நன்மை பயக்கும் என நாம் ஏற்கனவே பார்த்தோம். ஆனால், நடைமுறையில் அனைத்து நாடுகளும் பன்னாட்டு வாணிபத்தின் தடையற்ற ஓட்டம் மீது சில கட்டுப்பாடுகளை விதிக்கவே செய்கின்றன எனலாம். இக்கட்டுப்பாடுகளும் ஒழுங்குமுறைகளும் நாட்டின் வாணிபம் அல்லது வணிகத்தைக் கையாளுவதால் இவை பொதுவாக வாணிபக் கட்டுப்பாட்டுகள் தேசிய நலனைக் கருத்தில் கொண்டு சீர்படுத்தப்பட்டாலும் உண்மையில் அவை, அவ்விதத் தடைகளினால் இலாபம் அடையக் கூடியவர்களாலேயே முன் வைக்கப்படுகின்றன.

பண்டைக்காலம் தொட்டு மிக மக்கியமான ஒரு வாணிபக் கட்டுப்பாட்டின் வகையாக சுங்க வரியானது கருதப்படுகிறது. சுங்கம் ன்பது ஒரு வரியாகும். இது நாட்டு எல்லையைக் கடந்து செல்லும் பொருட்கள் மீது விதிக்கப்படுகிறது. இது இறக்குமதி வரி மற்றும் ஏற்றுமதி வரி என்ற விதத்தில் விதிக்கப்படுகிறது. இறக்குமதி வரியானது இறக்குமதி செய்யப்படும் பொருட்கள் மீது விதிக்கப்பட்டடுகிறது. ஏற்றுமதி வரியானது ஏற்றுமதி செய்யப்படும் பொருட்கள் மீத விதிக்கப்படுகிறது. ஏற்றுமதி வரியானது ஏற்றுமதி செய்யப்படும் பொருட்கள்

குறிப்பு

மீது விதிக்கப்படுகிறது. ஏற்றுமதி வரிகளை விட இறக்குமதி வரிகள் மிகவும் முக்கியமானதாகும். நமது பெரும்பாலான கலந்தாய்வு இறக்குமதி வரிகளையே சார்ந்ததாகும். ஏற்றுமதி வரிகள் மேம்பட்ட விலைகளைப் பெறும் நோக்கிலும், ஆதாயத்தை பெருக்கும் நோக்கிலுமே விதிக்கப்படுகின்றன. வளர்ந்து வரும் நாடுகள் ஏற்றுமதி வரிகளிலிருந்து தமது ஆதாயத்தை அதிகரிப்பதையே நோக்கமாகக் கொண்டுள்ளன. ஏனெனில், ஏற்றுமதி மீதான வரியை வசூலிப்பது எளிது. மாறாக தொழில் சார்ந்த நாடுகள் சில தொழில்களைப் பாதுகாக்கும் நோக்கிலேயே சில வரிகளையோ அல்லது வாணிபக் கட்டுப்பாடுகளையோ விதிக்கின்றன. இவை பெரும்பாலும் வருமான வரியைப் பயன்படுத்தியே தமது ஆதாயத்தை பெருக்கிக் கொள்கின்றன.

**b).சுங்க வரிகள் வகைகள்[Types of Tariffs]**

சுங்க வரிகள் கீழ்க்கண்டவாறு பல்வேறு வழிகளில் வகைப்படுத்தப்படுகின்றன.

1. நோக்கத்தின் அடிப்படை (Based on purpose)
   - ஆதாய சுங்க வரிகள் (Revenue Tariff)
   - பாதுகாப்பு சுங்க வரிகள் (Revenue Tariff)
2. தோற்றத்தின் அடிப்படை (Based on Origin)
   - விலைமதிப்பின் படியான சுங்க வரிகள் (Advalorem Duty)
   - குறிப்பான சுங்க வரிகள் (Specific Duty)
   - கூட்டுச் சுங்க வரிகள் (Compound Duty)
   - சறுக்கல் அளவு சுங்க வரிகள் (Sliding Scale Duty)
3. பாகுபாட்டு அடிப்படை (Based on Discrimnation)
   - ஒற்றைப் பத்தி சுங்க வரி (Single Column Tariff)
   - இரட்டைப் பத்தி சுங்க வரி (Double Column Tariff)

   1. பொதுவான மற்றும் மரப்பான சுங்க வரிகள் (General and Countervailing Tariffs)
   2. அதிகபட்ச மற்றும் குறைந்தபட்ச சுங்க வரிகள் (Maximum and Minimum Tariffs)

3. பல மடங்கு அல்லது மூன்று பத்தி சுங்க வரிகள் (Multiple or Triple Column Tariffs)

4. பழிக்குப் பழிவாங்கும் அடிப்படை (Based on Relationship)

1. பழிக்குப் பழிவாங்கும் சுங்க வரிகள் (Retalitaory Tariffs)

2.எதிர் சுங்க வரிகள் (Countervaling )

குறிப்பு

இச்சுங்க வரிகள் ஒவ்வொன்றையும் பற்றி சுருக்கமாக இப்பொழுது நாம் கீழ்க்கண்டவாறு காணலாம். இவ்வகைகளின் வரைபட விளக்கம் வரைபடம் 4.1ல் தரப்பட்டுள்ளது.

**1.நோக்க அடிப்படை (Based on Purpose):**

சுங்க வரிகள் விதிக்கப்படும் நோக்கத்தின் அடிப்படையில் சுங்கவரிகள் இரு வகைகளாகப் பகுக்கப்படலாம். அவை: **(i).** ஆதாய சுங்க வரிகள் (Revenve Tariffs) மற்றும் **(ii).** பாதுகாப்புசார்ந்த சுங்க வரிகள் (Protective Tariffs) ஆகியனவாகும்.

**(i).ஆதாய சுங்க வரிகள் (Revenue Tariffs)**: ஆதாய சுங்க வரிகளின் முதன்மை நோக்கம் அரசிற்கு ஆதாயத்தை ஈட்டித் தருவதாகும். இவை வரி விதிப்பின் முக்கியமான ஒரு வடிவைக் கொண்டிருக்கின்றன. அதாவது, இவை அரசின் ஆதாயத்தைப் பெருக்கும் நோக்கில் விதிக்கப்படுகின்றன. பொதுவாக ஆதாயத்திற்கு என வரிகள் விதிக்கப்படும் பொழுது அவற்றின் வீதங்கள் குறைவானதாகவே இருக்கும் குறிப்பாக பேரளவில் நுகரப்படும் பொருட்களுக்கான வரிகள் மிகவம் குறைவான வீதத்தில் இருக்கும்.

**(ii).பாதுகாப்புச்சார்ந்த சுங்க வரிகள்(Protective Tariffs):** பாதுகாப்பு சார்ந்த சுங்க வரிகளின் நோக்கம் அரசிற்குப் புதிய வருமான வழியை உருவாக்குவதல்ல. இதன் நோக்கம் உள்நாட்டில் குறிப்பிட்ட தொழிலை வளர்ப்பதும் நிர்வகிப்பதுமே ஆகும். ஆகவே, பாதுகாப்புசார்ந்த சுங்க வரிகள் உள்நாட்டுத்தொழில்களை அயல்நாட்டுப் போட்டியிலிருந்து காக்கவே இச்சுங்க வரிகள் விதிக்கப்படுகின்றன. பொதுவாக, இவ்வித வரிகளின் வீதங்கள் அதிக அளவினதாக இருக்கின்றன. ஏனெனில், அதிக அளவு வரி வீதங்களே இறக்குமதியைக் கணிசமான அளவில் குறைக்கின்றன. தற்பொழுது, அரசுகள், இறக்குமதிகளை குறைக்கும் நோக்கிலேயே இறக்குமதி வரிகளை விதிக்கின்றன. இதனால் உள்நாட்டின் உற்பத்தி ஊக்குவிக்கப்படலாம். இங்கு

குறிப்பு

இறக்குமதி வரியின் ஆதாய அம்சம் அவ்வளவாக முக்கியத்துவம் பெறுவதில்லை.

**2.தோற்ற அடிப்படை (Based on Origin)**

தோற்றம் மற்றும் சென்றடையும் இடங்களின் அடிப்படையில், சுங்க வரிகள் நான்கு வகைகளாகப் பாகுபாடு செய்யப்படுகின்றன. அவை பின்வருமாறு:

1. விலை மதிப்பின் படியான சுங்க வரிகள் (Advalorem Duties)
2. குறிப்பான சுங்க வரிகள் (Specific Duties)
3. கூட்டுச் சுங்க வரிகள் (Compound Duties)
4. சறுக்கல் அளவு சுங்க வரிகள் (Sliding Scale Duties)

**சுங்க வரிகளின் வகைகள்**




**வரைபடம் 6.3 - சுங்க வரிகளின் வகைகள்**
(Types of Tariffs)

படம் 4.1

**1.விலை மதிப்பின் படியான சுங்க வரிகள் (Advalorem Duties):** விலை மதிப்பின் படியான சுங்கவரிகளானது சுங்க வரியின் ஒரு பொதுவான

வகையாகும். இது வாணிபம் செய்யப்படும் பொருளின் மதிப்பு மீது குறிப்பிட்ட ஒரு சதவீதத்தில் சுமத்தப்படுகிறது. உதாரணமாக, 10% அல்லது 20% .இவை இறக்குமதி செய்யப்படும் பொருளின் மதிப்பு மீது குறிப்பிட்ட ஒரு சதவீதத்தில் சுமத்தப்படுவதால் இவை இறக்குமதி செய்யப்படும் பொருளின் விலையுடன் நேரடித் தொடர்புடையதாக உள்ளன. இறக்குமதி விலைகள் உயர்ந்தால் விலைமதிப்பின் படியான சுங்க வரிகளும் உயரும். விலைகள் குறைந்தால் சுங்கவரிகளும் குறையும்.

வர்த்தக கொள்கை: கட்டணம்

குறிப்பு

**2.குறிப்பான சுங்க வரிகள் (Specific Duties):** இவை இறக்குமதி செய்யப்படும் ஒவ்வொரு அலகுப் பொருளின் மீதம் குறிப்பிட்ட தொகையாக சுமத்தப்படுகின்றன. ஆகவே ஒரு கிலோ கிராம், ஒரு லிட்டர் அல்லது வேறு ஏதேனும் ஒரு அலகுப் பொருள் மீது குறிப்பிட்ட தொகையாக விதிக்கப்படும் வரியே குறிப்பான சுங்க வரியாகும். இங்கு பொருளின் விலை கணக்கில் எடுக்கப்படுவது இல்லை. உதாரணமாக ஒரு கலர் தொலைக்காட்சிப் பெட்டியின் இறக்குமதி மீது ரூ.1,000 நிரந்தர வீதமும் அதன் விலை மீது 5% வரியும் விதிக்கலாம்.

**3.கூட்டுச் சுங்க வரிகள் (Compound Duties):** கூட்டு சுங்க வரியானது விலை மதிப்பின் படியான சுங்க வரி மற்றும் குறிப்பான சுங்க வரி ஆகிய இரண்டின் ஒரு கூட்டாகும். இவ்வகையான வரியில் இறக்குமதி செய்யப்பட்ட பொருளின் அலகுகளின் மதிப்பின் மீது குறிப்பிட்ட சதவீதத்திலான விலை மதிப்பின் படியான சுங்க வரியும் அதனுடன் கூட ஒவ்வொரு அலகு மீதும் குறிப்பான வரியும் விதிக்கப்படுகின்றன. உதாரணமாக, ஒரு நாடு தொலைக்காட்சிப் பெட்டி ஒன்றின் மீது ரூ.1,000 நிரந்தர வீதமும் அதன் விலை மீது 5% வரியும் விதிக்கலாம்.

**4.சறுக்கல் அளவு சுங்க வரிகள் (Sliding Scale Duties):** வாணிபம் செய்யப்படும் பொருட்களின் விலைக்கு ஏற்ப மாறுபடும் வரி சறுக்கல் அளவு சுங்க வரி எனப்படுகிறது. இது விலைமதிப்பின் படியான சுங்க வரியாகவோ அல்லது குறிப்பான ஒரு வரியாகவோ இருக்கும். ஆயினும், பொதுவாக, சறுக்கல் அளவு சுங்க வரி குறிப்பிட்ட ஒரு அடிப்படையிலேயே விதிக்கப்படுகிறது.

### 3.பாகுபாட்டு அடிப்படை (Based on Discriminiation)

நாடு வாரியான பாகுபாட்டு அடிப்படையில் பின்வரும் சுங்க வரிகள் விதிக்கப்படுகின்றன.

**1.ஒற்றைப் பத்தி சுங்க வரி (Single Column Tariff):** ஒற்றைப் பத்தி சுங்க வரியில் குறிப்பிட்ட வகையைச் சார்ந்த அனைத்துப் பொருட்களுக்கும் அவை இறக்குமதி செய்யப்பட்ட நாட்டைக் கருத்தில் கொள்ளாமல் ஒரே வரி வீதமே விதிக்கப்படுகிறது. இது ஒரு பாகுபடுத்தப்படாத சுங்க வரியாகும். இதன் நிர்வாகம் மிகவும் எளிது. ஆனால் இது போதுமானதாகவும் நெகிழ்வானதாகவும் இல்லை.

**2.இரட்டைப் பத்தி சுங்க வரி (Double –column Tariffs):** இரட்டைப் பத்தி சுங்க வரியின் கீழ், அனைத்து வகையான பொருட்களுக்கும் அல்லது சில பொருட்களுக்கு மட்டுமே இரண்டு மாறுபட்ட வரிவீதங்கள் விதிக்கப்படுகின்றன. ஆகவே, இரட்டைப் பத்தி சுங்க வரியின் கீழ், நாடுகளிடையில் வரிவீதங்கள் பாகுபடுத்தப்படுகின்றன. இது மேலும் இரண்டு வகைகளாகப் பாகுபடுத்தப்படலாம். அவை பின்வருமாறு:

1).பொதுவான மற்றும் மரபான சுங்க வரி (General and Coventional Tariff): பொதுவான மற்றும் மரப்பான சுங்க வரி முறை வரிகளின் இரண்டு அட்டவணைகளைக் கொண்டுள்ளது. அவை: 1. பொதுவானது, மற்றும் 2.மரபானது. பொதுவான சுங்க வரி என்பது அரசால் ஆண்டின் தொடக்கத்தில் அதன் வருடாந்திர சுங்க வரிக்கொள்கையாக அறிவிக்கப்படும் சுங்க வரிகளின் பட்டியலாகும். இது அனைத்து நாடுகள் மீதும் விதிக்கப்படும் குறிப்பிட்ட வரி வீதமாகும். மாறாக, மரபான சுங்க வரி வீதங்கள் என்பன மற்ற நாடுகளுடனான வாணிப உடன்படிக்கைகளின் அடிப்படையில் அமைகின்றன. இவை நாட்டுக்கு நாடு கூட மாறுபடலாம். இவ்வீதங்களும் நெகிழ்வானவைகள் அல்ல. ஆகவே, இவை அயல்நா

ட்டு வாணிபத்தின் பெருக்கத்திற்குத் தடையாகவே இருக்கின்றன. எனலாம்.

2.அதிகபட்ச மற்றும் குறைந்தபட்ச சுங்க வரிகள் (Maximum nad minimum Tariffs) : இவர்களிலும் இரண்டு வரி அட்டவணைகள் உள்ளன. அவை அதிகபட்ச வீதம் மற்றும் குறைந்த பட்சம் வீதம் ஆகியனவாகும். தங்களிடையில் இதற்கென குறிப்பிட்ட உடன்பாட்டைக் கொண்டுள்ள நாடுகளுக்கு குறைந்தபட்ச வீதமும் ஏனைய நாடுகளுக்கு அதிகபட்ச வீதம் விதிக்கப்படுகின்றது.

3.பன்மடங்கு அல்லது மூன்று பத்தி சுங்க வரிகள் (Multiple or Triple Column Tariffs): பன்மடங்கு சுங்க வரி முறையின் கீழ், ஒவ்வொரு வகையான

பொருள் மீதும் இரண்டு அல்லது அதற்கு மேற்பட்ட சுங்க வரி வீதங்கள் விதிக்கப்படுகின்றன. அவை : 1.பொதுவான 2.இடைப்பட்ட மற்றும் 3 முன்னுரிமை ஆகியனவாகும். ஆகவேதான், இவ்வரிகள் மூன்று பத்தி சுங்க வரிகள் என அழைக்கப்படுகின்றன. பொதுவான வீதங்கள் மேலே குறிப்பிட்டபடி அதிகபட்ச வீதங்களைப் போல விதிக்கப்படுகின்றன. இடைப்பட்ட வீதங்கள் குறைந்தபட்ச வீதங்களாகும். நம் நாடு சுதந்திரம் அடைவதற்கு முன்பு இங்கிலாந்திலிருந்து இறக்குமதி செய்யப்பட்ட பொருட்கள் மீது முன்னுரிமை வீதங்கள் விதிக்கப்பட்டன. தற்பொழுது, சார்க் நாடுகளுக்கு இடையிலான இறக்குமதிகள் மீது முன்னுரிமைச் சுங்க வரி வீதம் விதிக்கப்படுகின்றது.

குறிப்பு

**4.பழிக்குப் பழிவாங்கும் அடிப்படை (Based on Retalitation)**

பழிக்குப் பழிவாங்கும் அடிப்படையில் சுங்க வரிகள் இரண்டு வகைகளாகப் பகுப்படலாம். அவை பின்வருமாறு:

1.பழிக்குப்பழிவாங்கும் சுங்க வரிகள் (Retaliatory Tariffs): ஒரு நாட்டின் வாணிபக் கொள்கையின் காரணமாக தமது ஏற்றுமதிகள் அல்லது செலுத்தல் சமநிலையில் பாதிப்படைந்த ஒரு நாடு அவ்வாறு தம்மை பாதித்த நாட்டைத் தண்டிக்கும் விதமாக அந்நாட்டின் இறக்குமதிகள் மீது விதிக்கும் சுங்க வரியே வழிக்குப் பழிவாங்கும் சுங்க வரிகளாகும்.

2.எதிர் சுங்க வரிகள் (Countervailing Tariffs): ஏற்றுமதி உதவி நிதியின் மூலம் மற்றொரு நாட்டினால் எந்த ஒரு பொருளினி ஏற்றுமதி குறைக்கப்படுகிறதோ அந்தப் பொருளின் மீது எதிர் சுங்க வரிகள் விதிக்கப்படுகின்றன. மலிவான அயல்நாட்டுப் பொருளிலிருந்து இறக்குமதி செய்யும் நாட்டிலுள்ள அதே பொருளைத் தயாரிக்கும் உற்பத்தியாளரைக் காக்கும் வகையில் அப்பொருளின் விலையை அதிகரிக்கும் நோக்கில் இவ்வரி கூடுதல் வரியாக விதிக்கப்படுகிறது.

## 7.2.ஒதுக்கீடு

ஒதுக்கீடு என்பது ஒரு நாட்டிற்கு வரும் அளவிற்கு ஒரு வரம்பு.

எந்தவொரு வர்த்தகமும் இல்லாமல், நாட்டில் சமநிலை சந்தை விலை உள்நாட்டு தேவை மற்றும் உள்நாட்டு விநியோகத்தை சமன் செய்யும் விலையில், P மற்றும் Q வெளியீட்டில் இருக்கும். இருப்பினும், உலக விலை P1 இல், விலையை விட குறைவாக இருக்கும் வர்த்தகம் செய்யாத நாடு. உலகின்

பிற பகுதிகளிலிருந்து தடையற்ற வர்த்தகத்திற்கு நாடு திறந்தால், உலக விநியோக வளைவு உலக விலையான P1 இல் நெகிழ்ச்சியாக இருக்கும்.

குறிப்பு

புதிய சமநிலை விலை P1 மற்றும் வெளியீடு Q1 ஆகும். உற்பத்தியின் உள்நாட்டு பங்கு இப்போது Q2 ஆக உள்ளது, இது Q உடன் ஒப்பிடும்போது, தன்னிறைவு அளவு. இறக்குமதி செய்யப்பட்ட தொகை Q2 முதல் Q1 வரையிலான தூரம்.




**ஒதுக்கீட்டை விதித்தல்**

உள்நாட்டு உற்பத்தியாளர்களைப் பாதுகாக்கும் முயற்சியில், ஞ2 முதல் ஞ3 வரையிலான ஒதுக்கீடு இறக்குமதிக்கு விதிக்கப்படலாம்.

இது உற்பத்தியின் உள்நாட்டு பங்கு 0 முதல் ஞ2 வரை, ஞ3 முதல் ஞ4 வரை உயர உதவுகிறது.




ஒதுக்கீடு ஒரு தொடர்புடைய பற்றாக்குறையை உருவாக்கி, விலையை P2 வரை செலுத்துகிறது, மொத்த வெளியீடு Q4 ஆக குறைகிறது. இறக்குமதி செய்யப்பட்ட தொகை ஒதுக்கீட்டு நிலைக்கு விழும். இந்த விலை உயர்வுதான் குறைந்த செயல்திறன் கொண்ட உள்நாட்டு நிறுவனங்களின் உற்பத்தியை அதிகரிக்க ஊக்கத்தை அளிக்கிறது.

ஒரு கட்டணத்திற்கும் ஒதுக்கீட்டிற்கும் இடையிலான முக்கிய வேறுபாடுகளில் ஒன்று என்னவென்றால், ஒரு ஒதுக்கீட்டோடு தொடர்புடைய நலன்புரி இழப்பு அதிகமாக இருக்கலாம், ஏனெனில் ஒரு அரசாங்கத்தால் சம்பாதிக்கப்பட்ட வரி வருவாய் இல்லை. இதன் காரணமாக, கட்டணங்களை விட ஒதுக்கீடுகள் குறைவாகவே பயன்படுத்தப்படுகின்றன.

**சுங்கத் தீர்வைகள்**

சுங்கவரி, அல்லது சுங்க வரி, இறக்குமதி செய்யப்பட்ட பொருட்களின் மீதான வரி, வழக்கமாக ஒரு விளம்பர மதிப்பு வடிவத்தில், இறக்குமதி செய்யப்பட்ட உற்பத்தியின் விலையில் சதவீதம் அதிகரிப்பு என விதிக்கப்படுகிறது. சுங்கவரி என்பது பழமையான மற்றும் மிகவும் பரவலான பாதுகாப்பு மற்றும் வர்த்தகத்திற்கு தடையாக உள்ளது.

**கட்டணங்களின் தாக்கம்**

கட்டணங்களை விதிப்பது பின்வருவனவற்றிற்கு வழிவகுக்கிறது:

**அதிக விலை**

உள்நாட்டு நுகர்வோர் அதிக விலைகளை எதிர்கொள்கின்றனர், இதன் பொருள் நுகர்வோர் உபரி இழப்பு உள்ளது. இருப்பினும், உற்பத்தியாளர்கள் மலிவான இறக்குமதியிலிருந்து பாதுகாக்கப்படுவதால் உள்நாட்டு உற்பத்தியாளர் உபரி ஒரு ஆதாயம் உள்ளது, மேலும் அவர்கள் கட்டணமின்றி இருப்பதை விட அதிக விலையைப் பெறுகிறார்கள். இருப்பினும், ஒட்டுமொத்த நிகர நல இழப்பு ஏற்பட வாய்ப்புள்ளது.

வர்த்தகம் இல்லாமல், உள்நாட்டு விலை மற்றும் அளவு P & Q.

ஒரு நாடு உலக விநியோகத்திற்கு திறந்தால், விலை P1 ஆகவும், வெளியீடு Q இலிருந்து Q2 ஆகவும் அதிகரிக்கும். இதன் விளைவாக, உள்நாட்டு உற்பத்தியாளர்களின் பங்கு Q1 க்கு வீழ்ச்சியடைகிறது மற்றும் இறக்குமதிகள் இப்போது ஆதிக்கம் செலுத்துகின்றன, Q1 க்கு Q1 க்கு இறக்குமதி செய்யப்பட்ட அளவு.

ஒரு கட்டணத்தை விதிப்பது உலக விநியோக வளைவை உலக வழங்கல் கட்டணத்திற்கு மாற்றுகிறது.

விலை P2 ஆக உயர்கிறது, புதிய வெளியீடு Q3 இல் உள்ளது. உள்நாட்டு உற்பத்தியாளர்கள் சந்தை Q4 ஆக உயர்கிறது, மற்றும் இறக்குமதி Q4 முதல் Q3 வரை குறைகிறது. இதன் விளைவாக, உள்நாட்டு உற்பத்தியாளர்கள் உலகின் பிற பகுதிகளிலிருந்து மலிவான இறக்குமதியிலிருந்து பாதுகாக்கப்படுகிறார்கள்.

உள்நாட்டு நுகர்வோர் அதிக விலைகளை எதிர்கொள்வதால், அவர்கள் நுகர்வோர் உபரி இழப்பையும் சந்திக்கிறார்கள். இதற்கு நேர்மாறாக, உள்நாட்டு உற்பத்தியாளர்கள் தங்கள் தயாரிப்பாளர் உபரியை அதிகரிக்கிறார்கள், ஏனெனில் அவர்கள் கட்டணமின்றி இருப்பதை விட அதிக விலையைப் பெறுகிறார்கள்.

அதிகரித்த சந்தை பங்கு என்பது உள்நாட்டு பொருளாதாரத்தில் வேலைகள் பாதுகாக்கப்படும் என்பதாகும்.

**நலன்புரி இழப்பு**

இருப்பினும், உற்பத்தியாளர் உபரி அதிகரிப்பதை விட நுகர்வோர் உபரி குறைப்பு அதிகமாகும். கட்டண வருவாயைச் சேர்க்கும்போது (பகுதி K> L> M> N) இன்னும் நிகர இழப்பு உள்ளது. நிகர நல இழப்பு எக்ஸ் மற்றும் ஒய் முக்கோணங்களால் குறிக்கப்படுகிறது.

குறிப்பு

**விலகல்**

ஒப்பீட்டு நன்மை என்ற கொள்கையின் ஒரு சிதைவு உள்ளது, இதன் மூலம் ஒரு கட்டணமானது சிறப்பு மூலம் நாடுகள் கட்டியெழுப்பக்கூடிய செலவு நன்மையை மாற்றுகிறது.

**பதிலடி**

ஏற்றுமதி செய்யும் நாடுகளிடமிருந்து பதிலடி கொடுக்கும் வாய்ப்பு உள்ளது, இது ஒரு விலையுயர்ந்த வர்த்தக யுத்தத்தைத் தூண்டக்கூடும்.

இருப்பினும், குறுகிய கால கட்டணங்கள் வேலைகள், குழந்தை மற்றும் வீழ்ச்சியடைந்த தொழில்கள் மற்றும் மூலோபாய பொருட்களைப் பாதுகாக்கக்கூடும். புதுப்பிக்க முடியாத பற்றாக்குறை வளத்தை பாதுகாக்க கட்டணங்களும் உதவக்கூடும். தேர்ந்தெடுக்கப்பட்ட கட்டணங்கள் வர்த்தக பற்றாக்குறையை குறைக்கவும், நுகர்வு குறைக்கவும் உதவக்கூடும்.

## 7.3. வளரும் நாடுகளின் வர்த்தக பிரச்சனைகள்

### c).சுங்க வரிகளின் பாதிப்புகள் (Effects of Tariffs)

சுங்க வரிகள் ஒரு நாட்டின் இறக்குமதிகளைக் குறைக்கும் சக்தியைக் கொண்டுள்ளதால் இவை பல்வேறு பொருளாதார நடவடிக்கைகளின் மீது பல வகையான பாதிப்புகளை ஏற்படுத்த வல்லனவாக உள்ளன. சுங்க வரிகளில் பல வகையான பாதிப்புகளை ஏற்படுத்த வல்லனவாக உள்ளன. சுங்க வரிகளின் பாதிப்புகள் இரண்டு கோணங்களில் ஆராயப்படலாம். அவை பின்வருமாறு:

1. பகுதியளவான சமநிலை அணுகுமுறை–குறிப்பிட்ட பொருள் அல்லது சந்தையின் நோக்கிலிருந்து சுங்க வரியின் பாதிப்புகளை ஆய்வு செய்கின்றது.
2. பொதுவான சமநிலை அணுகுமுறை–நாட்டின் ஒட்டுமொத்தப் பொருளாதார நோக்கிலிருந்து சுங்க வரியின் பாதிப்புகளை அய்வு செய்கின்றது.

வளரும் நாடுகள் எதிர்கொள்ளும் வர்த்தக தொடர்பான சிக்கல்கள்:

1. வர்த்தக விதிமுறைகளின் சரிவு:

ப்ரீபிச், சிங்கர் மற்றும் மிர்டால் போன்ற சில பொருளாதார வல்லுனர்களின் கூற்றுப்படி, வர்த்தகத்தின் பொருட்களின் விதிமுறைகள் (இது ஏற்றுமதியின் விலைக் குறியீட்டின் இறக்குமதியின் விலைக் குறியீட்டின் விகிதமாகும்) - காலப்போக்கில் மோசமடைகின்றன.

இதற்கு இரண்டு முக்கிய காரணங்கள் உள்ளன:

குறிப்பு

(i) உற்பத்தித்திறன் அதிகரிப்பு:

வளர்ச்சியடைந்த நாடுகளில் நிகழும் பெரும்பாலான அல்லது அனைத்து உற்பத்தித்திறன் அதிகரிப்புகளும் அதிக ஊதியங்கள் மற்றும் வருமான வடிவில் தங்கள் தொழிலாளர்களுக்கு வழங்கப்படுகின்றன. ஆனால் வளரும் நாடுகளில் உற்பத்தித்திறன் அதிகரிப்பது பொருட்களின் விலை வீழ்ச்சிக்கு வழிவகுக்கிறது.

(ii) கோரிக்கையின் வருமான நெகிழ்ச்சி:

வளரும் நாடுகளின் விவசாய ஏற்றுமதிக்கான கோரிக்கையை விட, வளர்ச்சியடைந்த நாடுகளின் உற்பத்தி ஏற்றுமதிக்கான தேவை மிக வேகமாக வளரும். விவசாயப் பொருட்களைக் காட்டிலும் உற்பத்தி செய்யப்பட்ட பொருட்களுக்கான தேவையின் அதிக வருமான நெகிழ்ச்சித்தன்மை இதற்குக் காரணம். இந்த காரணங்களுக்காக, தன்னிறைவு (வர்த்தகம் இல்லை) சில நேரங்களில் வர்த்தகத்தை விட சிறந்தது. ஜே. என். பகவதி வாதிட்டபடி, வளரும் நாடுகளின் வர்த்தகத்தின் சரிவு மிகவும் பெரியதாக இருக்கக்கூடும், அது இல்லாமல் வர்த்தகத்தை விட மோசமாக இருக்கும். இது உடனடி வளர்ச்சி என்று அழைக்கப்படுகிறது.

2. ஏற்றுமதி உறுதியற்ற தன்மை மற்றும் பொருளாதார மேம்பாடு:

மெக்பீன் சுட்டிக்காட்டியுள்ளார், நீண்டகால அல்லது மதச்சார்பற்ற வர்த்தக விதிமுறைகளைத் தவிர்த்து, வளரும் நாடுகள் தங்கள் ஏற்றுமதி விலைகள் மற்றும் அந்நிய செலாவணி ரசீதுகளில் பெரிய குறுகிய கால ஏற்ற இறக்கங்களை எதிர்கொள்ளக்கூடும், அவை அவற்றின் வளர்ச்சியைத் தீவிரமாகத் தடுக்கக்கூடும். இந்த புள்ளி படம் 8.2 இல் விளக்கப்பட்டுள்ளது. னு0 மற்றும் ளு0 ஆகியவை முறையே, வளரும் நாடுகளின் தேவை மற்றும் கூடுதல் வளைவுகளைக் குறிக்கின்றன.




**Fig. 8.2.** Price instability and primary exports

குறிப்பு

D0 மற்றும் S0 உடன், வளரும் நாடுகளின் முதன்மை ஏற்றுமதியின் சமநிலை விலை P0 ஆகும். DD1 அல்லது S1 க்கு மாறினால், சமநிலை விலை P1 க்கு கூர்மையாக குறைகிறது. D மற்றும் எஸ் இரண்டும் D1 மற்றும் S1 க்கு மாறினால், சமநிலை விலை P2 க்கு இன்னும் குறைகிறது. D1 மற்றும் S1 மீண்டும் அவற்றின் அசல் நிலைகளுக்கு மாறினால், அதாவது, D0 மற்றும் S0, சமநிலை விலை P0 வரை நகரும்.

இதனால், விலை உறுதியற்ற மற்றும் நிலையற்ற D மற்றும் S வளைவுகள் கூர்மையான விலை ஏற்ற இறக்கங்களுக்கு வழிவகுக்கும். இங்கே விலை ஏற்ற இறக்கங்களின் வரம்பு மிகவும் பரந்த P0-P2 ஆகும். இதனால் வளரும் நாடுகளின் முதன்மை ஏற்றுமதிக்கான உறுதியற்ற (அதாவது, செங்குத்தான சாய்வு) மற்றும் நிலையற்ற (அதாவது, மாற்றும்) தேவை மற்றும் விநியோக வளைவுகள் வளரும் நாடுகளின் ஏற்றுமதி செய்யக்கூடிய பொருட்களின் விலையில் பெரிய ஏற்ற இறக்கங்களுக்கு வழிவகுக்கும்.

உலக சந்தைகளில் முதன்மை தயாரிப்புகளுக்கான தேவை விலை உறுதியற்றது மற்றும் மாற்றுவது ஆகும். இது விலை தவிர்க்கமுடியாதது, ஏனென்றால் டெவெலோப் நாடுகளில் உள்ள பெரும்பாலான குடும்பங்கள் தங்கள் வருமானத்தில் ஒரு சிறிய பகுதியை மட்டுமே காபி, தேநீர், சர்க்கரை மற்றும் கோகோ போன்ற பொருட்களுக்கு செலவிடுகின்றன. இதன் விளைவாக, இந்த பொருட்களின் விலைகள் மாறும்போது, குடும்பங்கள் இந்த பொருட்களின் கொள்முதலை அதிகப்படுத்துவதில்லை.

குறிப்பு

இதன் விளைவாக, அத்தகைய பொருட்களுக்கான தேவை விலை-தவிர்க்க முடியாததாக மாறும். மறுபுறம், பல்வேறு தாதுக்களுக்கான தேவை விலை உறுதியற்றது, ஏனெனில் மாற்றீடுகள் உடனடியாக கிடைக்காது. அதே நேரத்தில், முன்னேறிய நாடுகளில் வர்த்தக சுழற்சிகளால் வளரும் நாடுகளின் முதன்மை தயாரிப்புகளுக்கான தேவை நிலையற்றது.

மர பயிர்கள், குறிப்பாக தோட்டங்கள் போன்றவற்றில் நீண்ட கர்ப்ப காலங்கள் இருப்பதால், பெரும்பாலான முதன்மை ஏற்றுமதியை உருவாக்கும் நாடுகளின் விலை விலை தவிர்க்க முடியாதது. ரப்பர் மரங்கள் வளர 10-15 ஆண்டுகள் தேவை. மேலும் வளரும் நாடுகளில் வள பயன்பாட்டில் உள்ளக கடினத்தன்மை மற்றும் வளைந்து கொடுக்கும் தன்மையை நாங்கள் காண்கிறோம். வானிலை, பூச்சிகள் மற்றும் பலவற்றின் காரணமாக பொருட்கள் நிலையற்றவை மற்றும் மாறுகின்றன.

ஏற்றுமதி விலையில் பரந்த ஏற்ற இறக்கங்கள் காரணமாக, வளரும் நாடுகளின் ஏற்றுமதி வருவாயும் ஆண்டுதோறும் கணிசமாக வேறுபடுகிறது. இது தேசிய வருமானம், கான்-சம்ஷன், சேமிப்பு மற்றும் முதலீடு ஆகியவற்றில் ஏற்ற இறக்கங்களுக்கு வழிவகுக்கிறது. இந்த வகை பொருளாதார ஏற்ற இறக்கங்கள் அல்லது வணிக சுழற்சி நகர்வுகள் மேம்பாட்டுத் திட்டத்தை வழங்குகின்றன (இது இறக்குமதி செய்யப்பட்ட இயந்திரங்கள், நிதி, மூல துணையை எதிர்த்து நிற்கிறது) மிகவும் கடினம்.

சர்வதேச பொருட்கள் ஒப்பந்தங்கள்:

சில வளரும் நாடுகள், குறிப்பாக ஆப்பிரிக்காவில், இரண்டாம் உலகப் போருக்குப் பிறகு அமைக்கப்பட்ட சந்தைப்படுத்தல் குழு போன்ற முற்றிலும் உள்நாட்டுத் திட்டங்களால் தனிப்பட்ட தயாரிப்புகளுக்கான ஏற்றுமதி விலையை உறுதிப்படுத்த முயற்சித்தன. வாரியம் நிர்ணயித்த நிலையான விலையில் உள்நாட்டு உற்பத்தியாளர்களின் உற்பத்தியை வாங்குவதன் மூலம் இவை இயங்குகின்றன, பின்னர் அவை உலக விலையில் ஏற்ற இறக்கத்துடன் பொருட்களை ஏற்றுமதி செய்யும். பம்-பூச்சி பயிர்களின் ஆண்டுகளில், உள்நாட்டு விலைகள் உலக விலைகளுக்குக் கீழே அமைக்கப்படும், இதனால் வாரியம் நிதியைக் குவிக்கும், அது மோசமான ஆண்டுகளில் விநியோகிக்கும், உள்நாட்டு உற்பத்தியாளர்களுக்கு உலக விலையை விட அதிகமாக செலுத்துவதன் மூலம்.

இருப்பினும், சர்வதேச பொருட்களின் ஒப்பந்தங்கள் பெரும்பாலான வளரும் நாடுகளின் ஏற்றுமதி விலைகள் மற்றும் வருவாயை அதிகரிப்பதற்கான வலுவான

வாய்ப்பை வழங்கின. இத்தகைய ஒப்பந்தங்கள் மூன்று வகைகளாகும்: இடையக பங்குகள், ஏற்றுமதி கட்டுப்பாடுகள் மற்றும் கொள்முதல் ஒப்பந்தங்கள்.

ப.ஃ.பர் பங்குகள், பொருட்களின் விலை ஒப்புக் கொள்ளப்பட்ட குறைந்தபட்ச விலையை விடக் குறையும் போது, மற்றும் பொருட்களின் விற்பனையை உள்ளடக்குகிறது. பங்குகளில் இருந்து அதன் திறந்த சந்தை விலை நிறுவப்பட்ட அதிகபட்ச விலையை விட உயர்கிறது.

குறிப்பு

ஏற்றுமதி கட்டுப்பாடுகள் ஒவ்வொரு தேசமும் ஏற்றுமதி செய்யும் பொருட்களின் அளவை உறுதிப்படுத்த முயல்கின்றன, பொருட்களின் விலைகளை உறுதிப்படுத்துகின்றன. இந்த முறை பங்குகளை பராமரிப்பதற்கான செலவை முற்றிலும் தவிர்க்கிறது.

கொள்முதல் ஒப்பந்தங்கள் நீண்ட கால பன்முக ஒப்பந்தங்களாகும், அவை இறக்குமதி செய்யும் நாடுகள் ஒரு குறிப்பிட்ட அளவு பொருட்களை வாங்க ஒப்புக்கொள்கின்றன மற்றும் அதிகபட்ச விலையை ஏற்றுமதி செய்யும் நாடுகள் குறிப்பிட்ட குறிப்பிட்ட அளவு பொருட்களை விற்க ஒப்புக்கொள்கின்றன. கொள்முதல் கான்ட்ராக்ட்ஸ் இதனால் இடையக பங்குகள் மற்றும் ஏற்றுமதி கட்டுப்பாடுகளின் தீமைகளைத் தவிர்க்கிறது, ஆனால் இதன் விளைவாக பொருட்களுக்கு இரண்டு விலை அமைப்பு ஏற்படுகிறது.

## 7.4. உங்கள் முன்னேற்றத்தை சரிபார்க்கும் வினாக்கள்

1.சுங்க வரி என்றால் என்ன?

2.சுங்க வரியின் பாதிப்புகள் யாவை?

## 7.5.உங்கள் முன்னேற்றத்தை சரிபார்க்கும் பதில்கள்

1.பண்டைக்காலம் தொட்டு மிக மக்கியமான ஒரு வாணிபக் கட்டுப்பாட்டின் வகையாக சுங்க வரியானது கருதப்படுகிறது. சுங்கம் ன்பது ஒரு வரியாகும். இது நாட்டு எல்லையைக் கடந்து செல்லும் பொருட்கள் மீது விதிக்கப்படுகிறது. இது இறக்குமதி வரி மற்றும் ஏற்றுமதி வரி என்ற விதத்தில் விதிக்கப்படுகிறது.

2.சுங்க வரிகளின் பாதிப்புகள் இரண்டு கோணங்களில் ஆராயப்படலாம். அவை பின்வருமாறு:

1. பகுதியளவான சமநிலை அணுகுமுறை–குறிப்பிட்ட பொருள் அல்லது சந்தையின் நோக்கிலிருந்து சுங்க வரியின் பாதிப்புகளை ஆய்வு செய்கின்றது.
2. பொதுவான சமநிலை அணுகுமுறை–நாட்டின் ஒட்டுமொத்தப் பொருளாதார நோக்கிலிருந்து சுங்க வரியின் பாதிப்புகளை அய்வு செய்கின்றது.

குறிப்பு

## 7.6.சுருக்கம்

சுங்கவரிகள் ஒருநாட்டின் இறக்குமதிகளை குறைக்கும் சக்தியை கொண்டுள்ளதால் பல்வேறு பொருளாதார நடவடிக்கைகளின் மீது பல வகையான பாதிப்புகளை ஏற்படுத்த வல்லவனாக உள்ளன. சுங்கவரிகளில் பலவிதமான பாதிப்புகளை ஆயள் செய்கின்றன.

## 7.7.முக்கிய வார்த்தைகள்

கோரிக்கையின் வருமான நெகிழ்ச்சி:, பாகுபாட்டு அடிப்படை, ஆதாய சுங்க வரிகள்

### 7.8..சுய மதிப்பீட்டு பயிற்சி வினாக்கள்

**குறுகிய வினாக்களுக்கு விடையளி.**

1.சுங்க வரி என்றால் என்ன?

2.சுங்க வரியின் பாதிப்புகள் யாவை?

**நெடு வினாக்களுக்கு விடையளி.**

1. வர்த்தக கொள்கை: கட்டணம் மற்றும் ஒதுக்கீடு பற்றி விவரி.
2. வளரும் நாடுகளின் வர்த்தக பிரச்சனைகளைக் கூறுக.

## 7.9.பரிந்துரைக்கப்படும் நூல்கள்

Soderston, B. and G. Reed (1999), **"International Economics",**

McMillan Press Ltd., London.

சோடர்சன் B மற்றும் G. ரீட்(1999), " பன்னாட்டு பொருளாதாரம்",

McMillan Press Ltd, லண்டன்.

# அலகு – 8 சர்வதேச நிறுவனங்கள் - I







## 8.1. சர்வதேச நிறுவனங்களை வர்த்தகம் மற்றும் வளர்ச்சிக்கான ஐக்கிய நாடுகள் (UTCAD)

**வாணிபம் மற்றும் வளர்ச்சிக்கான ஐக்கிய நாடுகளின் மாநாடு (United Nations Conference on Trade and Development-UNCTAD)**

இரண்டாம் உலகப் போருக்குப்பின் பன்னாட்டு ஒத்துழைப்பின் தேவையை உலக நாடுகள் உணர்ந்தன. இதனால் தான் உலக வங்கி, பன்னாட்டு பொதுநிதி போன்ற நிதி நிறுவனங்களும் சுங்கவரி மற்றும் வாணிபம் பற்றிய பொது ஒப்பந்தம் (GATT) போன்ற அமைப்புக்களும் தோன்றின. ஆனால் இவை வளர்ச்சிபெற்ற நாடுகளுக்குத்தான் சாதகமாக இருந்தன. இதனால் வளர்கின்ற நாடுகளின் சிக்கல்கள் தீர்க்கப்படாமல் தொடர்ந்தன.

ஐக்கிய நாடுகளின் பொதுச்சபை 1960 முதல் பத்தாண்டுகளை 'வளர்ச்சிக்குப் பத்தாண்டுகள்' (Development Decade) என்று அறிவித்ததன் விளைவாக வாணிபம் மற்றும் வளர்ச்சிக்கான கைக்கிய நாடுகளின் மாநாடு (Unctad) தோன்றியது. 1962 ஜூலையில் நடைபெற்ற வளர்கின்ற நாடுகளின் கெய்ரோ மாநாடு வாணிபம் மற்றும் வளர்ச்சி தொடர்பான ஐக்கிய நாடுகளின் மாநாட்டை நடத்தும்படி கேட்டுக்கொண்டது. ஐக்கிய நாடுகளின் பொருளாதார, சமுதாய மன்றம் 1962 ஆகஸ்டு 3 இல் இதனை ஏற்றுக்கொண்டு வாணிபம், மற்றும் வளர்ச்சிக்கான மாநாட்டை நடத்தத் தீர்மானித்தது. இதனை ஐக்கிய நாடுகளின் பொதுச்சபையும் 1962 டிசம்பர் 8 இல் ஏற்றுக்கொண்டது. 1964 மார்ச்

குறிப்பு

முதல் ஜூன் வரை வாணிபம் மற்றும் வளர்ச்சிக்கான ஐக்கிய நாடுகள் மாநாடு (UNCTAD) ஜெனிவாவில் நடைபெற்றது.

**a).அமைப்பு:**

வாணிபம் மற்றும் வளர்ச்சிக்கான ஐக்கிய நாடுகளின் மாநாடு, ஐக்கிய நாடுகளின் பொதுச்சபையின் ஒரு நிலையான உறுப்பாகும். இதன் தலைமை அலுவலகம் ஜெனிவாவில் இருக்கும். இது மூன்றாண்டுக்கு மேல் இடைவெளி இல்லாமல் கூட்டப்பட வேண்டும்.

'வாணிபம்' 'வளர்ச்சிக் கழகம்' (Trade and Development Board) என்றழைக்கப்பெறுகின்ற நிர்வாகக் குழு மூலம் இது செயல்படுகின்றது. மாநாடு நடைபெறாத காலத்தில் கொள்கை தொடர்பான விவரங்களை இந்தக் கழகம் முடிவு செய்கின்றது. இது பொதுவாக ஆண்டிற்கு இருமுறை கூடுகின்றது. இதில் மாநாட்டு உறுப்பினர்களில் தேர்ந்து எடுக்கப்பெறுகின்ற 55 உறுப்பினர்கள் உள்ளனர். இந்தக் கழகத்திற்கு, ஆதாரப் பொருட்கள் குழு, உற்பத்தி செய்யப்பெற்ற பகுதி உற்பத்தி செய்யப்பெற்ற பொருட்களின் குழு வளர்ச்சி நிதிக்குழு, வாணிபம், காப்பீடு உள்ளிட்ட புலனாகாத வாணிபக்குழு என நான்கு குழுக்கள் உதவியாகச் செயல்படுகின்றன. இக்குழுக்கள் மாநாடுகளுக்கு வேண்டிய அறிக்கைகளைத் தயாரித்துத் தருகின்றன.

**b).பணிகள்:**

வாணிபம் மற்றும் வளர்ச்சிக்கான ஐக்கிய நாடுகளின் மாநாட்டை, வளர்ச்சி குறைந்த நாடுகளின் மெதுவாக ஏற்றுமதி வாணிபம் விரிவடைதல், அன்னியச் செலுத்து நிலையில் பற்றாக்குறை, மிகுந்த வெளிநாட்டுக் கடன் போன்ற சிக்கல்களைத் தீர்த்து, அவற்றின் விரைவான வளர்ச்சியைத் தூண்டும் நோக்கத்தோடு அமைத்தனர். இந்த மாநாட்டின் முக்கிய பணிகள்:-

1. இருக்கின்ற பன்னாட்டு நிறுவனங்கள் செய்கின்ற பணிகளைக் கணக்கில் எடுத்துக்கொண்டு சிறப்பாக வளர்ச்சி குறைந்த நாடுகளின் பொருளாதார வளர்ச்சியை முடுக்கும் அமைப்புக்களைக் கொண்ட நாடுகளுக்கிடையில் வாணிபத்தை வளர்க்கவும், பன்னாட்டு வாணிபத்தைப் பெருக்குதல்.
2. பன்னாட்டு வாணிபம், பொருளாதார வளர்ச்சியோடு தொடர்புடைய சிக்கல்கள் பற்றிய கொள்கைகளை உருவாக்குதல்.
3. கூறப் பெற்ற கொள்கைகளை செயல்படுத்த தீர்மானங்களைக் கொண்டுவருதல், அதனுடைய அதிகார எல்லைக்குட்பட்டு இந்த நோக்கங்களை அடைய நடவடிக்கைகளை மேற்கொள்ளுதல்

4. பன்னாட்டு வாணிபம், பொருளாதார வளர்ச்சி தொடர்பான சிக்கல்கள் பற்றிய ஐக்கிய நாடுகள் அமைப்பு முறைக்கேற்ப, மற்றைய நிறுவனங்களின் நடவடிக்கைகளை இணைப்பதை மறுபடியும் கொண்டுவருதல், இது தொடர்பான சட்டப் பொறுப்புக்களை நிறைவேற்றுவதில் பொதுச் சபையோடும், பொருளாதார சமுதாய மன்றத்தோடும் ஒத்துழைத்தல்
5. ஐக்கிய நாடுகளின் சட்டம், 7வது விதியின் படி அரசுகள் வட்டார வளர்ச்சிக்குழுக்கள் ஆகியவற்றின் பொருளாதார வளர்ச்சிக் கொள்கைகள், வாணிபம் தொடர்பானவற்றை இணைக்கின்ற நிலையமாகச் செயல்படுதல்.

### c).வழிகாட்டும் கொள்கைகள் (Directive Principles):

வாணிபம் மற்றும் வளர்ச்சிக்கான ஐக்கிய நாடுகளின் முதல் மாநாட்டில் (UNCTAD I) 130 நாடுகள், 13 சிறப்புப் பிரதிநிதிகள், 23 அரசு அல்லாத நிறுவனங்கள் பங்கு பெற்றன. இந்த மாநாட்டில் முக்கியமான வழிகாட்டும் கொள்கைகளை வரையறுத்தனர். அவற்றைச் சுட்டிக்காட்டலாம்.

1. மொத்த பன்னாட்டுச் சமுதாயத்தின் பொது நோக்கமாக பொருளாதார வளர்ச்சியும், சமுதாய முன்னேற்றமும் இருக்க வேண்டும். இதற்கான அமைதியான தொடர்புகளையும் ஒத்துழைப்பையும் பெற வேண்டும்.
2. பொதுவாக மொத்த உலகத்தோடும், குறிப்பாக வளர்ச்சி பெறும் நாடுகளின் தேவைகளோடும் நலத்தோடும் இசைந்து வருகின்ற வகையில், உழைப்புப் பகிர்வினை அடையும் நோக்கில் நாடுகள், உலகத்தின் பொருளாதாரக் கொள்கைகளை வழிநடத்த வேண்டும்.
3. வளர்ச்சி பெற்ற நாடுகள், வளர்ச்சி குறைந்த நாடுகளின் வாணிபத்தைப் பாதிக்கின்ற வாணிபத்தடைகளைக் குறைக்க வேண்டும்.மேலும் வளர்கின்ற நாடுகளின் பொருட்களுக்குரிய அங்காடியை விரிவடையச் செய்ய வேண்டும்.
4. வளர்ச்சி பெற்ற நாடுகள் சுங்கவரி மற்றும் சுங்கவரியற்ற புதிய சலுகைகளை எல்லாம் வளர்ச்சி குறைந்த நாடுகளுக்கு வழங்க வேண்டும். இவற்றை வளர்ச்சிபெற்ற நாடுகளுக்கு அளிப்பதோடு மட்டும் நிறுத்திக் கொள்ளக் கூடாது.
5. வளர்ச்சி பெற்ற நாடுகள் வழங்கும் மானியம் உதவித்தொகை ஆகியவற்றை அரசியல் இராணுவ நோக்கங்களோடு இணைக்கக் கூடாது.
6. நாடுகளுக்கிடையிலிருக்கும் பொருளாதாரத் தொடர்புகள் சமத்துவம், உள்நாட்டு நடவடிக்கைகளில் தலையிடாமை ஆகிய கொள்கைகளைச் சார்ந்திருக்க வேண்டும். பொருளாதார அமைப்பு முறையின் அடிப்படையில் எந்த வகையான வேறுபாடும் காட்டக்கூடாது.

**d).மாநாடுகள் - செயல்பாடுகள்: சாதனைகள்:**

வாணிபம் மற்றும் வளர்ச்சிக்கான ஐக்கிய நாடுகளின் மாநாடு பன்னாட்டுப் பணநிதி, உலக வங்கி போன்ற மிகசக்தி மிக்க மூன்றாவது உலக அமைப்பாக வரும் என்று சிலர் கருதினர். வேறு சிலர் இந்த அமைப்புவெறும் கருத்துக்களின் அரங்கேற்றமாக இருக்குமென்று நம்பினர். நாம் ஒவ்வொரு மாநாடாக நடைபெற்றவற்றை விளக்கி மதிப்பீடு செய்யலாம்.

**(i)முதல் மாநாடு (UNCTAD I)**

1964 இல் நடைபெற்ற முதல் மாநட்டில் செயல் திட்டத்தையும் முன்னுரிமைகளையும் வரையறுத்தனர். வளர்ச்சி குறைந்த நாடுகளின் பொருளாதார வளர்ச்சியின் முதன்மைப் பொறுப்பை அந்த நாடுகள்தான் ஏற்க வேண்டுமென்பதை மாநாடு வலியுறுத்தியது. வெளிநாட்டு வாணிபமும் பன்னாட்டுப் பொருளாதாரத் தொடர்புகளும் ஒரு நாட்டின் வளர்ச்சியை நிர்ணயிப்பதால், மாநாடு அடிப்படைப் பொருளாதார கொள்கைகளையும் நடைமுறைகளையும் விளக்கியது. வளர்ச்சி பெற்ற நாடுகளுக்கும் வளரும் நாடுகளுக்கிடையில் நடைபெறும் வாணிபத்தில் வேண்டிய மாற்றங்களைக் கொண்டுவர வேண்டுமென்பதைச் சுட்டிக்காட்டினர்.

புதிய பன்னாட்டு வேலைப் பகுப்பினை மேற்கொண்டு, வெளித்துறையை வளரும் நாடுகளுக்கேற்றவாறு மாற்றுவதை முக்கிய நோக்கமாகக் கொண்டு மாநாடு சில பரிந்துரைகளை அளித்தது. வளர்ந்த நாடுகள், வளர்கின்ற நாடுகள் ஏற்றுமதி செய்கின்ற பொருட்களுக்கோ இறக்குமதி செய்கின்ற பொருட்களுக்கோ மேலும் சுங்கவரித் தடுப்புச் சுவரையோ மற்றைய தடைகளையோ ஏற்படுத்தக் கூடாது. வளர்ந்த நாடுகள் இருக்கின்ற வாணிபத் தடைகளைப் படிப்படியாகக் குறைத்து வளர்கின்ற நாடுகளிலிருந்து ஏற்றுமதிகள் தொடர்ந்துவர அனுமதிக்க வேண்டும். வளர்கின்ற நாடுகள் ஏற்றுமதியைக் கூட்ட ஊக்க நடவடிக்கைகளை மேற்கொள்ள வேண்டும். பன்னாட்டு வாணிபக் கொள்கைகளின் ஒரு பகுதியாக பன்னாட்டுப் பொருள் ஒப்பந்தத்தை ஏற்றுக் கொள்ள வேண்டும். அது வளர்கின்ற நாடுகளுக்கு இலாபகராமான, சமமான நிலையான விலைகள் கிடைக்கும் நோக்கத்தோடு அமைய வேண்டும்.

ஒவ்வொரு வளர்ச்சி பெற்றநாடும் அதனுடைய வருவாயில், குறைந்த அளவு ஒரு சதவிகிதமாவது வளர்கின்ற நாடுகளுக்கு அன்னிய உதவித்தொகையாக வழங்க வேண்டும்.

குறிப்பு

கப்பல் போக்குவரத்து, சுற்றுப்பயணம் போன்ற புலனாகாத வாணிபத்தை வளர்க்கப் பல பரிந்துரைகளை மாநாடு கூறியது.

பரிந்துரைகள் அருமையானவைகளாக இருந்தபோதிலும், அவற்றில் எதனையும் போற்றத்தக்க வகையில் செயல்படுத்தவில்லை என்பது குறிப்பிடத்தக்கது. எடுத்துக்காட்டாக, வளர்ச்சி பெற்ற நாடுகள், அவற்றின் வருவாயில் ஒரு சதவிகிதத்தை வளர்ச்சி குறைந்த நாடுகளுக்கு உதவித் தொகையாகக் கொடுக்க வேண்டுமென்ற கருத்தைப் பல வளர்ச்சிபெற்ற நாடுகள் முழுமையாகச் செயல்படுத்தவில்லை. 1996 இல் வளர்ச்சி பெற்ற நாடுகள் தங்களது மொத்த வருவாயில் 0.62 சதவிகிதம் தான் உதவித்தொகையாக வழங்கியிருந்தன. முதல் மாநாட்டு பரிந்துரைகளில் பல கருத்துக்களாக இருந்தனவே தவிர செயல்வடிவம் பெறவில்லை.

**(ii)இரண்டாம் மாநாடு (UNCTAD II) :**

மூன்றாண்டுகளுக்கு ஒரு முறை வாணிபம் மற்றும் வளர்ச்சிக்கான ஐக்கிய நாடுகளின் மாநாட்டை நடத்தவேண்டுமென்று ஐக்கிய நாடுகளின் பொதுச்சபை கூறியிருந்தபோதிலும், இரண்டாம் மாநாடு நான்காண்டுகளுக்குப் பிறகு 1968 -இல் பிப்ரவரி முதல் நாளிலிருந்து மார்ச் 30 வரை புதுடில்லியில் நடைபெற்றது. இதில் 121 நாடுகளின் சார்பாளர்கள் கலந்துகொண்டார்கள். இந்த மாநாட்டிற்கு அன்றைய மத்திய அமைச்சர் தினேஷ்சிங் தலைமை தாங்க, அன்றைய தலைமைஅமைச்சர் இந்திராகாந்தி மாநாட்டைத் தொடங்கி வைத்தார். இந்த மாநாட்டில் 1968 முதல் 1970 வரை பின்பற்றக் கூடிய ‘செயல்திட்டம்’ (Action Programme) ஒன்றை உருவாக்க விரும்பினார்.

இரண்டாம் மாநாட்டின் முக்கிய நோக்கங்களாக

1. முதல் மாநாட்டின் பரிந்துரைகளைச் செயல்படுத்தியதன் விளைவுகளையும், பொருளாதார சூழ்நிலையையும் ஆராய்தல்
2. வளர்ச்சிக்கான பன்னாட்டு ஒத்துழைப்பில் உண்மையான முன்னேற்றத்தை ஏற்படுத்தக் கூடிய சரியான ஒப்பந்தங்களைத் தொடங்குவதன் மூலம் திட்டவட்டமான விளைவுகளைப் பெறுதல்
3. பலன் தரக்கூடிய ஒப்பந்தங்களைத் தீர்மானிக்கும் முன்னால் அவை தொடர்பான விவரங்கள் பற்றி ஆராய்தல் ஆகியவற்றைக் கொண்டனர்.

இரண்டாவது மாநாட்டின் நிகழ்ச்சி நிரலில் இடம் பெற்றவை:

1. உலக வாணிபம், வளர்ச்சி ஆகியவற்றின் போக்குகளும் சிக்கல்களும்
2. பொருள் சிக்கள்கள் பல்வேறு நாடுகளின் கொள்கைகள்

3. வளர்ச்சி முன்னேற்ற நிதி மற்றும் வளர்கின்ற நாடுகளுக்கு உதவி
4. வளர்கின்ற நாடுகளின் வினைமுடிந்த பகுதி வினைமுடிந்த பொருட்களின் ஏற்றுமதிகளைப் பெருக்குதல் பல்வகைப்படுத்துதல்
5. கப்பல் போக்குவரத்து உள்ளிட்ட புலனாகாத பணிகளின் தொடர்பான வளரும் நாடுகளின் சிக்கல்கள்
6. வளர்கின்ற நாடுகளின் பொருளாதார ஒருங்கிணைத்தல் வாணிப வளர்ச்சி பற்றிய சிக்கல்களும் நடவடிக்கைளும்
7. வளர்கின்ற நாடுகளில் மிகவும் வளர்ச்சி குறைந்துள்ள நாடுகளுக்குச் சாதகமாக எடுக்கவேண்டிய சிறப்பு நடவடிக்கைகள்
8. மாநாட்டின் (UNCTAD) வேலை மற்றும் பணிகள் பற்றிய பொது மதிப்பீடு

வளர்ச்சி பெற்ற நாடுகள், வளர்ச்சி குறைந்த நாடுகளின் ஏற்றுமதி வருவாயைப் பெருக்க வேண்டிய அவசியத்தை உணர்ந்தன. ஆதலால் இறுதித்தீர்மானம், வளர்கின்ற நாடுகளுக்குச் சாதகமான, எல்லோரும் பொதுவாக ஏற்றுக்கொள்கின்ற, எதிர்பலனற்ற, வேறுபடுத்தாத முறையினை உருவாக்க வேண்டிய தேவையை வலியுறுத்தியது. இதனை "முன்னுரிமைகளின் பொதுமைப்படுத்தப் பெற்ற முறை" (Generalised System of Preferences – GSP) என்று குறிப்பிட்டனர்.

ஒவ்வொரு வளர்ச்சி பெற்ற நாடும் அதனுடைய மொத்த வருவாயில் ஒரு சதவிகிதத்தை இறக்குமதியாளர்களின் மூலதனமாகும் வகையில் கொடுக்க வேண்டுமென்று தீர்மானித்தனர். பொருட்களைப் பற்றிய ஒப்பந்தங்கள் தொடர்பாக முடிவு செய்தனர். சமதர்ம நாடுகளை வளர்கின்ற நாடுகளோடு பல்வகைப்பட்ட பொருட்களின் வாணிபம் செய்யும்படி கேட்டுக்கொண்டனர். மாநாடு வளர்கின்ற நாடுகளுக்கிடையில் வாணிபம் விரிவாக்கமும், பொருளாதார ஒருங்கிணைப்பும் ஏற்பட வேண்டிய தேவையை வலியுறுத்தியது.

மாநாட்டில் நிகழ்ச்சி நிரலில் இருந்த பொருட்கள் பற்றி தெளிவாக விவாதித்த போதிலும், விளைவுகள் வளர்கின்ற நாடுகளுக்கு ஏமாற்றம் அளிப்பனவாகவே இருந்தன. இரண்டாவது மாநாட்டின் சாதனைகள் சாதாரண நிலையிலேயே அமைந்தன. பன்னாட்டுப் பொருளாதாரக் கூட்டுறவுத்தீபத்தை ஏந்துவதில் இந்த மாநாடு வெற்றி கண்டதென்று கூறலாம்.

**(iii)மூன்றாம் மாநாடு (UNCTATE III):**

மூன்றாவது மாநாடு தென்னாப்பிரிக்காவிலுள்ள சிலி நாட்டின் சாந்தியாகோ என்ற இடத்தில் 1972 ஆம் ஆண்டில் ஏப்ரல் 13 ஆம் தேதி முதல் மே 17 ஆம்

தேதி வரை நடைபெற்றது. அதில் 96 வளரும் நாடுகள் உள்ளிட்ட 120 உறுப்பினர் நாடுகள் பங்குபெற்றன. வளர்கின்ற நாடுகள் 'குழு 77' (Group of 77) என்றழைக்கும் வகையில் இணைந்து நின்று வளர்ந்த நாடுகள் ஏழை நாடுகளுக்குத் தாராளமாக உதவிசெய்யாததைக் கண்டித்தன.

அதற்கு முந்திய பத்தாண்டுகளில் உலக வாணிபம் குறிப்பிட்ட அளவு வளர்ந்த போதிலும், வளர்ச்சி பெறும் நாடுகளின் ஏற்றுமதி உலக ஏற்றுமதியில் 1960 இல் 21 சதவிகிதமாக இருந்தது. 1970 இல் 18 சதவீதமாகக் குறைந்தது. ஆனால் வளர்ந்த நாடுகளின் ஏற்றுமதி இக்காலத்தில் 67 சதவிகிதத்திலிருந்து 71 சதவிகிதமாகக் கூடியது. இதனை மாநாட்டின் கவனத்திற்குக் கொண்டு வந்தனர்.

இந்த மாநாட்டில் விவாதிக்கப் பெற்றவற்றில் முக்கியமானவை:

i) அன்னிய உதவியைத் தொடர்தல்
ii) குறைந்த விகித நிபந்தனையற்ற கடன்கள்
iii) கடன் சுமையை ஓரளவு குறைத்தல்
iv) கப்பல் போக்குவரத்து கட்டணங்களின் சிக்கல்
v) சிறப்பு எடுப்பு உரிமைக்கும் (S.D.R) வளர்ச்சி நிதிக்கும் தொடர்பு ஆதலால் மூன்றாம் மாநாட்டின் தீர்மானங்கள்

i. தொழில் நுட்பப் பரிமாற்றம்
ii. பன்னாட்டுப் பணச்சீர்திருத்தம்
iii. பொது முன்னுரிமைகள்
iv. மாநாட்டுச் செயல்முறைச் சீர்திருத்தம்
v. மாநாட்டுகளுக்கான பன்னாட்டு நடத்தைவிதி முறைகள் ஆகிய முக்கியமானவை தொடர்பானவைகளாக இருந்தன

வளர்ந்த நாடுகளைப் பொறுத்தவரை இது ஒரு வெற்றிகரமான மாநாடாகும். ஆனால் வளர்கின்ற நாடுகளுக்கு இது ஒரு பெருந்தோல்வியாகவே அமைந்தது. 'குழு 77 நாடுகள்' கொண்டு வந்த தீர்மானங்களின் விளைவுகள் ஊக்கப்படுத்துவதாக இல்லை.

கப்பல் கட்டணங்களில் மாற்றம் செய்ய வேண்டிய தேவை பற்றி ஆராய்ந்தனர். வளர்ச்சி குறைந்த நாடுகளில் இருக்கும் அன்னியச் செலுத்து நிலைப் பற்றாக்குறையில் மூன்றில் ஒரு பங்குக்குக் காரணம் மிகுதியான கப்பல் கட்டணமென்று மதிப்பிடனர். உலகக் கப்பல்களில் 92 சதவிகிதம் வளர்ச்சி பெற்ற நாடுகளின் கையில் இருந்தன. கப்பல் கட்டணவிதிப்பில் 'பன்னாட்டு

குறிப்பு

நடைமுறை ஒழுங்கினை' (International Code of Conduct) ஏற்கத் தீர்மானித்தது முக்கியமானதாகும்.

இத்தகைய பன்னாட்டு நடைமுறை ஒழுங்கின் நோக்கங்களாக

1. உலக வாணிபத்தைக் கூட்டுதல்
2. வளர்கின்ற நாடுகள் பெரும்பங்கு பெறுகின்ற கப்பல் போக்குவரத்தின் அமைப்பு முறையை உருவாக்குதல் ஆகியவை இருந்தன.

எதிர்காலப் கப்பல் கட்டணங்கள் வளர்கின்ற நாடுகளின் தேவைகளை நிறைவு செய்கின்ற வகையில் இருக்கும். கட்டகணங்களைக் கூட்டுகின்ற காலங்களுக்கு இடையில் குறைந்தது இரண்டாண்டுகள் இடைவெளி இருக்கவேண்டும். கட்டண விகிதங்கள் வாணிப நோக்கில் மிகக்குறைவாக இருக்க வேண்டும்.

கப்பல் போக்குவரத்து மாநாடு நடத்த வளர்ச்சி பெற்ற நாடுகள் கொள்கையளவில் ஒரு மனதாக ஏற்றுக் கொண்டது குறிப்பிடத்தக்க சாதனையாகும்.

**(iv)நான்காம் மாநாடு (UNCTAD IV):**

77 வளரும் நாடுகளின் கூட்டம் 1976 பிப்ரவரியில் மணிலாவில் நடைபெற்றது. அதில் வளர்ந்த நாடுகளுக்கு எதிராக வளரும் நாடுகள் தங்களது வாணிப நலனைக்காக்க ஒரு செயல் திட்டத்தை வகுக்க வேண்டுமெனத் தீர்மானித்தனர். வருகின்ற நான்காவது மாநாட்டில் வளர்கின்ற நாடுகளின் பொருள் வாணிபத்தை மாற்றியமைக்க பங்குபெறும் நாடுகளைத் தூண்டுவதென்று முடிவு செய்தனர். 10 அடிப்படைப் பொருட்களின் பேரளவு இருப்பினை உருவாக்க ஒரு பொது நிதியை உருவாக்கும் நோக்கம் இருந்தது. வளர்கின்ற நாடுகளின் உதவிகளைப் பெற விதி முறைகளை எளிமைப்படுத்த வேண்டுமெனவும் வலியுறுத்தினர்.

நான்காவது மாநாடு 1976 மே மாதத்தில் நைரோபியில் நடைபெற்றது. இம்மாநாட்டில்

1. வளர்ந்து வரும் நாடுகளின் வாணிபம் பொருட்கள் தொடர்பான ஒருங்கிணைந்த செயல் திட்டம்
2. தொழில் நுட்ப மாற்றம் பற்றி நடத்தை விதிமுறைகள்
3. வளர்ந்து வரும் நாடுகளின் கடன் சிக்கல் தொடர்பான நடவடிக்கைகள் ஆகிய மூன்று முக்கியமானவை பற்றி விவாதித்தனர்.

இந்த மாநாட்டில் மேற்கொண்ட முக்கியமான தீர்மானங்களைத் தொகுத்துக் கூறலாம்.

1. 1977 மார்ச்சுக்கு முன்னால் பேரளவு இருப்புக்கு நிதிவழங்க பொதுநிதி வழங்குவது தொடர்பாக ஒரு மாநாடு நடத்த ஒப்புக்கொண்டனர்.
2. வளர்கின்ற நாடுகளிலிருந்து ஏற்றுமதிப் பொருட்களைப் பெருக்கவும், பொருள் வாணிபத்தில் நிலையான சூழ்நிலையை உருவாக்கவும் ஏற்ற ஒருங்கிணைந்த பொருள் திட்டத்தை ஏற்படுத்த முடிவு செய்தனர்.
3. தொழில்மயமான நாடுகள், பன்னாட்டு வள வங்கியை உருவாக்கக் கொடுத்த தீர்மானத்தை மாநாடு ஏற்கவில்லை
4. வளர்கின்ற நாடுகளின் எதிர்கால நடவடிக்கைகளுக்கு வழிகாட்டும் வகையில் அவற்றின் கடன் சிக்கல்களைப் பற்றி ஆராய பன்னாட்டு ஆய்வு மன்றங்களைக் கேட்டுக்கொள்ள முடிவு செய்தனர்.
5. பொதுமைப் படுத்தப் பெற்ற முன்னுரிமை முறையினை மேலும் சீர்திருத்தி பத்தாண்டுகளுக்கு மேலும் பின்பற்ற ஒப்புக்கொண்டனர்.
6. ஜெனிவாவில் நடைபெறும் பன்முக வாணிப ஒப்பந்தங்களில் (Multilateral Trade negotiations) பங்குபெறப் பரிந்துரைத்தனர்.
7. வளர்கின்ற நாடுகளுக்கு ஏற்றுமதிக் கடன் மறுநதி வழங்கும் வாய்ப்புக்களைப் பற்றி உலக வங்கியும் வட்டார வளர்ச்சி நிறுவனங்களும் ஆராயக் கேட்டுக்கொண்டனர்.
8. வளர்ச்சி குறைந்த நாடுகளின் வாணிபத் தொழில் நுட்ப வளர்ச்சிக்கு உதவுவதென முடிவு செய்தனர்
9. மாநாட்டு (UNCTAD) அமைப்பினை வலுப்படுத்துவதெனவும் தீர்மானாத்தனர்.

இந்த மாநாட்டைப்பற்றி மாறுபட்ட கருத்துக்கள் கூறப்பெற்றன. பலவற்றைப் பற்றி தீர்மானமான முடிவுக்குவர முடியாவிட்டாலும், ஓர் அர்த்தமுள்ள சீர்திருத்தத்தைக் கொண்டு வரவும் மாநாட்டை வலுப்படுத்தவும் ஓரளவு முயற்சியில் வெற்றி கண்டனர்.

**(v)ஐந்தாவது மாநாடு (UNCTAD V)**

பிலிப்பைன்சிலுள்ள மணிலாவில் 1979 மே மாதம் 7 ஆம் தேதி தொடங்கி 1979 ஜுன் 3 வரை ஐந்தாவது மாநாடு நடைபெற்றது. இதில் உறுப்பு நாடுகளையும், பன்னாடு அமைப்புக்களையும் சேர்ந்த 150 பிரதிநிதிகள் பங்குபெற்றனர். உலகத்தின் வளர்கின்ற தொழில் அங்காடி பற்றியும், சமதர்ம நாடுகளின் பொருளாதாரம் பற்றியும் விவாதித்தனர். இறுதியில், வளர்கின்ற

நாடுகளுக்கு வளங்களை மாற்றுதல், பொருட்கள் பாதுகாப்பு போன்றவை பற்றி ஒரே மனதான ஒப்பந்தங்கள் நிறைவேறின. ஆனால், பணச்சீர்திருத்தம், பொருள் ஏற்றுமதி வருவாயை ஒரு நிலைப்படுத்தும் துணை செய் நிதிவசதியை உருவாக்குதல் போன்ற முக்கியமானவை பற்றி எந்தத் தீர்மானமும் செய்யப்படவில்லை.

ஐந்தாவது மாநாட்டு நிகழ்ச்சி நிரலில்

1. வாணிபச் சார்புடையமை
2. பணம், நிதி வளர்ச்சியும்
3. உலகப் பொருளாதாரத்தில் அமைப்புமுறை மாற்றம்
4. பன்னாட்டு வாணிபத்தில் வளர்ச்சி
5. பொருட்கள் வினைமுடிந்த பொருட்கள், பகுதிவினை முடிந்தவை
6. பண, நிதிச்சிக்கல்கள்
7. தொழில் நுட்பம்
8. கப்பல் போக்குவரத்து
9. முடக்கப்பட்ட நிலம், தீவுகள் வளரும் நாடுகள்
10. வேறுபட்ட பொருளாதார சமுதாய அமைப்பு முறைகளைக் கொண்ட நாடுகளுக்கிடையில் வாணிபத் தொடர்புகள்
11. வளர்கின்ற நாடுகளுக்கிடையில் பொருளாதாரக் கூட்டுறவு
12. நிறுவனச் சிக்கல்கள்

ஆகிய 12 முக்கியமான விவரங்கள் இடம் பெற்றன.

அடிப்படைச் சிக்கல்கள் பற்றி எந்த முக்கிய தீர்மானமும் செய்யவில்லை. ஆனால் வளர்ச்சிபெறும் நாடுகளுக்கு வளங்களை மாற்றுதல், பாதுகாப்பு ஆகியவை பற்றி ஒரே மனதாகத் தீர்மானங்கள் நிறைவேற்றினர்.

### (vi)ஆறாவது மாநாடு (UNCTAD – VI)

1983 ஆம் ஆண்டு ஜுன் 6 இல் ஆறாவது மாநாடு பெல்கிரேடில் நடைபெற்றது. ஒரு புதிய பன்னாட்டுப் பொருளாதார முறையினை உருவாக்குவது இந்த மாநாட்டின் மையக் கருத்தாக இருந்தது.

முதலாவது, இந்த மாநாட்டில் வளர்கின்ற நாடுகளின் கோரிக்கைகளான, வாணிபம், நிதி, பொருடக்ள் எனும் மூன்று வகைகளை உள்ளடக்கிய 20 தீர்மானங்களை ஆலோசித்தது.

இரண்டாவதாக, வளர்கின்ற நாடுகளுக்குப் பாதகமாகச் செயல்படும் வாணிப வீதங்கள் பற்றி விவாதித்தனர்.

மூன்றாவதாக, வளர்கின்ற நாடுகளின் 700 மில்லியன் டாலராக் குவிந்திருக்கும் கடன் பற்றி ஆராய்ந்தனர்.

பலவற்றைப் பற்றி விவாதித்த போதிலும், எந்த ஆக்கப்பூர்வமான முடிவும் செய்யப்படவில்லை.

### (vii)ஏழாவது மாநாடு (UNCTAD VII)

ஏழாவது மாநாடு ஜேனிவாவில் 1987 ஆம் ஆண்டு ஜுலை – ஆகஸ்டு மாதங்களில் நடைபெற்றது. இதில் 150 நாடுகளின் கடினமான கடன் சிக்கலைத் தீர்த்தல், பன்னாட்டு வாணிபத்தில் வளர்கின்ற போக்காகக் காணப்படும் பாதுகாப்புப் போக்கினைத் தடுத்து நிறுத்துதல், மிகவும் வளர்ச்சி குறைந்த நாடுகளின் பொருளாதார சமுதாய நிலைகளை முன்னேற்றுதல் ஆகியவை தொடர்பான தீர்மானங்களைக் கொண்டுவந்தனர்.

1. பன்னாட்டு வாணிபம்
2. மூன்றாம் உலகக்கடன்
3. பொருட்கள்
4. வளர்ச்சி குறைந்த நாடுகளுக்குப் பொருளாதார உதவி

ஆகிய நான்கு முக்கிய பொருள் பற்றியே விவாதங்கள் சுழன்றன. ஏழை, பணக்கார நாடுகளுக்கிடையில் ஒருங்கிணைந்த பொருட்கள் நிகழ்ச்சி (Integrated Commodity Programme – ICP) பற்றி ஏற்பட்ட ஒப்பந்தம் மிகவும் முக்கியமானதாகும்.

### (viii)எட்டாவது மாநாடு (UNCTAD VIII)

எட்டாவது மாநாடு கொலமபியாவிலுள்ள கார்ட்டாஜீன் என்ற இடத்தில் 1991 பிப்ரவரியில் நடைபெற்றது. இதல் 170 உறுப்பு நாடுகள் பங்குபெற்றன. மற்றைய மாநாடுகளைப் போலின்றி, இந்த மாநாடு வடக்கு, தெற்கு, கிழக்கு, மேற்கு என்ற உணர்வுகளின் மோதலின்றி நடைபெற்றது. இம்மநாட்டில் வாணிபம், மற்றும் வளர்ச்சிக்கான ஐக்கிய நாடுகளின் மாநாட்டின் (UNCTAD) பங்கு பற்றியே விவாதித்தனர். மாநாட்டை வலுப்படுத்தி, வளர்ச்சி பற்றிய சிக்கல்களை மிகவும் பயனள்ள வகையில் தீர்க்கும் நிலையை உருவாக்க வேண்டிய நடவடிக்கைகள் எடுக்க உறுப்பு நாடுகள் ஒப்புக்கொண்டன.

மாநாட்டிற்குப் புதிய அமைப்பினை வழங்கபவேண்டுமென்பதை எல்லா உறுப்பு நாடுகளும் ஏற்றுக்கொண்டன. புதிய அமைப்பில் (1) நான்காண்டுகளுக்கு ஒருமுறை கூட்டம் நடத்துதல்; (2) வாணிபம், போக்குவரத்து மன்றத்தை (Trade and Development Board-TDB) இரண்டாண்டுகளுக்கு ஒருமுறை ஒழுங்காக

குறிப்பு

நடத்துதல்; (3) மன்றத்தின் செயற்குழுவை அடிக்கடி கூட்டுதல்; (4) பொருட்கள், வறுமை ஒழிப்பு, வளர்கின்ற நாடுகளுக்கிடையில் பொருளாதாரக் கூட்டுறவு, பணிகள் பற்றிய புதிய நிலைக்குழுக்களை (Standing Committiees) அமைத்தல், (5) சிறப்புக்குழுக்களும் அணிகளும் செயல்படல்; (6) தற்காலிகப் பணிக்குழுக்களை அமைத்தல்

## 8.2. கட்டணம் மற்றும் வர்த்தகம் மீதான பொது ஒப்பந்தம்(GATT) மற்றும் டோக்கியோ வரையறை

### III.சுங்கவரி மற்றும் வாணிபம் பற்றிய பொது ஒப்பந்தம் (General Agreement on Tariffs and Trade- GATT)

**a).உலக வாணிப ஒப்பந்தம் - பின்புலம்**

1929-1993 இல் ஏற்பட்ட உலகப் பெருமந்தத்தை ஒட்டி உலக வாணிப வளர்ச்சி பெரிதும் பாதிக்கப்பட்டது. வாணிபச் சூழ்நிலைகள் சீர்கெட்டதனால் பெரும்பாலான நாடுகள் காப்பு வாணிபத்தைப் பின்பற்றி தடைகளை உருவாக்குதல், சுங்கவரிகளை உயர்த்துதல், இறக்குமதி பங்களவுகளை நிர்ணயித்தல், செலாவணிக் கட்டுப்பாடுகளை விதித்தல் போன்ற நடவடிக்கைகைகளை மேற்கொண்டன. இரண்டாம் உலப்போர்க் காலத்தில் மேலும் உலக வாணிபம் தடைகளுக்குள்ளாகி, பல சிக்கல்களை எதிர்நோக்கும் நிலைக்குத் தள்ளப்பட்டது.

இரண்டாம் உலகப்போர் முடிவுற்ற நிலையில் அமெரிக்கா உள்ளிட்ட நேசநாடுகள், உலக நாடுகளுக்கிடையில் பொருளாதாத் துறையில், வாணிபத்திலும் கூட்டுறவு ஏற்பட வேண்டிய அவசியத்தை உணர்ந்தன. இதற்காகப் புதிய உலக நிறுவனங்களைத் தோற்றுவிக்க விரும்பின.

1944 இல் நடைபெற்ற பிரட்டன் உட்ஸ் மாநாட்டின் (Bretton Woods Conference) விளைவாக உலக வாணிப வளர்ச்சிக்குத் துணைசெய்யும் வகையில் பன்னாட்டுப் பணநிதியைத் தோற்றுவித்தனர். ஐக்கிய நாட்டுச்சபை, பன்னாட்டுப் பணநிதி போன்று ஓர் உலக வாணிப அமைப்பினை உருவாக்க விரும்பியது.

உலக வாணிப நெறிமுறைகளைக் கொண்ட ஓர் உலக வாணிப ஒப்பந்தத்தை (World Trade Charter) உருவாக்கத் திட்டமிட்டனர். 1945 நவம்பரில் அமெரிக்க ஐக்கிய நாடுகளின் அரசுத்துறை உலக வாணிபத்தையும் வேலைவாய்ப்பையும் விரிவுப்படுத்தத் திட்டங்களை வெளியிட்டது. இவற்றில்

பன்னாட்டு வாணிப அமைப்பை (International Trade Organisation) உருவாக்குவதும் ஒன்றாகும். 1946 இல் இலண்டனில் ஒரு மாநாட்டை நடத்தினர். 1946 மார்ச்சில், ஐக்கிய நாட்டுச் சபையின் பொருளாதார சமுதாய மன்றத்திடம் உலக வாணிப அமைப்பை உருவாக்கும் ஒப்பந்தத்தை (Charter) தயாரிக்கும் பொறுப்பை ஒப்படைத்தது.

உலக வாணிப அமைப்பு ஒப்பந்தத்தை உருவாக்கும் நிலையிலேயே, அந்த ஏற்பாடுகளில் ஈடுபட்டிருந்த நாடுகளின் தயாரிப்புக்குழு உலக வாணிப அமைப்பு ஏற்படும் முன்பே சுங்கவரிகளைக் குறைக்கவும், வாணிபத்தடைகளைத் தளர்த்தவும் முதல் சுங்கவரிகள் ஒப்பந்த மாநாடு ஒன்றினை 1947 ஜெனிவாவில் நடத்தியது. அதில் 23 நாடுகள் மிக விரிவாக சுங்கவரிகள் பற்றியும் வாணிபச் சலுகைகள் பற்றியும் ஓர் ஒப்பந்தத்தைத் தயாரித்தன. அதுதான், சுங்கவரி மற்றும் வாணிபம் பற்றிய பொது ஒப்பந்தம் (General Agreement on Tariff and Trade) என்பதாகும். இதில் 1947 அக்டோபர் 30 இல் ஒப்பந்த நாடுகள் கையெழுத்திட்டன. இந்த ஒப்பந்தம் 1948 ஜனவரி ஒன்று முதல் நடைமுறைக்கு வந்தது.

பன்னாட்டு வாணிப அமைப்பு பற்றிய ஒப்பந்தத்தில் 1948 மார்ச்சில் கியூபாவின் ஹவானாவில் 53 நாடுகள் கையெழுத்திட்டன். ஆனால் கையெழுத்திட்ட நாடுகளிடம் ஒரு பொதுவான ஒப்புதல் வரவில்லை. இதனால் பன்னாட்டு வாணிப அமைப்புத் தீர்மானம் கைவிடப்பட்டது. அதனுடைய இடத்தில் சுங்கவரி மற்றும் வாணிபம் பற்றிய பொது ஒப்பந்தம் செயல்படுகின்றது.

**b).பொது ஒப்பந்தத்தின் நோக்கங்கள் பணிகள், செயல்பாடு:**

சுங்கவரி மற்றும் வாணிபம் பற்றிய பொது ஒப்பந்தம் (GATT) 1947 ஆம் ஆண்டில் 23 நாடுகள் கையெழுத்திட உருவான அமைப்பு இன்று உலகம் தழுவிய ஒன்றாக வளர்ந்துள்ளது. 1993 ஏப்ரலில் இதன் ஒப்பந்த நாடுகளின் எண்ணிக்கை 110 ஆக உயர்ந்துள்ளது. அதாவது உலக வாணிபத்தில் 90 சதவிகிதம் இந்த ஒப்பந்தத்திற்குள் வருகின்றது. மேலும் 26 நாடுகள் இதில் சேர விண்ணப்பித்துள்ளன.

**b).அமைப்பு முறை:**

பொது ஒப்பந்தத்தின் பொறுப்புக்கள் கூடக்கூட, அதனுடைய நிர்வாக அமைப்பு முறையை வலுப்படுத்த வேண்டிய தேவை ஏற்பட்டது. 1960 மே–ஜூனில் ஒப்பந்த நாடுகளின் சிறப்புக்குழு சுங்கவரி மற்றும் வாணிபம் பற்றிய பொது ஒப்பந்தம் செயல்படும் முறைகள் பற்றியும், அமைப்பு முறை பற்றியும் மதிப்பீடு

குறிப்பு

செய்து, பரிந்துரைத்ததன்படி, ஒப்பந்த நாடுகள் பிரதிநிதிகள் மன்றத்தை (Council of Representatives) அமைத்தது.

பிரதிநிதிகள் மன்றம், பொது ஒப்பந்த நாடுகளின் அமர்வுகளுக்கு (Sessions) இடைப்பட்ட காலத்தில் வரும் அவசரக் காரியங்களைக் கவனித்தல், குழுக்களின் வேலைகளை மேற்பார்வை செய்தல், சுங்கவரி மற்றும் வாணிபப் பொது ஒப்பந்த அமர்வுகளுக்கு வேண்டியவற்றைத் தயாரித்தல் ஆகிய பணிகளைச் செய்கின்றது. இந்த பிரதிநிதிகள் மன்றத்தில் ஒப்பந்த நாடுகளின் நியமிக்கப் பெற்ற சார்பாளர்கள் உறுப்பினர்களாக இருக்கின்றனர்.

**c).நோக்கங்கள்:**

பன்னாட்டு வாணிபத்திலிருக்கும் சுங்கவரித்தடைகளைக் குறைத்தல், வேறுபடுத்துதலை நீக்குதல் ஆகியவற்றிற்காக அமைந்த பொது ஒப்பந்தம் (GATT) கீழ்க்கண்ட நோக்கங்களோடு (AIMS) செயல்படுகின்றது.

1. பன்னாட்டு வாணிபத்தை விரிவுபடுத்துதல்
2. பங்குபெறும் நாடுகளில் முழுவேலை வாய்ப்பை ஏற்படுத்துவதன் மூலம் உலக உற்பத்தியைக் கூட்டுதல்
3. உலக வளங்களைப் பெருக்குதல் முழுமையாகப் பயன்படுத்துதல்
4. மொத்தமாக உலக சமுதாயத்தின் வாழ்க்கைத் தரத்தை உயர்த்துதல்

பொது ஒப்பந்தத்தின் விதிகள் கீழ்க்கண்ட ஆதாரக் கொள்கைகளை (Fundamental Principles) அடிப்படையாகக் கொண்டிருக்கிறது.

1. நாடுகளுக்கிடையே வேற்றுமைப்படுத்தாத வகையில் உலக வாணிபத்தை நடத்த வேண்டும்.
2. உள்நாட்டுத் தொழிலை சுங்கவரியின் மூலம் மட்டுமே காப்பாற்ற வேண்டும். வேறுவாணிப நடவடிக்கைகள் எடுக்கக் கூடாது.
3. உறுப்பு நாடுகளின் நலனுக்கேற்படும் ஆபத்துக்களை தவிர்க்கவே பேச்சு வார்த்தைகள் நடத்தப் பெற வேண்டும்.
4. சுங்கவரி மற்றும் வாணிபம் பற்றிய பொது ஒப்பந்தம் அளிக்கும் வரையறைக்கு உட்பட்டே சுங்கவரிகளைக் குறைத்தல், வாணிபத் தடைகளை அகற்றுதல் ஆகியவற்றை மேற்கொள்ள வேண்டும்.

**d).பொது ஒப்பந்தத்தின் விதிகள்:**

பொது ஒப்பந்தத்தின் (GATT) பல்வேறு விதிகளிலிருந்து (Articles) அதனுடைய நோக்கங்களையும் கொள்களைகளையும் அறிந்து கொள்ளலாம்.

**1. உச்ச சலுகை நாட்டு விதி (Most Favoured Nation Clause)**

நாடுகளுக்கிடையில் வேறுபடுத்தாமல் இருப்பதை முதல் விதி (Article I) உறுதிப்படுத்துகின்றது. இதன்படி ஒரு நாடு ஏதாவது ஒரு நாட்டுக்கு வழங்கும் வரிச்சலுகை நிபந்தனையற்ற முறையில் எல்லா ஒப்பந்த நாடுகளுக்கும் கிடைக்கும். இதன்படி எந்த நாட்டிற்கும் புதிய வாணிபச் சலுகைகள் வழங்கக் கூடாது.

**2. சுங்கவரிச் சலுகைபட்டியல் (Schedule of Tariff Concessions):**

இரண்டாவது விதி அடிப்படை சுங்கவரி பற்றிக் கூறுகின்றது. சுங்கவரிகள் மாநாடுகளின் விளைவாக வழங்கப்பெற்ற சுங்கவரிகளின் பட்டியல் இதில் அடங்குகின்றது. ஒப்பந்தம் கட்டுப்படுத்துகின்ற (Bound) விகிதங்களுக்கு மேல் இறக்குமதி சுங்கவரிகளை விதிக்கக் கூடாது.

**3. அளவோடு தொடர்புடைய தடைகளைப் பொதுவாக நீக்குதல் (General Elimination of Quantitative Restrictions)**

பதினாறாவது வழி வாணிபத்தின் அளவைக் கட்டுப்படுத்துவதைத் தடைசெய்கின்றது. ஒப்பந்த நாடுகள் இறக்குமதி வரிக்கு ஓர் உச்சவரம்பை நிர்ணயித்துக்கொண்டு அதற்குள் செயல்பட வேண்டும்.

**4. விதி விலக்குகள் (Exceptions):**

XX (இருபது), XXI (இருபத்தொன்றாம்) விதிகள் பொதுவான (General) மற்றும் பாதுகாப்புத் (Security) தொடர்பான ஆறு வகையான விதி விலக்குகளை வழங்குகின்றது. ஒப்பந்த நாடுகள் இறக்குமதி பங்கீட்டு அளவுகளைக் கட்டுப்படுத்துவது தொடர்பான விதி விலக்குகள் ஆகும்.

**5. உதவித் தொகை விதிகள்: (Rules on Subsidies):**

1970 இல் டோக்கியோவில் நடைபெற்ற சுற்றுப் பேச்சு வார்த்தையின் படி உதவித் தொகைகள் வழங்குதல் ஈடுகட்டும் வரிகளை விதித்தல் போன்றவற்றை விதிகள் வரையறுத்துத் தருகின்றன.

**6. தகராறுகளைத் தீர்த்தல் (Settlement of Disputes):**

ஒப்பந்த நாடுகளுக்கிடையில் வரும் தகராறுகளைத் தீர்க்க விதிமுறைகள் உள்ளன. இவற்றின்படி, பொது ஒப்பந்த விதி முறைகளை மீறும் நாடுகள் பற்றிய குற்றச்சாட்டுகள் வந்தால், மூன்று முதல் ஐந்து உறுப்பினர்களைக் கொண்டு ஆராயச் செய்து, அதனுடைய பரிந்துரையின்படி தகராறுகள் தீர்க்கப் பெறுகின்றன.

1962 க்கு முன்னர் தயாரிப்பு மூலம் தயாரிப்பு அடிப்படையில் கட்டண பேச்சுவார்த்தைகள் நடத்தப்பட்டன, எனவே அவை பெரிய வெற்றியை அடையவில்லை. வர்த்தக ஒப்பந்தச் சட்டங்களை புதுப்பிப்பதில் அமெரிக்க அரசாங்கத்தின் தீவிர பாதுகாப்புவாத சாதனங்களால் இது முக்கியமாக இருந்தது.

கெண்டி சுற்று. 1962 இல், வர்த்தக விரிவாக்க சட்டம் அறிமுகப்படுத்தப்பட்டது, இதில் பரந்த அளவிலான பலதரப்பு வர்த்தக பேச்சுவார்த்தைகள் (கென்னடி சுற்று என அழைக்கப்படுகிறது) அடங்கும். இந்த சுற்றின் விளைவாக, தொழில்துறை பொருட்களுக்கான கட்டண விகிதங்கள் அவற்றின் 1962 மட்டத்தில் 35 சதவிகிதம் குறைந்து 5 ஆண்டுகளில் கட்டம் கட்டமாக இருக்கும். 1972 ஆம் ஆண்டின் இறுதியில் தொழில்துறை நாடுகளில் கட்டண விகிதங்கள் குறைக்கப்பட்டன, இவை தொழில்துறை தயாரிப்புகளில் 10 சதவீதத்திற்கும் குறைவாகவே உள்ளன. ஆனால் குறிப்பாக விவசாயத் துறையில் சில கட்டணமில்லாத தடைகள் உள்ளன.

டோக்கியோ சுற்று (1974), இந்த சுற்றின் முக்கிய சாதனை வர்த்தகத்தை 60 சதவிகிதம் வரை குறைப்பதன் மூலம் வர்த்தகத்தை மேலும் தாராளமயமாக்குவதாகும், இது 102 உறுப்பு நாடுகளால் ஏற்றுக்கொள்ளப்பட்டது. இதன் முக்கிய தோல்வி என்னவென்றால், விவசாய பிரச்சினை இன்னும் தீர்க்கப்படவில்லை மற்றும் வர்த்தகத்திற்கான கட்டணமில்லாத தடைகளில் குறைப்பு இல்லை.

உருகுவே சுற்று (1986-1994), இந்த சுற்றில், விவசாயம், ஜவுளி சேவைகள் போன்ற புதிய பகுதிகள் அறிமுகப்படுத்தப்பட்டன. இந்த சுற்றின் முக்கிய பொருட்கள் விவசாய பொருட்களுக்கான சந்தை அணுகலை மேம்படுத்துதல், விவசாய பொருட்கள் மீதான குறைப்பு மற்றும் ஜவுளி மற்றும் ஆடை ஒதுக்கீட்டைக் குறைத்தல் ஆகியவை ஆகும்.

## 8.3. உங்கள் முன்னேற்றத்தை சரிபார்க்கும் வினாக்கள்

1.பொது ஒப்பந்தத்தின் நோக்கங்கள் என்ன?

2.ஐக்கிய நாடுகளின் மாநாடு என்றால் என்ன?

## 8.4. உங்கள் முன்னேற்றத்தை சரிபார்க்கும் பதில்கள்

1. பொது ஒப்பந்தத்தின் நோக்கங்கள்

- பன்னாட்டு வாணிபத்தை விரிவுபடுத்துதல்
- பங்குபெறும் நாடுகளில் முழுவேலை வாய்ப்பை ஏற்படுத்துவதன் மூலம் உலக உற்பத்தியைக் கூட்டுதல்
- உலக வளங்களைப் பெருக்குதல் முழுமையாகப் பயன்படுத்துதல்
- மொத்தமாக உலக சமுதாயத்தின் வாழ்க்கைத் தரத்தை உயர்த்துதல்

2. ஐக்கிய நாடுகளின் பொதுச்சபை 1960 முதல் பத்தாண்டுகளை 'வளர்ச்சிக்குப் பத்தாண்டுகள்' (Development Decade) என்று அறிவித்ததன் விளைவாக வாணிபம் மற்றும் வளர்ச்சிக்கான ஐக்கிய நாடுகளின் மாநாடு (Unctad) தோன்றியது.

## 8.5.சுருக்கம்

பன்னாட்டு வாணிபத்தில் சுங்கவரிதடைகளை குறைத்தல் வேறுபடுத்துதலை நீக்குதல் ஆக்கியவற்றிக்காக அமைந்த பொது ஒப்பந்தம் பல ஒப்பந்த நாடுகளுக்கிடையில் வரும் தகராறுகளை தீர்க விதிமுறைகள் உள்ளன அதற்காக பல கற்று பேச்சு வார்த்தைகளின் அடிப்படையில் பொது ஒப்பந்தத்தை புதுப்புக்கின்றனர்.

## 8.5. முக்கிய வார்த்தைகள்

உச்ச சலுகை நாட்டு விதி, UNCTAD, விதி விலக்குகள்

## 8.6.சுய மதிப்பீட்டு பயிற்சி வினாக்கள்

**குறுகிய வினாக்களுக்கு விடையளி.**

1. கட்டணம் மற்றும் வர்த்தகம் மீதான ஒப்பந்தம் என்றால் என்ன?
2. டோக்கியோ பிரகடனம் பற்றி கூறுக?

**நெடு வினாக்களுக்கு விடையளி.**

1. சர்வதேச நிறுவனங்களை வர்த்தகம் மற்றும் வளர்ச்சிக்கான ஐக்கிய நாடுகள் (UTCAD) பற்றி விவரி.
2. கட்டணம் மற்றும் வர்த்தகம் மீதான பொது ஒப்பந்தம்(GATT) மற்றும் டோக்கியோ வரையறை பற்றி விவரி

# அலகு – 9:சர்வதேச நிறுவனங்கள் - II

**9.1. சர்வதேச நிறுவனங்கள் - II : உலக வர்த்தக அமைப்பு (WTO) இறக்குமதி பதிலேடு மற்றும் ஏற்றுமதி ஊக்குவிப்பு**

**9.2. அதன் முக்கியத்துவம்**

**9.3. உங்கள் முன்னேற்றத்தை சரிபார்க்கும் வினாக்கள்**

**9.4. உங்கள் முன்னேற்றத்தை சரிபார்க்கும் பதில்கள்**

**9.5. சுருக்கம்**

**9.6. முக்கிய வார்த்தைகள்**

**9.7. சுய மதிப்பீட்டு பயிற்சி வினாக்கள்**

**9.8. பரிந்துரைக்கப்படும் நூல்கள்**

## 9.1. சர்வதேச நிறுவனங்கள் - II : உலக வர்த்தக அமைப்பு (WTO) இறக்குமதி பதிலேடு மற்றும் ஏற்றுமதி ஊக்குவிப்பு

### உலக வாணிப அமைப்பு (World Trade Organisation (WTO))

"காட்" ஆனது உலக வங்கி அல்லது பன்னாட்டுப் பணம்சார்ந்த நிதி போன்ற ஓர் சட்டமுறை சார்ந்த அமைப்புமுறை அல்ல. மேலும், மாறுகின்ற உலகப் பொருளாதாரத்திற்கு "காட்" உகந்த ஓர் அமைப்பாகுமா எனவும் பலர் கேள்வி எழுப்பினர். இதற்கிடையில், பல வளர்ச்சியுற்ற நாடுகளும் "காட்"–ற்கு வெளியே, சந்தைப் பகிர்ந்தளிப்பு உடன்படிக்கையையும் ஏற்படுத்திக் கொண்டன. ஆகவே, "காட்"-க்கு நிறுவன அமைப்பை அளிக்கும் நோக்கோடு "காட்"ற்கு பதில் அமைப்பாக, கலக வணிக அமைப்பு என்ற ஓர் அமைப்பு அமைக்கப்பட்டது. இது 01.01.95 அன்று "காட்"ன் அனைத்து உறுப்பினர் நாடுகளாலும் உலக வணிக அமைப்பு உடன்படிக்கையில் கையொப்பமிடப்பட்டு அமைக்கப்பட்டது. இதன் உறுப்பினர்களுள் இந்தியாவும் ஒன்று. இது வணிகக் கொள்கையின் தலைமை அமைப்பாக (Apex Trade Policy Body) செயல்படவுள்ளது. இது பன்னாட்டுப் பணம் சார்ந்த நிதி மற்றும் உலக வங்கிக்கு இணையான அந்தஸ்தை வகிக்கிறது. 01.01.95 அன்று இதில் 77 நாடுகளே உறுப்பினர்களாக இருந்தன. 2001ல் இதன் உறுப்பினர் எண்ணிக்கை 128 அக உயர்ந்துள்ளது இங்கே குறிப்பிடத்தக்கதாகும்.

குறிப்பு

**a).உலக வாணிப அமைப்பின் கட்டமைப்பு (Structure of WTO)**

அனைத்து உறுப்பினர் நாடுகிளன் பிரதிநிதிகளையும் கொண்டுள்ள அமைச்சர்கள் சார்ந்த மாநாடு இதன் கட்டமைப்பின் தலைசிறந்த ஒரு கட்டமாகக் கருதப்படுகிறது. இது குறைந்தபட்சம் இரண்டு ஆண்டிற்கு ஒரு முறை கூடி பேசுகிறது. இதுவே உரிய நடவடிக்கைகளை எடுப்பதன் மூலம் உலக வாணிப அமைப்பின் பணிகளை மேற்கொள்கிறது.

இதில் பொதுக் கவுன்சில் ஒன்று உள்ளது. அதில் அனைத்து உறுப்பினர்களின் பிரதிநிதிகளும் இருக்கின்றனர். இவர்கள் உலக வாணிப அமைப்பு உடன்படிக்கையின் இயக்கத்தையும் அமைச்சகத்தின் முடிவுகளையும் தொடர்ச்சியாக மேற்பார்வை இடுக்கின்றனர். இது முரண்பாடு தீர்வு அவை போலவும் வாணிபக் கொள்கை மறுசீராய்வு அவை போலவும் பணியாற்றுகிறது. இந்த அவைகள் ஒவ்வொன்றிற்கும் தனித்தனியே தலைவர்கள் உள்ளனர்.

பொதுக் கவுன்சிலா் கீழ், பொருட்களின் வாணிபத்திற்கான கவுன்சில், சேவைகளின் வாணிபத்திற்கான கவுன்சில், அறிவுசார் சொத்துரிமைகள் அம்சங்கள் வாணிபம் தொடர்பான கவுன்சில் ஆகிய பல கவுன்சில்கள் இயங்கிவருகின்றன. இவற்றிற்கு என துணைக் கவுன்சில்களும் உள்ளன. கவுன்சில்களும் தணை அமைப்புகளும் அவைகளின் பணிகளைச் செய்வதற்கென அவ்வப்பொழுது கூடுகின்றன.

இவை தவிர வாணிபம் மற்றும் மேம்பாடு மீதான குழு, செலுத்தல் நிலைத்தடைகள்ட மீதான குழு, மற்றும் திட்டப்பட்டியல் நிதி மற்றும் நிர்வாகம் மீதான குழு ஆகிய குழுக்கள் உலக வாணிப அமைப்பு உடன்பாடு, பன்னாட்டு வாணிப உடன்பாடிக்கைகள் மற்றும் பொதுக்கவுன்சில் ஆகியவற்றினால் அளிக்கப்பட்ட வேலைகளைச் செய்கின்றன.

உலக வாணிப அமைப்பின் தலைமைச் செயலகத்தின் தலைவராக பொது இயக்குநர் விளங்குகிறார். அமைச்சர்கள் மாநாடு பொது இயக்குநரை நியமிக்கிறது. இதுவே அவரது அதிகாரம், கடமைகள், மற்றும் அலுவலக நிபந்தனைகள், சேவைகள் போன்றவற்றையும் நிர்ணயிக்கிறது. இவர் நான்கு ஆண்டு காலத்தறிகு நியமிக்கப்படுகிறார். இவருக்கு உதவியாக பல்வேறு உறுப்பினர் மாநிலங்களிலிருந்து பணிமாற்றம் செய்யப்பெற்ற நான்கு நபர்கள் உள்ளனர்.

இவரே தலைமைச் செயலகத்தில் பணியாளர்களை நியமிக்கிறார். இவர்களின் கடமைகள் சேவை நிபந்தனைகள் போன்றவற்றையும் இவரே நிர்ணயிக்கிறார்.

பொது இயக்குநர், உலக வாணிப அமைப்பின் நிதிநிலை அறிக்கை, ஆண்டுத் திட்டப்படியல் மதிப்பீடுகள் போன்றவற்றையும், திட்டப்பட்டியல், நிதி மற்றும் நிர்வாகக் குழுவிடம் சமர்ப்பிக்கிறார். இம்மதிப்பீடுகளையம் நிதிநிலை அறிக்கைகளையும் பெற்றவுடன் அக்குழுவானது அவற்றைச் சீராய்வு செய்து பரிந்துரைகளையும் அளித்து, அவற்றின் இறுதி அங்கீகாரத்திற்கு என பொதுக்கவுன்சிலுக்கு அனுப்பும் பொதுக் கவுன்சிலானது ஆண்டுத்திட்டப் பட்டியல் மதிப்பீடுகளை 2/3 பெரும்பான்மையில் ஏற்கும்.

உலக வாணிப அமைப்பு அதன் முடிவுகளை ஒருமனதாகவே எடுக்கிறது. முடிவுகள் ஒருமனதாக எடுக்கப்பட இயலாத பட்சத்தில் 2/3 பெரும்பான்மை அடிப்படையில் "ஒரு நாடு ஒரு வாக்கு" என்ற விதத்தில் எடுக்கப்படுகின்றன. ஆயினும் பொதுத் தத்துவங்களின் மாற்றம் தொடர்பான முடிவுகள்அனைத்து உறுப்பினர்களும் ஏகமனதாக ஒப்புக்கொண்ட பிறகே எடுக்கப்பட முடியும்.

**b).உலக வாணிப அமைப்பின் நோக்கங்கள் (Objectives of WTO)**

உலக வாணிப அமைப்பின் முகப்புரை இதன் நோக்கங்களாகப் பின் வருவனவற்றைக் குறிப்பிடுகின்றது.

1. வாணிபம் மற்றும் பொருளாதாரத் துறைகளில் இதன் உறவுகளின் மூலம் வாழ்க்கைத் தரங்களை உயர்த்துதல்.
2. நீடித்த நிலைத்த மேம்பாட்டை அடையும் நோக்கில் உலக வள ஆதாரங்களின் சிறந்த பயன்பாட்டை அனுமதித்தல்.
3. வளர்ந்து வரும் நாடுகள் குறிப்பாக வளர்ச்சி குன்றிய நாடுகள் அவைகளின் பொருளாதார வளர்ச்சிக்குத் தேவையான அளவில் பன்னாட்டு வாணிபத்தின் வளர்ச்சியில் ஒரு பங்கைப் பெறுவதை உறுதி செய்வதற்கு என எடுக்க வேண்டிய சாதகமான முயற்சிகளை வடிவமைத்தல்.
4. பரஸ்பரம் நன்மையளிக்கக்கூடிய ஏற்பாடுகளில் நுழைவுதன் மூலம் இந்நோக்கங்களை அடைதல். இவ் ஏற்பாடுகளின்கீழ், சுங்கவரிகளும் மற்றவரிகளும் கனிசமான அளவில் குறைக்கப்படுதல், மற்றும் பன்னாட்டு வாணிப உறவுளில் பாகுபாட்டுடன் கூடிய கையாளுகையைத் தவிர்த்தல் போன்ற வழிவகைகள் பின்பற்றப்படுகின்றன.
5. "காட்" —ன் கடந்தகால தாராளமயமாக்கல் முயற்சிகளின் விளைவுகள் மற்றும் பலபக்கமான வாணிபப் பேச்சுவார்த்தைகளுக்கான உருகுவே சுற்றின் அனைத்து முடிவுகள் ஆகியவைகளை சார்ந்த விதத்திலான

குறிப்பு

ஒரங்கிணைப்பட்ட, மிகவும் நடைமுறைக்கு உகந்த நீண்ட நாள் செயல்படக்கூடிய வகையிலான பல பக்க வாணிப முறையை உருவாக்குதல்.

6. வாணிபக் கொள்கைகள், சுற்றுச்சூழல் கொள்கைகள்மற்றும் நீடித்த நிலைத்த மேம்பாடு ஆகியவைகளுக்கு இடையிலான தொடர்புகளை உறுதி செய்தல்.

**வரைபடம் 4.1 உலக வாணிப அமைப்பின் கட்டமைப்பை விவரிக்கிறது.**

**உலக வாணிப அமைப்பின் கட்டமைப்பு**




**வரைபடம் 4.1**

**வரைபடம் : உலக வாணிப அமைப்பின் கட்டமைப்பு(Structure of WTO)**

**c).உலக வாணிப அமைப்பின் பணிகள் (Functions of WTO)**

உலக வாணிப அமைப்பின் பணிகள் பின்வருமாறு

1. உடன்படிக்கை மற்றும் பலபக்க வாணிப உடன்படிக்கையின் நோக்கங்களின் இயக்கம், நிர்வாகம் மற்றும் நிறைவேற்றத்தை எளிதாக்குதல்.

2. பயண விமான வாணிபம், அரசுக் கொள்முதல், பால் பொருட்கள் மற்றும் எருது இறைச்சியின் வாணிபம் போன்றவற்றுடன் தொடர்புடைய பலபக்க

வாணிப உடன்படிக்கைகளின் இயக்கம், நிர்வாகம் மற்றும் நிறைவேற்றத்திற்கு என ஒரு அமைப்பை அளித்தல்.

3. அதன் உறுப்பினர்களுக்கு இடையில் அவைகளின் பலபக்க வாணிப உறவுடன் தொடர்புடைய பேச்சுவார்த்தைகளை மேற்கொள்வதற்குத் தேவையான ஒரு அமைப்பை அளித்தல்.
4. உடன்பாட்டிலுள்ள முரண்பாடுகளைத் தீர்க்கத் தேவையான விதிகள் மற்றும் நடைமுறைகள் மீதான ஆற்றலை நிர்வகித்தல்.
5. உலகளாவிய பொருளாதாரக் கொள்கையின் உருவாகத்தில் பேரளவு இசைவை அடைவதற்கு என பன்னாட்டுப் பணம்சார்ந்த நிதி (IMF) மற்றும் உலக வங்கி மற்றும் அதன் அங்கீகாரம் பெற்ற முகவாண்மைகளுடன் சேர்ந்து ஒத்துழைத்தல்.

**d).உலக வாணிப அமைப்பு உடன்படிக்கை (WTO Agreement)**

உலக வாணிப அமைப்பை உருவாக்கிய உடன்படிக்கையில் பின்வரும் நிபந்தனைகள் (Understandings) அடங்குகின்றன.

1.பொருட்களின் வாணிபம் மீதான பல பக்கமான உடன்படிக்கைகள் Multilateral Agreements on Trade in Goods

பொருட்களின் வாணிபம் மீதான பொதுவான உடன்படிக்கையின்படி, “காட்” 1994-ல் (உலக வாணிப அமைப்பு அமலுக்கு வந்த வரையிலும், அதாவது ஜனவரி 1, 1995 வரையிலும்) திருத்தப்பட்ட “காட்” 1994” க்கு முந்திய மரக்கேஷ் குறிப்பு (Protocol) மற்றும் பின்வரும் விதிகளும் அடங்குகின்றன.

1. “காட் 1994”-ன் விதி II (Article Ii of GATT 1994): சட்டம் சார்ந்த உரிமைகள் மற்றும் கடமைகளில் ஒளிவுமறைவற்ற தன்மையை உறுதி செய்யும் நோக்கில், சலுகைகளின் அட்வணையில் அடங்கியுள்ள சுங்கவரிக்குட்படும் இனங்கள் மீது விதிக்கப்படும் “ஏனைய வரிகள் மற்றும் கட்டணங்கள்” உடைய தன்மையும் நிலையம் ஏப்ரல் 15, 1995 முதல் தொடர்ந்து வெளிப்படையாகக் காண்பிக்கப்படுகின்றன.
2. “காட்” –ன் விதி XVII (XVII of GATT) மாநில வாணிப நிறுவனங்களின் செயல்களில் ஒளிவு மறைவின்மையை உறுதி செய்யும் நோக்கில், உறுப்பினர்கள் அவ்வித நிறுவனங்களின் பொருட்களின் வாணிபக் கவுன்சில்களிடம் குறிப்பிட்டுக்கூறி அவற்றை ஆளும் கட்சியை வைத்து

குறிப்பு

மறுசீராய்வு செய்து அதன் அறிக்கையை ஆண்டிற்கு ஒருமுறை கவுன்சிலிடம் சமர்ப்பிக்கு மாறு செய்தல் வேண்டும்.

3. "காட்" –ன் செலுத்தல் நிலை ஷரத்துக்கள் மீதான நிபந்தனை (Understanding on Balance of Payment Provisions of GATT): செலுத்தல் நிலை நோக்கங்களுக்கு என தடைகளை விதிக்கும் உறுப்பினர்கள் அவற்றை முடிந்த அளவைகளான இறக்குமதி மிகைக் கடட்ணங்கள், இறக்குமதி வைப்புகள் அல்லது அளவைகள் போன்ற இறக்குமதி செய்யப்படும் பொருட்களின் விலையை பாதிக்கக்கூடிய அளவைகளுக்கு முன்னுரிமை அளித்தல் வேண்டும். அவை புதிய அளவுசார்ந்த தடைகளை விதிப்பைத் தவிர்க்க வேண்டும். அவை செலுத்தல் நிலை நோக்கங்களுக்காக தடைசார்ந்த இறக்குமதி அளவைகளின் எவ்வளவு சீக்கரம் முடியுமோ அவ்வளவு சீக்கரம் பொது அறிவிப்பும் மூலம் அனைவருக்கும் அறிவித்து விடுதல் வேண்டும். செலுத்தல் நிலை நோக்கங்களுக்கு என எடுக்கப்படும் அனைத்து தடைசார்ந்த இறக்குமதி அளவைகளையும் மறுசீராய்வு செய்யும் நோக்கில் "செலுத்தல் நிலைத் தடைகள் குழு" கலந்தாய்வுகளை மேற்கொள்கிறது.

4. "காட் 1994"-ன் விதி XXIV (Article XXIV of GAT 1994): சுங்கக் கழகங்கள் மற்றும் தடையற்ற வாணிப் பகுதிகளின் உடன்படிக்கை ஆனது புதிய அல்லது அபிவிருத்தி செய்யப்பட்ட சுங்கக் கழகங்கள் அல்லது தடயற்ற வாணிபப் பகுதிகளின் மறுசீராய்வு மற்றும் மூன்றாம் நபர்கள் மீதான அவற்றின் பாதிப்புகளின் மதிப்பீட்டிற்கான அளவைகளையும் நடைமுறைகளையும் தெளிவாக்குகிறது மற்றும் வலியுறுத்தகிறது. நிர்ணயிக்கப்பட்ட நிலையான (Bound) சுங்க வரியை அதிகரிக்க விழையும் ஒரு சுங்கக் கழகத்தினை உருவாக்கும் சமயம் நஷ்ட ஈட்டு சரிக்கட்டல்கள் ஏதேனும் செய்யப்பட வேண்டியிருப்பின் அதற்கான நடைமுறையையும் தெளிவுபடுத்துகிறது.

5. விதி XXVIII –ன் பொருள் விளக்கம் மீதான நிபந்தனை (Under standing on the Interpretation of Article XXIII): விதி XXVIII –ல் காட்ட அட்டவணைகளின் மாற்றம் அடங்கியுள்ளது. இது சுங்கக் கட்டுப்பாடுகள் மாற்றப்படும் பொழுது அல்லது திரும்பப் பெறும் பொழுது நஷ்டஈடு தொடர்பான பேச்சுவார்த்தைகளை நடத்துவதற்கான புதிய நடைமுறைகளை வடிவமைத்துள்ளது.

**இறக்குமதி பதில் வைப்பு (Import Substitution)**

1.இறக்குமதி வரிகள் (Import Duties): இறக்குமதி வரிகள் என்பது இறக்குமதிகள் மீது விதிக்கப்படும் வரிகளாகும். இவை சுங்க வரிகள் எனவும் அழைக்கப்படுகின்றன. சுங்க வரிகள் நாட்டின் செலுத்தல் நிலைப் பற்றாக்குறையை கட்டுப்படுத்தும் நோக்கிலேயே விதிக்கப்படுகின்றன. இது ஏனெனில், இறக்குமதி வரிகளின் விதிப்பானது இறக்குமதி செய்யப்பட்ட பொருட்களின் விலைகளை அதிகரிக்கும். இதனால் இறக்குமதி செய்யப்பட்ட பொருட்களின் தேவை குறையும். இறக்குமதிக் குறைக்கப்பட்டால், நாட்டின் அந்நியச் செலாவணி நிலை மேம்படும். அதனால் செலுத்தல் நிலையின் பாதகமான நிலை சரி செய்யப்படும்.

ஆயினும், இறக்குமதி வரிகள் பல்வேறு குறைபாடுகளினால் அவதியுறுகின்றன. அவை பின்வருமாறு:

1. இது அயல்நாட்டு வாணிபத்தைக் குறைக்கிறது. குறிப்பாக இறக்குமதிகளைக் குறைக்கிறது.
2. இது சமனற்ற நிலையை சரிப்படுத்தும் ஒரு தற்காலிகமான முறையே ஆகும். ஏனெனில், சமனற்ற நிலையின் காரணங்கள் குறைக்கப்படுவது இல்லை.
3. இது அயல்நாட்டு வாணிபத்தில் நன்மைகளுக்கு முட்டுக்கட்டை போடுகிறது.
4. இறக்குமதி வரிகளுடைய விதிப்பின் விளைவு உறுதியானதாக இல்லை.

2.இறக்குமதிக் கோட்டாக்கள் (Import Quotas): இறக்குமதி கோட்டா என்பது இறக்குமதியாளர் ஒருவர் ஒரு குறிப்பிட்ட கால கட்டத்தில் இறக்குமதி செய்ய அனுமதிக்கப்படும். பொருள் ஒன்றின் அதிகபட்ச அளவு அல்லது மதிப்பாகும். இது அரசால் அவ்வப்பொழுது நிர்ணயிக்கப்படுகிறது. இது மாறுபட்ட பொருட்களின் இறக்குமதிக்கு மாறுபட்ட அளவில் நிர்ணயிக்கப்படுகிறது. அரசானது, கோட்டா முறையின் மூலம் இறக்குமதிகளைக் கட்டுப்படுத்துவதை நோக்கமாகக் கொண்டுள்ளது. அதன் விளைவு, செலுத்தல் நிலையிலுள்ள பற்றாக்குறை குறைக்கப்படுகிறது. இது இறுதியில், செலுத்தல் நிலையின் மேம்பாட்டிற்கு வழி வகுக்கிறது.

இறக்குமதிக் கோட்டாவானது இறக்குமதிகளை உடனடியாக கட்டுப்படுத்தும் திறனைக் கொண்டுள்ளது எனலாம். ஏனெனில், கோட்டா ஒரு முறை நிர்ணயிக்கப்பட்டு விட்டால், இறக்குமதியாளர்கள் அந்த எல்லையை மீற

குறிப்பு

முடியாது. ஆகவே, இறக்குமதிகளைக் கட்டுப்படுத்துதல் மீதான கோட்டாவின் திறன் உறுதியானதாக இருக்கிறது எனலாம்.

3.ஏற்றுமதிப் பெருக்கக் கொள்கைகளும் திட்டங்களும் (Export Promotion Policies and Programmes): ஏற்றுமதிப் பெருக்க நடவடிக்கைகளும் கூட செலுத்தல் நிலையின் பற்றாக்குறையை சரிசெய்யும் ஒரு கருவியாகப் பயன்படுத்தப்படலாம். ஏற்றுமதிப் பெருக்கம் சார்ந்த நடவடிக்கைகளில் ஏற்றுமதி நிதியுதவிகள், ஏற்றமதி சார்ந்த அலகுகளுக்கு ஊக்குவிப்பு, ஏற்றுமதி நடைமுறை மண்டலங்களின் உருவாக்கம், ஏற்றுமதி சார்ந்த நிறுவனங்களுக்கு தாரளமான கடன்கள் வழங்குதல், ஏற்றுமதியாளர்களுக்கு வரிச் சலுகைகள், சந்தையிடுகை வசதிகள், ஏற்றுமதியாளர்களுக்கு ஊக்குவிப்புகள் போன்றன அடங்குகின்றன.

ஏற்றுமதிகளின் அதிகரிப்பு நாட்டின் தேசிய வருமான அதிகரிப்பிற்கு வழிவகுக்கிறது. அதன் விளைவு, இறக்குமதிகளை விட வேகமாக ஏற்றுமதிகள் அதிகரிக்கும் பொழுது செலுத்தல் நிலையின் பற்றாக்குறை களையப்படுகிறது.

4.இறக்குமதி பதில் வைப்பு (Import Substituion): இறக்குமதி பதில் வைப்பு என்பதற்கு நாடு அது இறக்குமதி செய்யும் பொருட்களை உற்பத்தி செய்கிறது என்பது பொருள். இறக்குமதி பதில் வைப்பின் மூலம் ஏற்றுமதிகளும் அதிகரிக்கப்படலாம். தொடக்கத்தில் இறக்குமதிகள் குறைக்கப்படுகின்றன. பின்னர் அப்பொருட்களின் ஏற்றுமதிகள் தொடங்கும். நாளடைவில், ஏற்றுமதிகள் இறக்குமதிகளைவிட வேகமாக அதிகரிக்கும். அதன் விளைவு செலுத்தல் நிலையின் பற்றாக்குறை களையப்படும்.

## 9.2. அதன் முக்கியத்துவம்

**e).பன்னாட்டு வாணிப அமைப்பின் இயக்கம் (Working of WTO)**

இதன் இயக்கத்தை நாம் கீழ்க்கண்டவாறு இரு தலைப்புகளின் கீழ் காணலாம்.

**1.கூட்டங்களின் மூலம் இயக்கம் (Working through Meetings)**

இது வரை இரண்டு அமைச்சர்கள் சார்ந்த கூட்டம் நடத்தப்பட்டுள்ளன. இதன் முதல் இரண்டாண்டுக்கு ஒரு முறை நடத்தப்படும் அமைச்சர்கள் சார்ந்த கூட்டம் சிங்கப்பூரில் உள்ள சன்டெக்சிட்டியில் 1996 ஆம் ஆண்டு டிசம்பர் மாதம் 9 ஆம் தேதி முதல் 13 ஆம் தேதி வரையிலான காலகட்டத்தில் நடத்தப்பட்டது. இக்கூட்டத்தில் கலந்து கொண்ட உறுப்பினர் நாடுகளின் அமைச்சர்கள், உலகம்

முழுவதும் தடையற்ற வாணிபத்தை மேம்படுத்தும் ஒரு வழிவகையாக பன்பமடங்கு வாணிப முறையில் தமக்குள்ள நம்பிக்கையை மறுபடியும் உறுதிசெய்யும் ஒரு உறுதிமொழியை எடுத்தனர். அந்த உறுதிமொழியில், அவர்கள் பின்வருவன தொடர்பான தங்களின் பொறுப்பைப் புதுப்பித்தனர்.

குறிப்பு

1. நியாயமான, சரிசமமான மற்றும் மிகவும் திறந்த விதி சார்ந்த ஒரு முறை
2. சீராக வளர்கின்ற தாராளமயமாக்கல் மற்றும் பொருட்களின் வாணிபத்திற்குரிய வரிசார்ந்த மற்றும் வரி சாராத தடைகளை நீக்குதல்.
3. சேவைகளின் வாணிபத்தின் தாரளமயமாக்கல். இது வாணிபம்சீராக வரும் வண்ணம் அமைத்தல் வேண்டும்.
4. அனைத்து வகையான பாதுகாப்புகளையும் மறுத்தொழித்தல்.
5. பன்னாட்டு வாணிப உறவுகளில் பாகுபடுத்தும் நடைமுறையைத் தவிர்த்தல்.
6. வளர்ந்து வரும் மற்றும் வளர்ச்சி குன்றிய நாடுகள் மற்றும் மாற்றத்தில் உள்ளபொருளாதாரங்களை பன்முகமுறைக்குள் ஒருங்கிணைத்தல்.
7. அதிகபட்ச நிலையிலான ஒரழிவு மறைவின்மை.

அமைச்சர்கள், போட்டிக் கொள்கை, உழைப்புத்தர அளவுகள், பன்மடங்கு முதலீட்டு உடன்பாடு மற்றும் அரசுக் கொள்முதல் போன்ற பல புதிய விஷயங்கள் பற்றி விவாதித்தார். பாதுகாப்பு நோக்கத்திற்கு என உழைப்புத்தர அளவுகளை பயன்படுத்துவதை மறுத்தனர். அவர்கள், வாணிபம் மற்றும் முதலீட்டுக்கு இடையிலான உறவுமுறையை ஆய்வு செய்ய, வாணிபம் மற்றும் போட்டிக்கு இடையிலான தொடர்புடன் தொடர்புடைய பிரச்சனைகளை ஆய்வு செய்ய மற்றும் அரசுக் கொள்முதல் நடைமுறைகளில் உள்ள ஒளிவு மறைவின்மை மீது ஒரு ஆய்வை நடத்த தனிப்பட்ட இயக்கக் குழுக்களை அமைக்க உடன்பட்டனர். நிதிச்சேவைகளின் உலகச் சந்தைகளை தாராளமயமாக்கல், கடல் வாணிபம் சார்ந்த சேவைகள் மற்றும் தொலைத் தொடர்புகள் மீதான பேச்சு வார்த்தைகளின் அபிவிருத்தி திருப்திகரமாக இல்லை என்பதை அவர்களே ஏற்றனர். அவை 1997 ஆம் ஆண்டு இறுதிக்குள் முடிவுக்கு வந்து விடும் எனவும் கருதினார்.

இக்கூட்டம் 28 நாடுகள் கையெழுத்திட்ட தகவல் தொழில்நுட்ப உடன்பாட்டை ஏற்படுத்தியது. இது 2000 ஆம் ஆண்டுக்குள் தகவல் தொழில்நுட்ப இனங்கள் மீதான வரிகளை பூஜ்யமாகக் குறைப்பதை நோக்கமாகக் கொண்டு உள்ளது. இந்த உடன்பாடு, கணிப்பொறி மற்றும்

குறிப்பு

மென்பொருள்கள், இழை ஒளியியல் சார்ந்த மின்கம்பி, நிழற்பட நகலகம் உள்ளிட்ட முடிவுக்கு இனங்களையும் தன்னுள் கொண்டுள்ளது.

இந்த முதல் அமைச்சர்கள் சார்ந்த கூட்டம் மிகக் கடுமையாகக் குறை கூறப்படுகிறது. ஏனெனில் தீர்மானம் எடுத்தல் நடைமுறையில் பெரும்பாலான வளர்ந்து வரும் நாடுகள் ஓரங்கட்டப்பட்டன. பல நாடுகளுக்கு அலுவல்சாரா கலந்தாய்வுகளுக்கு அழைப்பு விடுக்கப்படவே இல்லை. இந்த உடன்பாடு வளர்ச்சியுற்ற நாடுகளுக்கே மிகவும் பயனுள்ளதாக உள்ளது. வளர்ந்து வரும் நாடுகளுக்கு பயன்களை அளிக்க வல்ல உருகுவே சுற்றின் பல விஷயங்கள் இங்கு விவாதிக்கப்படவே இல்லை. உதாரணமாக, துணித் தொழில், விவசாயம் போன்ற அம்சங்கள் இங்கு விவாதிக்கப்படவே இல்லை.

இரண்டாவது அமைச்சர்கள் சார்ந்த மாநாடு அமெரிக்கக் ஐக்கிய நாடுகளில் சியாட்டிலில் 1999 ஆம் ஆண்டு நவம்பர் மாதம் 30 ஆம் தேதி முதல் டிசம்பர் மாதம் 3ஆம் தேதி வரை நடந்தது. இம்மாநாடு, வளர்ந்து வரும் மற்றும் வளர்ச்சியுற்ற நாடுகளுக்கு இடையிலான பல கருத்து வேற்றுமைகளால் சேதமடைந்தது. பெரும்பாலான உறுப்பின நாடுகள், முதலீட்டுப் பிரச்சனைகள், போட்டிக்கொள்கை, அரசுக் கொள்முதலில் ஒளிவு மறைவின்மை, வாணிபம் எளிதாக்கல், வாணிபம் மற்றும் உழைப்புத்தர அளவுகள், வாணிபம் மற்றும் சுற்றுசூழல், தொழில் வரிக்குறைப்பு போன்ற விஷயங்கள் தொடர்பான விரிவான சுற்றுப் பேச்சுக்களை மேற்கொள்ள வலியுறுத்தின. வளர்ந்து வரும் நாடுகள் உழைப்புத் தர அளவுகள் போன்ற வாணிபமற்ற விஷயங்களை உலக வாணிப அமைப்பு நிகழ்ச்சிநிரலில் சேர்ப்பதை கடுமையாக எதிர்த்தன. சுற்றுச்சூழல், வாணிபம் மற்றும் உழைப்பு, குவித்தலுக்கு எதிர்ப்பு போன்ற பல விஷயங்களில் அமெரிக்க ஐக்கிய நாடுகளும் கிழக்கத்திய ஐரோப்பிய நாடுகளும் மாறுபட்டிருப்பதை மாநாடு கோடிட்டுக் காட்டியது. ஆனால் பெரும்பாலான பிரச்சனைகளுக்கு தீர்வு எதுவும் இதில் எடுக்கப்படவில்லை. துணித்தொழில், விவசாயம் போன்ற குறிப்பிட்ட பிரச்சனைகள் மீது வளர்ந்துவரும் மற்றும் வளர்ச்சியுற்ற நாடுகளின்ட குழுக்களுக்கு இடையில் பேரளவில் முரண்பாடு இருந்ததால் மாநாடு தோல்வியைத் தழுவியது.

### 2.முரண்பாட்டுத் தீர்வு அவை மூலம் இயக்கம் (Working Through Dispute Settlement Board)

உலக வாணிப அமைப்பின் முரண்பாட்டுத் தீர்வு அவை சுறுசுறுப்பாக இயங்கி வருகிறது. இது 100 முரண்பாடுகளுக்கும் மேலாக இந்த அவையின் முன்கொண்டு வரப்பட்டுள்ளன. அவற்றுள், பல தீர்த்து வைக்கப்பட்டுள்ளன.

அனைத்து உறுப்பினர் நாடுகளும் இதன் ஒளிவுமறைவற்ற முரண்பாட்டுத்தீர்வு நடவடிக்கைகளையும் நடைமுறையையும் பாராட்டியுள்ளன.



## 9.3. உங்கள் முன்னேற்றத்தை சரிபார்க்கும் வினாக்கள்

குறிப்பு

1. . உலக வாணிப அமைப்பின் நோக்கங்கள் யாவை?
2. உலக வாணிப அமைப்பின் பணிகள் யாவை?

## 9.4. உங்கள் முன்னேற்றத்தை சரிபார்க்கும் பதில்கள்

**1.** உலக வாணிப அமைப்பின் முகப்புரை இதன் நோக்கங்களாகப் பின் வருவனவற்றைக் குறிப்பிடுகின்றது.

- வாணிபம் மற்றும் பொருளாதாரத் துறைகளில் இதன் உறவுகளின் மூலம் வாழ்க்கைத் தரங்களை உயர்த்துதல்.
- நீடித்த நிலைத்த மேம்பாட்டை அடையும் நோக்கில் உலக வள ஆதாரங்களின் சிறந்த பயன்பாட்டை அனுமதித்தல்.

**2.** உலக வாணிப அமைப்பின் பணிகள் பின்வருமாறு

6. உடன்படிக்கை மற்றும் பலபக்க வாணிப உடன்படிக்கையின் நோக்கங்களின் இயக்கம், நிர்வாகம் மற்றும் நிறைவேற்றத்தை எளிதாக்குதல்.
7. பயண விமான வாணிபம், அரசுக் கொள்முதல், பால் பொருட்கள் மற்றும் எருது இறைச்சியின் வாணிபம் போன்றவற்றுடன் தொடர்புடைய பலபக்க வாணிப உடன்படிக்கைகளின் இயக்கம், நிர்வாகம் மற்றும் நிறைவேற்றத்திற்கு என ஒரு அமைப்பை அளித்தல்.

## 9.5. சுருக்கம்

நமது ஏற்றுமதி பெருக்கத்தின் அவசியத்தை கோடு காட்டிய போதிலும் நமமது நாட்டில் நிலவிய சூழ்நிலை ஏற்றுமதிக்கு சாதகமாக இல்லை என்றே கூறலாம். பல தடைகள் ஏற்றுமதிக்கு குறுக்காக நின்றன இதன் விளைவு ஏற்றுமதி துறையில் நமது செயல்பாடு வளமின்றியே காணப்பட்டது.

## 9.6.முக்கிய வார்த்தைகள்

இறக்குமதி பதில் வைப்புஇ .இறக்குமதி பதில் வைப்பு

## 9.7.சுய மதிப்பீட்டு பயிற்சி வினாக்கள்

**குறுகிய வினாக்களுக்கு விடையளி.**

1. . உலக வாணிப அமைப்பின் நோக்கங்கள் யாவை?

குறிப்பு

2. உலக வாணிப அமைப்பின் பணிகள் யாவை?

**நெடு வினாக்களுக்கு விடையளி.**

1.உலக வர்த்தக அமைப்பு (WTO) இறக்குமதி பதிலேடு மற்றும் ஏற்றுமதி ஊக்குவிப்பு பற்றி விவரி

2.உலக வர்த்தக அமைப்பின் முக்கியத்துவம் பற்றி விவரி.

## 9.8.பரிந்துரைக்கப்படும் நூல்கள்

கார்பக் R.J.(2008), "பேரியல் பொருளாதாரம்". தாம்சன் South Western புது டெல்லி

# அலகு – 10 பொருளாதார உத்தரவுகள்



குறிப்பு

## 10.1. பொருளாதார உத்தரவுகள்: வடக்கு தெற்கு உரையாடலும் மற்றும் புதிய சர்வதேச பொருளாதார ஒழுங்கு

**வட தென் உரையாடல்: (North-South Dialogue)**

ஆசிய, ஆப்பிரிக்கா மற்றும் லத்தீன் அமெரிக்கா ஆகியவற்றில் : "மூன்றாம் உலகின்" மற்றும் புதிதாக சுதந்திரமான நாடுகள் வளரும் மற்றும் புதிதாக உருவாக்கப்படும் நாடுகளுக்கு வட அமெரிக்கா மற்றும் மேற்கு ஐரோப்பாவின் தொழில் மயமான நாடுகளில் ஈடுபட்டுள்ளன. 1970களில் சர்வதேச பொருளாதார அமைப்பு.

இரண்டாம் உலகப் போருக்குப் பிறகு லத்தீன் அமேரிக்காவின் பல நாடுகள் அமெரிக்க வர்த்தக மற்றும் கட்டணக் கொள்கைகளுடன் பெருகிய முறையில் விரக்தி அடைந்தன.அதே சமயத்தில் ஆசியா மற்றும் ஆப்பிரிக்காவில் தேசியவாத இயக்கங்கள் பரவலான காலநிலை மாற்றத்திற்கு வழிவகுத்தன. ஐக்கிய நாடுகள் சபையின் உறுப்புரிமை 1945 இல் 51 நாடுகளில் இருந்து 1960ல் 100 ஆகவும், 1979 ல் 150 ஆகவும் உயர்ந்துள்ளது. புதிய நாடுகளின் திடீர் வருகை பொதுச் சபைக்கான அதிகாரத்தை சமநிலைப்படுத்தி வர்த்தக மற்றும் அபிவிருத்தி பற்றிய ஐக்கிய நாடுகள் மாநாடு 1964 ஆம் ஆண்டில் UNCTAD அல்லது UNCTAD அமைக்கப்பட்டது. இதன் மூலம் "தெற்கு" அல்லது "மூன்றாம் உலக நாடுகள்" பொருளாதார கொள்கைகளை முன்மொழியலாம், இதன் மூலம் "வடக்கில் "தொழில்துறை ஜனநாயகங்கள்

குறிப்பு

ஈடுபட முடியும்." வட-தென் உரையாடல்" குளிர் யுத்தத்தின் கிழக்கு – மேற்கு முரண்பாட்டிலிருந்து மாறும், மறுபுறம் கம்யூனிஸ்டுகளுக்கும் முதலாளித்துவர்களுக்கும் இடையேயான சித்தார்ந்த மோதலாக அபிவிருத்தி பிரச்சனைகள் அழுத்தம் கொடுப்பதாக வலியுறுத்தியது.

தொழில்மயமான நாடுகளின் பேச்சுவார்த்தைக்கு பல காரணிகள் அதிகரித்தன. அரபு உலகில் எண்ணெய் உற்பத்தி செய்யும் நாடுகளின் உயரும் ஆற்றல் ஒன்று மற்றொரு வியட்னாமில் போரில் யு.எஸ்.யுரேனிய இழப்பு, இது உலகம் மற்றும் மற்றும் தொழில்துறை வடக்கில் நிரூபிக்கப்பட்டது. அது செல்வமும் சக்தியும் கூட தரவில்லை. இந்த இரண்டு சிக்கல்களும் பொருளாதார ஆற்றலுக்கான உலகளாவிய சமநிலையை நோக்கி மேற்கத்திய கவனத்தை ஈர்த்தது. கூடுதலாக பேச்சுவார்த்தைகள் தொடர்ந்த கிழக்கு, மேற்கு நாடுகளின் பதட்டங்கள் ஒரு காலகட்டத்தில் தொடங்கியது, இதன் விளைவாக தொழில்மயமான உலகம் அபிவிருத்தி போன்ற சிக்கல்களுக்கு அதிக கவனம் செலுத்த முடியும். புதிதாக தொழில்மயமாக்கல் பொருளாதார அமைப்புமுறைக்கு நன்மையளித்ததாக நம்பப்படுகிறது. இந்த சமநிலையை சரிசெய்ய சா்வதேச பொருளாதார அமைப்பு முறையை மறுசீரமைப்பதை அவர்கள் நம்பினர்.

வட-தென் உரையாடல் வணிகம் மற்றும் சுங்கவரி, சா்வதேச நிதி, வெளிநாட்டு உதவி மற்றும் பன்னாட்டு நிறுவனங்கள் மற்றும் நிறுவனங்களின் ஆளுமை ஆகியவற்றைப் பற்றிய பிரச்சனைகள் குறித்து விவாதித்தது. 1970 களில், கிழக்கு-மேற்கு பதட்டங்கள் மிகவும் தளர்வான நிலையில் இருந்தபோது, தொழில்மயமான நாடுகளில் ஒத்துழைக்க ஒத்துழைப்பு இருந்தது. 1970 களில், நடுபகுதியில் டெட்டென்ட் பிளவுபடுத்தபட்டபோதும், வட-தெற்கில் பேச்சுவார்த்தைகள் தொடா்ந்தன. மற்ற வடக்கு சக்திகளுடன் அமெரிக்க கொள்கைகள் மற்றும் உறவுகள் தவிர்க்க முடியாமல் உரையாடலில் முன்னேற்றத்திற்கு உதவுகின்றன அல்லது பாதிக்கின்றன. உதாரணமாக, அமெரிக்காவிற்கும் மேற்கு ஐரோப்பாவிற்கும் இடையேயான வா்த்தக கொள்கைகளில் ஏற்படும் மாற்றங்கள், இந்த நாடுகளை தொழில்மயமாக்கும் நாடுகளுடன் தங்கள் பேச்சுவார்த்தைகளில் இருந்து திசை திருப்ப சேவை செய்யலாம் அல்லது வளரும் உலகில் செல்வாக்கு மண்டலங்களில் உய்ய தங்களது இடைச்செருகல்களின் மீது புதிய கட்டுபாட்டை கட்டுபடுத்தலாம். 1970களின் பிற்பகுதியில், அமெரிக்காவிற்கும் சோவியத் ஒன்றியத்திற்கும் இடையிலான அதிகரித்துவரும் மோதல்கள் இறுதியாக வடக்கு-தெற்கு விவாதங்களை தொடரும் வாய்ப்பை புத்துயிர் பெறச் செய்தன.

தொழில்மயமான நாடுகள் சபையின் விவாதங்களைத் தொடரும் வாய்ப்பை புதுப்பித்து, பணிப்போருக்கு தங்கள் வளங்களை திருப்பி வளர்ச்சிக்கு குறைந்த கவனம் செலுத்தின. பிரச்சனைகள். 1980 செப்டம்பரில், இந்த உரையாடலின் தன்மையைக் கொண்டிருந்த ஐக்கிய நாடுகள் சபையின் விவாதங்கள் அவற்றின் வேகத்தை இழந்தன. இந்த விவகாரங்களில் சில உரையாடல்கள் தொடர்ந்த போதிலும் அது பொருளாதார பிரச்சினைகளுக்கு தொடர்ச்சியாக விவாதங்களைத் தொடர்ந்ததோடு அதன் ஆதரவாளர்கள் அதை நம்புவதற்கான சாத்தியமான தீர்வை ஒருபோதும் வழங்கவில்லை.

**வட –தென் உரையாடலின் வழிகள்:**

1970 களில் வட-தென் உரையாடலில் உச்ச கட்டத்தை விளக்குவதற்கு பல வழிகள் உள்ளன. உலகப் பொருளாதாரக் கொள்கையில் பரந்த மாற்றங்களுக்கான தெற்கு திட்டங்களை சில பொருளாதார கொள்கையில் பரந்த மாற்றங்களுக்கான தெற்கு திட்டங்களை சில பொருளாதார நிபுணர்கள் மதிப்பாய்வு செய்தனர். அவர்கள் மூன்றாம் உலகின் சில பகுதிகளுக்கு மட்டுமே பயனளிக்கும் அல்லது வடிவமைக்கப்படவில்லை என்பதை முடிவு செய்தனர். தொழில்மயமாக்கப்பட்ட பேச்சுவார்த்தைகளைத் தொடங்குவதற்கான ஒரு நிலைபாட்டை நிலைநாட்டுவதற்கான முன்மொழிவுகள் அவசியமானதாக இருந்தன. எந்த வழியில் ஐ.சி.சி.டி.டி.ஏ.டி. மூலம் வழங்கப்பட்ட திட்டங்களின் சரியான செயல்படுத்த எப்போதும் சாத்தியமற்றதாக இருந்தது. ஏனென்றால் அவர்கள் தெற்கு வடக்கே ஒவ்வொரு புள்ளியையும் ஒப்புக் கொள்ளவேண்டும். வடக்குத்தென் உரையாடல் என்பது உலகின் "ஹவ்ஸ்" மற்றும் "இல்லை" ஆகியவற்றிற்கும் இடையேயான ஒரு அரசியல் போராட்டமாகவும் கருதப்படலாம். இந்த நோக்கில் விவாதாங்கள் ஒரு வாகனமாக மாறியது. இதன் மூலம் தெற்கில் ஒன்றிணைந்து ஐ.நா. உலக விவகாரங்களுக்கான பாதையை நிர்ணயிக்க வட நாட்டின் திறனை எதிர்ப்பதற்காக சர்வதேச அமைப்புகள் உள்ளன.

## புதிய சர்வதேச பொருளாதார ஆணைகள்: New International Economic Order-NIEO

**விளக்கம்:**

புதிய சர்வதேச பொருளாதார ஆணை (NIEO) என்பது 1970களின் போது வளரும் நாடுகளில் வர்த்தக மற்றும் மேம்பாட்டிற்கான ஐக்கிய நாடுகளின் மூலம் தங்கள் நலன்களை முன்னேற்றுவதன் மூலம் வளர்ந்து வரும் அபிவருத்தி உதவி

வளர்ந்த நாட்டிற்கு குறைப்புகள் மற்றும் பிற வழிமுறைகளை பின்பற்றுகின்றன. இது மூன்றாம் உலக நாடுகளுக்கு ஆதரவு தரும் சர்வதேச பொருளாதார அமைப்பின் மறுபரீசீலனை எனக் கருதப்பட்டது, இது பிரெட்டன் வூட்ஸ் அமைப்பை மாற்றியது, அது உருவாக்கிய முன்னனி மாநிலங்களுக்கு பயனளித்தது குறிப்பாக அமேரிக்கா இச்த ஒழுற்கை மாற்றாத இயக்கம் கோரியது.

சர்வதேச வர்த்தக மற்றும் பொருளாதார அபிவிருத்திக்கான அடிப்படை வளர்ச்சிக்கான தேவைகளை வற்புறுத்தும் ஒரு பொருளாதார மற்றும் அரசியல் கருத்தாக இருக்கும். புதிய சர்வதேச பொருளாதார ஒழுங்கை (NIEO) எல்.டி.சி.கள் அழைப்பு விடுத்துள்ளது. 1974ல் NIEO ஸ்தாபிக்கப்பட்டதன் மீதான பிரகடனம் மற்றும் செயற்திட்ட நிகழ்ச்சித்திட்டத்தை வெளியிடுவதன் மூலம் எல்.டி.சி.க்களின் அழைப்பிற்கு ஐ.நா.பதிலளித்தது. எல்.டி.சி.க்களின் உறவினர் சிலைகளை மேம்படுத்துவற்காக வடிவமைக்கா்ட்ட கோட்பாடுகள் மற்றும் நடவடிக்கைகளை இது அமைத்தது.

**திட்டங்கள்:**

(அ) வளர்ந்த நாடுகளின் முதன்மை தயாரிப்புகளின் ஏற்றுமதிக்கு சர்வதேச சரக்கு ஒப்பந்தங்கள்:

(ஆ) வளர்ந்த நாடுகளின் சந்தைகளுக்கு அதிக வாய்ப்புகளைப் பெற எல்.டி.சி.யின் உற்பத்தி பொருட்களின் ஏற்றுமதியை செயல்படுத்த சிறப்பு வர்த்தக சலுகைகள் பற்றிய பேச்சுவார்த்தைகள்:

(இ) எல்.டி.சி.யின் வர்த்தக மேம்பாடு விதிமுறைகள்:

(ஈ) LDC களுக்கு அதிக நிதி மற்றும் உண்மையான ஆதார மாற்றங்கள் மற்றும் அவர்களின் கடந்த கடன்களை ஒழித்தல்:

(ஊ) சர்வதேச நாணயநிதியத்தின் சீர்திமுத்தம் மற்றும் வர்த்தகம் மற்றும் அபிவிருத்தி சம்பந்தபட்ட சர்வதேச நிறுவனங்களின் முடிவெடுக்கும் அதிகமான கருத்துக்கள் - சிக்கல்கள்

(எ)ஒரு சர்வதேச உணவு திட்டம் : மற்றும்

(ஏ)நாடுகளில் பெரும் தொழில்நுட்ப ஒத்துழைப்பு.

## 10.2. பயன்கள்

1.நிர்வாகம் மற்றும் பொதுப் பிரிவு (Administraitve and General Division) இப்பிரிவு, பணியாளர் மற்றும் உருவாக்கப் பணிகள், மற்றும் பிற தொடர்புடைய விஷயங்களான மேற்பார்வை, பாதுகாப்பு, நலம் மற்றும் நிர்வாகம் போன்றவற்றைக் கையாளுகின்றது.

2.நிதிப்பிரிவு (Financial Divison): அரசின் இணைச் செயலாளர் நிலையிலுள்ள நிதி ஆலோசகரின் தலைமையில் இப்பிரிவு இயங்கி வருகிறது. இவர் திட்டப்பட்டியல் மற்றும் முறைகள், பணி ஆய்வு போன்றவற்றோடு தொடர்புடைய பணியைக் கையாளுகிறார். மேலாண்மையின் ஒரு பகுதியாக, இப்பிரிவு, அகத் தணிக்கையை, கணக்குகளில் துல்லியத்தையும் இயக்கங்களில் ஆற்றலையும் உறுதிசெய்யும் பொருட்டு மேற்கொள்கின்றது. எனவே, நிதிப் பிரிவு ஏற்றுமதிப் பெருக்கத்தோடு நெருங்கிய தொடர்புடையதாக இல்லை.

3.பொருளாதாரப் பிரிவு (Economic Division): இப்பிரிவு பொருளாதார ஆலோசகரின் தலைமையில் இயங்குகின்றது. ஏற்றுமதி நுட்பங்களின் உருவாக்கம். ஏற்றுமதித் திட்டமிடுதல், குறிப்பிட்ட கால இடைவெளிகளில் கொள்கைகளின் சீராய்வு, பிற பிரிவுகளுடன் ஒற்றுமையை நிர்வகித்தல் ஆகியவற்றிற்கும் இவரே பொறுப்பாளர். ஏற்றுமதியாளர்களுக்கு உதவுவதற்கு என அமைச்சகத்தால் அமைக்கப்பட்ட பிற பிரிவுகளுடனும், அமைப்புகளுடனும் இவர் தொடர்ச்சியான தொடர்புகளை கொண்டிருத்தல் வேண்டும். இப்பிரிவு, தொழில்நுட்ப உதவி, இந்தியத் தொழில் முனைவோர்ளால் செய்யப்படும் அந்நிய முதலீடு மற்றும் ஏற்றுமதிகளுக்குத் தேவையான மேலாண்மைச் சேவைகள் ஆகியவை தொடர்பான பணிகளை ஆய்வு செய்கிறது.

## 10.3. உங்கள் முன்னேற்றத்தை சரிபார்க்கும் வினாக்கள்

1. வடக்கு தெற்கு உரையாடல்களைப் பற்றி எழுதுக?
2. புதிய சர்வதேச பொருளாதார ஒழுங்கின் பயன்கள் யாவை?

## 10.4. உங்கள் முன்னேற்றத்தை சரிபார்க்கும் பதில்கள்

**1.** வட-தென் உரையாடல் வணிகம் மற்றும் சுங்கவரி, சர்வதேச நிதி, வெளிநாட்டு உதவி மற்றும் பன்னாட்டு நிறுவனங்கள் மற்றும் நிறுவனங்களின் ஆளுமை ஆகியவற்றைப் பற்றிய பிரச்சனைகள் குறித்து விவாதித்தது.

**2.**நிர்வாகம் மற்றும் பொதுப் பிரிவு (Administraitve and General Division) இப்பிரிவு, பணியாளர் மற்றும் உருவாக்கப் பணிகள், மற்றும் பிற தொடர்புடைய

விஷயங்களான மேற்பார்வை, பாதுகாப்பு, நலம் மற்றும் நிர்வாகம் போன்றவற்றைக் கையாளுகின்றது.

## 10.5. சுருக்கம்

ஆசிய ஆப்பிரிக்கா மற்றும் லத்தீன் அமெரிக்கா ஆகியவற்றில் மூன்நாம் உலகின் மற்றும் புதிதாக சுதந்திரமான நாடுகள் வளரும் மற்றும் புதிதாக உருவாக்கப்கடும் நாடுகளுக்கு வடஅமெரிக்கா மற்றும் மேற்கு ஐரோப்பியாவில் தொழில் மயமான நாடுகள் ஈடுபட்டுள்ளன.

## 10.6. முக்கிய வார்த்தைகள்

புதிய சர்வதேச பொருளாதார ஆணை

## 10.7. சுய மதிப்பீட்டு பயிற்சி வினாக்கள்

**குறுகிய வினாக்களுக்கு விடையளி.**

1. வடக்கு தெற்கு உரையாடல்களைப் பற்றி எழுதுக?
2. புதிய சர்வதேச பொருளாதார ஒழுங்கின் பயன்கள் யாவை?

**நெடுவினாக்களுக்கு விடையளி.**

1. வட தென் உரையாடல் பற்றி விவரி.
2. புதிய சர்வதேச பொருளாதார ஆணைகள் மற்றும் அதன் பயன்களைக் கூறுக.

## 10.8. பரிந்துரைக்கப்படும் நூல்கள்

1. Krugman P. R. and M. Obsfeild (2006), **“International Economics: Theory and Policy”,** Addison Wesley, New Delhi

# அலகு – 11: பணம் சமநிலை:



குறிப்பு

## 11.1. பொருள்

### திட்டமிடப்பட்ட நடவடிக்கைகள் (Planned Measures)

செலுத்தல் நிலையின் பற்றாக்குறையை கட்டுப்படுத்தும் நோக்கில் அரசால் முன்னெச்சரிக்கையுடன் எடுக்கப்படும் நடவடிக்கைகள் திட்டமிடப்பட்ட நடவடிக்கைகள் ஆகும். அவ்வித நடவடிக்கைகள் முன்னெச்சரிக்கை நடவடிக்கைகள் எனவும் அழைக்கப்படுகின்றன. முன்னெச்சரிக்கை நடவடிக்கைகள் மீண்டும் இரு பிரிவுகளாகப் பகுக்கப்படலாம். அவை பின்வருமாறு:

1. பணம் சார்ந்த நடவடிக்கைகள் (Monetary Measures), மற்றும்
2. பணம் சாராத நடவடிக்கைகள் (Non-mnetary Measures)

குறிப்பு




**வரைபடம் 7.2 - செலுத்தல் நிலையில் சமனற்ற நிலையை சரிப்படுத்தும் நடவடிக்கைகள்**
**(Measures to Correct Disequilibrium in Balance of Payments)**

**படம் 5.2**

## 11.2. கூட்டமைப்பு

### 1. பணம் சார்ந்த நடவடிக்கைகள் (Monetary Measures)

பொதுவாக, செலுத்தல் சமநிலையின் பாதகமான நிலையை சரிப்படுத்த பின்வரும் பணம் சார்ந்த நடவடிக்கைகள் எடுக்கப்படுகின்றன:

1. பணவாட்டம் (Deflation)
2. மதிப்புக்குறைப்பு (Devaluation)
3. செலாவணிக் கட்டுப்பாடு (Exchange Control)
4. செலவாணித் தேய்மானம் (Exchange Depreciation)

**1.பணவாட்டம் (Deflation) :** உள்நாட்டு நாணயப் புழக்கத்தை விலை உயர்ந்த பணம் மற்றும் கடன் கொள்கையின் மூலம் குறைத்தல் மற்றும் உள்நாட்டில் பொருட்களின் விலைகள் மற்றும் செலவுகளைக் குறைத்தலை பணவாட்டம் குறிக்கிறது. அதன் விளைவு, உலகளாவிய சந்தையில் நாட்டின் ஏற்றுமதி செய்யப்படும் இனங்கள் மிகவும் மலிவாகின்றன. அவற்றின் தேவை அதிகரிக்கிறது. இறுதியில் ஏற்றுமதிகள் அதிகரிக்கின்றன. மேலும், பணவாட்டம் வருமானத்தைக் குறைப்பதன் மூலம் உள்நாட்டில் நுகர்வு வீதத்தைக் குறைக்கிறது. அதன் விளைவு தேவை குறைகிறது. அதனால் ஏற்றுமதிக்கு என பொருள் அதிக அளவில் கிடைக்கிறது. மக்களின் கைகளில் வருமானம்

குறைகிறது. இதனால் இறக்குமதிகளின் அளவும் குறைகின்றது. பணவாட்டம் சார்ந்த பணக்கொள்கையின் காரணமாக, ஏற்றுமதிகளில் உள்ள இவ்வித அதிகரிப்பும் இறக்குமதிகளின் குறைப்பும் செலுத்தல் நிலையின் பாதகமான நிலை தானாகவே சரியாக உதவுகிறது.

குறிப்பு

ஆயினும், பணவாட்ட நடவடிக்கை பொன் தரம் (Gold Standard) அல்லது நிலையான செலாவணி வீதத்தில் (Fixed Exchange Rate) உள்ள நாடுகளில் மட்டுமே வெற்றிகரமாகப் பயன்படுத்தப்பட முடியும். ஏனெனில், இது செலாவணி வீதங்கள் நிலையானவை எனக் கருதுகிறது. மேலும், பணவாட்ட அளவு கவனமாக நிர்ணயிக்கப்பட வேண்டும். இல்லையெனில், இது வேலை வாய்ப்பையும் நாட்டின் வருமான நிலைகளையும் பாதித்து விடலாம். ஆகவே, செலுத்தல் நிலையின் பாதகமான ஒரு நிலையை சரிப்படுத்த, பணவாட்டத்தை மிகவும் விரும்பத்தக்க ஒரு அளவையாகக் கருதக்கூடாது.

**2.உள்நாட்டு நாணயத்தின் மதிப்புக்குறைப்பு (Devaluation) :** மதிப்புக் குறைப்பின் கீழ், உள்நாட்டுப் பணத்தின் மதிப்பு அந்நிய நாணயத்திற்கு எதிராக வேண்டுமென்றே குறைக்கப்படுகின்றது. இதன் நோக்கம் ஏற்றுமதிகளை அதிகரிப்பதும் இறக்குமதிகளை குறைப்பதுமே ஆகும். நாணயத்தின் மதிப்புக் குறைக்கப்பட்டவுடன், இறக்குமதிகளின் மதிப்பு அதிகமாகிவிடுகின்றது. ஏனெனில், இறக்குமதியாளர் அதே அளவு இறக்குமதிக்கு அதிக அளவு உள்நாட்டு நாணயம் அளிக்கப்பட வேண்டியவராக இருக்கின்றார். அதன் விளைவு, இறக்குமதிகள் குறைகின்றன. மாறாக, அயல்நாட்டு வணிகர்கள் இந்நாட்டிலிருந்து செய்யப்படும் இறக்குமதிகள் மலிவாக இருப்பதாகக் கருதுவர். ஏனெனில், அவர்கள் அதே அளவு நாணயத்திற்கு அதிக அளவு பொருட்களைப் பெறுவர். ஆகவே, இது ஏற்றுமதிகளை அதிகரிக்கிறது. ஆகவே, நாணயத்தின் மதிப்புக் குறைப்பு ஏற்றுமதிகளின் அதிகரிப்பிற்கும் இறக்குமதிகளின் குறைப்பிற்கும் வழி வகுத்துவிடுகிறது. இதனால், செலுத்தல் நிலையின் பற்றாக்குறையானது குறைக்கப்படுகிறது. ஆயினும், மதிப்புக் குறைப்பின் வெற்றியானது பின்வரும் நிபந்தனைகளைச் சார்ந்துள்ளது.

1. நாட்டின் ஏற்றுமதிகள் மற்றும் இறக்குமதிகளுக்கு நியாயமான நெகிழ்வான ஒரு தேவை இருக்க வேண்டும்.
2. நாட்டின் ஏற்றுமதிகளில் மரபு சாராத இனங்கள் இருந்து, அவற்றிற்கு உலகம் முழுவதிலிருந்தும் பேரளவு தேவையும் இருக்கும்பட்சத்தில் தான் மதிப்புக் குறைப்பு உகந்தது. இல்லையெனில், மதிப்புக் குறைப்பு படுதோல்வியில் போய் முடிந்துவிடும்.

குறிப்பு

3. நாட்டில் உட்புறக் கொள்முதல் சக்தியை நிர்வகித்தல் மிகவும் இன்றியமையாததாகும். மதிப்பைக் குறைக்கும் நாட்டினுடைய விலையில் ஸ்தரத்தன்மை இருத்தல் வேண்டும்.
4. மதிப்பைக் குறைக்கும் நாட்டிற்கு பன்னாட்டு ஒத்துழைப்பு அவசியம். ஏனெனில், மற்ற நாடுகளும் அவைகளின் நாணயங்களின் மதிப்பைக் குறைக்கும் செயலில் இறங்கிவிடக்கூடாது.

**3. செலாவணிக் கட்டுப்பாடு (Exchange Control):** செலாவணிக் கட்டுப்பாட்டின் கீழ், அனைத்து ஏற்றுமதியாளர்களும் நாட்டின் மைய வங்கியில் அவர்கள் ஈட்டிய அந்நியச் செலாவணியை சமர்ப்பிக்குமாறு கேட்டுக்கொள்ளப்படுகின்றனர்.

அவ்வாறு சமர்ப்பிக்கப்படும் அந்நியச் செலாவணி நாட்டின் இறக்குமதியாளர்களுக்கு அனைத்து தேவையான சட்டச் சடங்குகளையும் நிறைவேற்றிய பிறகு அளிக்கப்படும். ஆகவே, செலாவணிக் கட்டுப்பாட்டின் கீழ், உரிமம் வைத்துள்ள நபர்கள் மட்டுமே பொருட்களை இறக்குமதி செய்ய முடியும். இது செலுத்தல் நிலையிலுள்ள பற்றாக்குறைகளைக் குறைக்கிறது. ஆயினும், செலாவணிக் கட்டுப்பாடு தற்காலிகமான ஒரு நடவடிக்கையே ஆகும். இதை செலுத்தல் நிலைப் பற்றாக்குறையைத் தீர்க்கும் நிரந்தரமான ஒரு தீர்வாகக் கருத முடியாது.

**4.செலவாணித் தேய்மானம் (Exchange Depreciation):** செலாவணித் தேய்மானம் உள்நாட்டு நாணயத்தின் வெளிப்புற மதிப்பின் தேய்மானத்தைக் குறிக்கிறது. இம்முறை நெகிழ்வு செலாவணி வீதக் கொள்கையின் கீழும் பயன்படுத்தப்பட முடியும். செலாவணித் தேய்மானத்தின் கீழ் ஒரு நாட்டின் செலாவணி வீதம் மற்றொரு நாட்டின் நாணயக் கூறுகளில் குறைக்கப்படுகிறது. செலாவணி வீதத்திலான அத்தகைய குறைப்பு அயல்நாட்டவர்களுக்கு உள்நாட்டுப் பொருட்களை மலிவாக்க விழைகிறது. இதனால் ஏற்றுமதி அதிகரிக்கிறது. ஆனால் இதன் இறக்குமதிகளின் விலை அதிகமாகும். ஆகவே இறக்குமதிகள் குறையத் தொடங்கும். ஆகவே இறக்குமதிகளைக் குறைத்தல் மற்றும் ஏற்றுமதிகளைத் தூண்டுதல் ஆகியவற்றின் மூலம், நாடு செலுத்தல் நிலையின் பாதகமான நிலையை சரிப்படுத்தி சாதகமான நிலையை அடைய முடியும்.

**2.பணம் சாராத நடவடிக்கைகள் (Non-mnetary Measures)**

ஒரு நாட்டின் பாதகமான செலுத்தல் நிலையை சரிப்படுத்துவதில், பணம் சாராத நடவடிக்கைகள் கூட மிக முக்கியமான பங்கினை ஆற்றுகின்றன

எனலாம். செலுத்தல் நிலையின் பற்றாக்குறையை சரிப்படுத்த பொதுவாக பின்வரும் பணம் சாராத நடவடிக்கைகள் பயன்படுத்தப்படுகின்றன:

- இறக்குமதி வரிகள் (Import Duties)
- இறக்குமதிக் கோட்டாக்கள் (Import Quotas)
- ஏற்றுமதிப் பெருக்கக் கொள்கைகளும் திட்டங்களும் (Export Promotion Policies and Programmes)

குறிப்பு

## 11.4. உங்கள் முன்னேற்றத்தை சரிபார்க்கும் வினாக்கள்

1. செலாவணிக் கட்டுப்பாடு என்றால் என்ன?
2. செலாவணித் தேய்மானம் என்றால் என்ன?

## 11.5. உங்கள் முன்னேற்றத்தை சரிபார்க்கும் பதில்கள்

**1.** செலாவணிக் கட்டுப்பாட்டின் கீழ், அனைத்து ஏற்றுமதியாளர்களும் நாட்டின் மைய வங்கியில் அவர்கள் ஈட்டிய அந்நியச் செலாவணியை சமர்ப்பிக்குமாறு கேட்டுக்கொள்ளப்படுகின்றனர்.

அவ்வாறு சமர்ப்பிக்கப்படும் அந்நியச் செலாவணி நாட்டின் இறக்குமதியாளர்களுக்கு அனைத்து தேவையான சட்டச் சடங்குகளையும் நிறைவேற்றிய பிறகு அளிக்கப்படும்.

2. செலாவணித் தேய்மானம் உள்நாட்டு நாணயத்தின் வெளிப்புற மதிப்பின் தேய்மானத்தைக் குறிக்கிறது. இம்முறை நெகிழ்வு செலாவணி வீதக் கொள்கையின் கீழும் பயன்படுத்தப்பட முடியும். செலாவணித் தேய்மானத்தின் கீழ் ஒரு நாட்டின் செலாவணி வீதம் மற்றொரு நாட்டின் நாணயக் கூறுகளில் குறைக்கப்படுகிறது.

## 11.6. சுருக்கம்

செலுத்துநிலையின் பற்றாக்குறையை கட்டுபடுத்தும் நோக்கிய அரசால் முன்எச்சரிக்கையுடன் எடுக்கப்படும் நடவடிக்கைகள் திட்டமிட்ட நடவடிக்கைகள் ஆகும். அவ்வளவு நடவடிக்கைகள் முன் எச்சரிக்கை நடவடிக்கைகள் எனவும் அழைக்கப்படுகின்றன.

## 11.7. முக்கிய வார்த்தைகள்

பணவாட்டம், செலாவணிக் கட்டுப்பாடு

## 11.8. சுய மதிப்பீட்டு பயிற்சி வினாக்கள்

குறிப்பு

**குறுகிய வினாக்களுக்க விடையளி.**

1. செலாவணிக் கட்டுப்பாடு என்றால் என்ன?
2. செலாவணித் தேய்மானம் என்றால் என்ன?

**நெடுவினாக்களுக்கு விடையளி.**

1. பணம் சமநிலையின் பொருள் மற்றும் கூட்டமைப்பு பற்றி விவரி.
2. பணம் சமநிலை முக்கியத்துவம் பற்றிக் கூறுக.

**பரிந்துரைக்கப்படும் நூல்கள்**

சால்வத்தூர், D(2007)" பேரியல் பொருளாதாரம்" Wiley India, புது டெல்லி.

# அலகு – 12: வர்த்தக சமநிலை:



குறிப்பு

## 12.1.பொருள் சமநிலையின்மை பண சமநிலை

### a).முன்னுரை (Introduction)

வாணிப நிலை மற்றும் செலுத்தல் நிலை இரண்டும் பன்னாட்டு வாணிபத்தின் மிக முக்கியமான இரு கூறுகளாகக் கருதப்படுகின்றன. ஆகவே, இந்த அத்தியாயத்தில், இவற்றின் பல்வேறு அம்சங்களையும் நாம் ஆய்வு செய்யலாம். இது இக்கூறுகளை முறையாகப் புரிந்து கொள்ளவும், பன்னாட்டு வாணிபத்தில் உள்ள பிரச்சனைகளைக் களையத் தேவையான தத்துவங்களைப் பயன்படுத்தவும் ஏதுவாக இருக்கும்.

## 12.1.பொருள் சமநிலையின்மை பண சமநிலை மற்றும் வர்த்தக சமநிலை

### c).செலுத்தல் நிலை-பொருளும் இலக்கணமும் (Balance of Payments-Its Meaning and Definition)

செலுத்தல் நிலை பன்னாட்டு வாணிபத்தின் பணம்சார்ந்த அம்சங்களை ஆய்வு செய்வதற்கான முதன்மைக் கருவியாகும். இது உலகிலுள்ள ஏனைய பகுதிகளுடனான ஒரு நாட்டின் ஆண்டு ஒன்றிற்கான பணம்சார்ந்த நடவடிக்கைகளின் ஒரு பதிவேடு ஆகும். இது கண்ணுக்குப் புலனாகக்கூடிய மற்றும் கண்ணுக்குப் புலனாகாத, ஆகிய இரு வகையான இனங்களின் ஏற்றுமதிகளையும் இறக்குமதிகளையும் தன்னுள் கொண்டுள்ளது. செலுத்தல் நிலையின் முதன்மை நோக்கம் நாட்டின் பன்னாடுசார்ந்த நிலையை அரசிற்கு அறிவிப்பதும், அரசின் பணம்சார்ந்த, பொதுநிதி சம்பந்தமான (Fiscal) மற்றும் வாணிபக் கொள்கைகளின் உருவாக்கத்திற்கு உதவுவதும் ஆகும். அரசுகளும்

கொள்கை முடிவுகளை எடுப்பதற்கு என முக்கியமான வாணிப பாகஸ்தர்களின் செலுத்தல் நிலையை சீராகப் பார்வையிட்டுக் கலந்தாலோசனை செய்கின்றன. செலுத்தல் நிலையில் தரப்பட்டுள்ள தகவல்கள், பன்னாட்டு வாணிபம் மற்றும் நிதியில் நேரடியாகவோ அல்லது மறைமுகமாகவோ ஈடுபடும் வங்கிகள், நிறுவனங்கள், தனிநபர்கள் ஆகியோர்களுக்கும் மிகவும் இன்றியமையாதனவாக உள்ளன.

செலுத்தல் நிலைக் கருத்தை முறையாகப் புரிந்து கொள்ள ஏதுவாக இப்பொழுது நாம் சிறந்த வல்லுநர்கள் மற்றும் பன்னாட்டுப்பொருளாதார நிறுவனங்கள் வகுத்துள்ள இலக்கணங்களுள் சிலவற்றைக் காணலாம்.

பன்னாட்டுப் பணம்சார்ந்த நிதியின் கருத்துப்படி, “அறிக்கையளிக்கும் நாடுகளின் குடியிருப்போர்களுக்கு இடையிலான குறிப்பிட்ட ஒரு காலத்திலான அனைத்துப் பொருளாதார நடவடிக்கைகளின் முறைப்படியான ஒரு அறிக்கையே குறிப்பிட்ட ஒருகாலத்திற்கான செலுத்தல் நிலை ஆகும்”.

டொமினக் சல்வடோர் என்பாரின்படி, “குறிப்பிட்ட ஒரு காலகட்டத்தில் வழக்கமாக ஒரு காலண்டர்ஆண்டில், மற்ற அனைத்து நாடுகளின் குடியிருப் பொருடனான ஒரு நாட்டின் குடியிருப்போரது அனைத்து நடவடிக்கைகளும் கொள்கைப்படி பதியப்படும் ஒரு தொகுப்பு அறிக்கையே செலுத்தல் நிலை ஆகும்”.

போ சோடர்ஸ்டென் என்பவர், “ஒரு நாட்டிற்கான பன்னாட்டு நடவடிக்கைகளின் வருவாய்களையும் செலுத்தல்களையும் பட்டியலிடும் ஒரு வழியே செலுத்தல் சமநிலை ஆகும்” என செலுத்தல் நிலை என்ற சொற்கூற்றுக்கு இலக்கணம் வகுக்கிறார்.

பி.ஜெ.கோஹன் என்பவர் “செலுத்தல் நிலை ஆனது நாட்டின் வாணிப நிலையை அயல்நாட்டுக் கடனளிப்போர் அல்லது கடன் பெறுவோர் என்ற நிலையில் அதன் நிகர நிலையிலுள்ள மாற்றங்கள், மற்றும் அது கொண்டிருக்கும் அலுவலர்சார்ந்த இருப்புகளின் மாற்றங்கள் போன்றவற்றைக் காண்பிக்கிறது” என்று செலுத்தல் நிலையைப் பற்றி விவரித்துக் கூறுகிறார்.

இந்திய ரிசர்வ் வங்கியானது செலுத்தல் நிலை என்ற சொற்கூற்றிற்குப் பின்வருமாறு இலக்கணம் வரைகிறது. “நாடு ஒன்றின் குடியிருப்போர் மற்றும் உலகிலுள்ள ஏனைய பகுதிகளில் குடியிருப்போர் ஆகியோர்களுக்கு இடையிலான அனைத்துப் பொருளாதார நடவடிக்கைகளின் முறைப்படியான ஒரு பதிவே ஒரு நாட்டின் செலுத்தல் சமநிலை ஆகும். இது குடியிருப்போரால்

ஏற்றுமதி செய்யப்பட்ட பொருட்கள், செய்யப்பட்ட சேவைகள் ஆகியவற்றின் பொருட்டு பெறப்பட்ட அனைத்து வருவாய்கள் மற்றும் பெறப்பட்ட மூலதனம் மற்றும் இறக்குமதி செய்யப்பட்ட பொருட்களுக்கு அளிக்கப்பட்ட செலுத்தல்கள் மற்றும் "அயல்நாட்டவர்" அல்லது குடியிருப்பு அற்றவர்" க்கு மாற்றப்பட்ட மூலதனம் மற்றும் பெறப்பட்ட சேவைகள் ஆகியவற்றின் பாகுபடுத்தப்பட்ட ஒரு பதிவை அளிக்கிறது".

குறிப்பு

மேற்கண்ட இலக்கணங்கள் அனைத்தும் பெரும்பாலும் செலுத்தல் நிலைக் கூற்றிற்கு ஏறத்தாழ ஒரே பொருளை தருகின்றன. ஆனால் இலக்கணங்களில் தரப்பட்டுள்ள குறிப்பிட்ட சொற்களைப் புரிந்துகொள்ள பின்வரும் தெளிவாக்கல்கள் செய்யப்பட்டுள்ளன.

ஒரு நாட்டின் குடியிருப்பவர்களால் கோடிக்கணக்கான நடவடிக்கைகள் மேற்கொள்ளப்படலாம். அவை அனைத்தையும் "தனித்தனியாக" பதிவது கடினம். ஆகவே செலுத்தல் நிலை அனைத்துப் பொருட்களின் வாணிபத்தையும் ஒரு சில முக்கிய வகைகளாகப் பாகுபாடு செய்து தொகுத்து வரையும். ஆகவே இது "ஒரு தொகுப்பு அறிக்கை"—யே அன்றி அனைத்து நடவடிக்கைகளின் ஒரு பட்டியல் அல்ல என்பது இங்கு முதலில் தெளிவாக்கப்படுகின்றது. அதைப் போலவே, ஒவ்வொரு வகையான பன்னாடுசார்ந்த மூலதன ஓட்டத்தின் நிகர இருப்பு மட்டுமே இந்த அறிக்கையில் சேர்க்கப்படுகிறது. மேலும், அயல்நாட்டின் குடியிருப்பவர் நேரடியாக ஈடுபடாத சில நடவடிக்கைகளும் செலுத்தல் சமநிலையில் சேர்க்கப்பட்டுள்ளன. அதற்கு உதாரணமாக, நம் நாட்டின் மைய வங்கியானது அது வைத்திருக்கும் அயல்நாட்டுப் பணத்தின் ஒரு பகுதியை அதே நாட்டிலுள்ள வணிக வங்கிகளுக்கு விற்பதைக் கூறலாம்.

"பன்னாட்டு நடவடிக்கை" என்பது ஒரு நாட்டின் குடியிருப்போருக்கும் ஏற்ற நாடுகளில் குடியிருப்போருக்கும் இடையில் ஏற்படும் பொருள், சேவை அல்லது சொத்து மாற்றத்தைக் குறிக்கிறது. ஆயினும் கொடைகள் (Gifts) மற்றும் ஏதேனும் குறிப்பிட்ட மாற்றங்களும் நாட்டின் செலுத்தல் சமநிலையில் சேர்க்கப்பட்டுள்ளன.

"ஒருநாட்டின் குடியிருப்போர்" என்போர் தற்காலிகமாக தான் குடியுரிமை கொண்டிருக்கும் நாட்டை விட்டு போர் வீரர்கள், சுற்றுலாப் பயணிகள், பணியாளர்கள் என்ற ஏதேனும் நிலையில் வெளியே செல்பவராவர். அதைப் போலவே ஒரு கழகம் ஆனது. அது எந்த நாட்டில் நிறுவப்பட்டதோ அந்த நாட்டில் குடியிருப்பவராகக் கருதப்படும். ஆனால் அதன் அயல்நாட்டுக்

கிளைகளும் துணைக் கம்பெனிகளும் அவ்வாறு கருதப்படமாட்டாது. பன்னாட்டு நிறுவனங்களான ஐக்கிய நாடுகள், பன்னாடுசார்ந்த பணம்சார்ந்த நிதி, உலக வங்கி, உலக வாணிப மையம் போன்றன அவை அமைந்திருக்கும் நாட்டின் குடியிருப்பவராகக் கருதப்பட மாட்டாது. இவை தவிர செலுத்தல் சமநிலைக்கு “காலப் பரிமாணம்” (Time Dimension) உள்ளது. சாதாரணமாக இது ஒரு காலண்டர் ஆண்டிற்கே கணக்கிடப்படுகிறது.

குறிப்பு

## 12.3. வர்த்தக சமநிலையில் சமமான சீரற்ற காரணங்கள்

### d).செலுத்தல் நிலையின் அங்கங்கள் (Components of Balance of Payments)

செலுத்தல் நிலையில் நான்கு இனங்கள் உள்ளன. அவை பின்வருமாறு:

1. நடப்புக் கணக்கு (Current Account)
2. மூலதனக் கணக்கு (Capital Account)
3. ஒரு பக்கமான செலுத்தல்கள் கணக்கு (Unilateral Payments Account)
4. அலுவல்சார்ந்த தீர்வுக் கணக்கு (Official Settlement Account)

இவற்றின் வரைபடம் சார்ந்த விளக்கம் வரைபடம் வரையப்பட்டுள்ளது.

1.நடப்புக் கணக்கு (Current Account): செலுத்தல் நிலையில் நடப்புக் கணக்கில் இரண்டு இனங்கள் அடங்கியுள்ளன. அவை பின்வருமாறு:

1. ஏற்றுமதிகள் மற்றும் இறக்குமதிகளோடு தொடர்புடைய கண்ணுக்குப் புலனாகக் கூடிய வாணிபம்.
2. கப்பற்துறை, வங்கியில், காப்பீடு பயணம் போன்ற சேவைகளுக்கான வருவய்கள் மற்றும் அளித்தல்கள் போன்ற கண்ணுக்குப் புலனாகாது இனங்கள்.

இது ஒரு நாடானது குறிப்பிட்ட ஒரு ஆண்டில் சாதகமான செலுத்தல் நிலையைக் கொண்டுள்ளதா அல்லது பாதகமான செலுத்தல் நலையை கொண்டுள்ளதா எனக் காண்பிக்கிறது.

நடப்புக் கணக்கில், பொருட்களின் ஏற்றுமதிகளும் இறக்குமதிகளுமே மிக முக்கியமான இனங்களாகும். ஏற்றுமதி இனங்கள் சாதகமான அதாவது நேர் படியான இனங்களாகும். ஆகவே, அவை வரவுகளாக (+) வைக்கப்படுகின்றன. இறக்குமதி இனங்கள் எதிர்மறையான அல்லது பாதகமான இனங்களாகும். ஆகவே, அவை பற்றெழுதப்படுகின்றன.(–). ஒரு நாட்டின் ஏற்றுமதிகளுக்கும் இறக்குமதிகளுக்கும் இடையிலான வேறுபாடே அதன் வாணிபச் சமநிலை ஆகும்.

கண்ணுக்குப்புலனாகக் கூடிய இறக்குமதிகளை விட அதிகமாக இருந்தால், வாணி நிலை சாதகமாக இருக்கும். மாறாக கண்ணுக்குப் புலனாகக் கூடிய இறக்குமதிகள் கண்ணுக்குப் புலனாகக்கூடிய ஏற்றுமதிகளை விட அதிகமாக இருந்தால் வாணிப நிலை பாதகமானதாக இருக்கும்.

குறிப்பு

நடப்புக்கணக்கில் சேர்க்கப்பட்டுள்ள மற்றொரு இனம் கண்ணுக்கு புலனாகாத இனங்களின் ஏற்றுமதிகளும் இறக்குமதிகளும் ஆகும். உண்மையில் கண்ணுக்குப் புலனாகாத வாணிபமே செலுத்தல் நிலையின் உண்மையான இனங்களுடன் கண்ணுக்குப் புலனாகாத இனங்களும் சேர்ந்தே உண்மையான நடப்புக் கணக்கின் நிலையை நிர்ணயிக்கின்றன. பொருட்கள் மற்றும் சேவைகளின் ஏற்றுமதிகள் அவற்றின் இறக்குமதிகளை விட அதிகமாக இருந்தால் செலுத்தல் நிலை சாதகமான உள்ளது என்று சொல்லப்படுகிறது. மாறாக பொருட்கள் மற்றும் சேவைகளின் இறக்குமதிகள் அவற்றின் ஏற்றுமதிகளைவிட அதிகமாக இருந்தால், செலுத்தல் நிலை பாதகமாக உள்ளது என சொல்லப்படுகின்றது. அட்டவணை நடப்புக் கணக்கிலுள்ள இனங்களைக் காண்பிக்கிறது.




வரைபடம் 7.1 - செலுத்தல் நிலையின் அங்கங்கள்
(Components of Balance of Payments)

**படம் 5.1**

குறிப்பு

| வரவினங்கள் (Credit Items) | பற்றினங்கள் (Debit Items) |
|---|---|
| 1.பொருட்களின் ஏற்றுமதிகள் | 1. பொருட்களின் இறக்குமதிகள் |
| 2.கண்ணுக்குப் புலனாகாத ஏற்றுமதிகள் : | 2. கண்ணுக்குப் புலனாகாத இறக்குமதிகள்: |
| 1. அயல்நாட்டில் செய்யப்பட்ட போக்குவரத்துச் சேவைகள் | 1.அயல்நாட்டிலிருந்து பெறப்பட்ட போக்குவரத்துச் சேவைகள் |
| 2. அயல்நாட்டில் செய்யப்பட்ட வங்கியின் சேவைகள் | 2.அயல்நாட்டிலிருந்து பெறப்பட்ட வங்கியின் சேவைகள் |
| 3. அயல்நாட்டில் செய்யப்பட்ட காப்பீட்டுச் சேவைகள் | 3.அயல்நாட்டிலிருந்து பெறப்பட்ட காப்பீட்டுச் சேவைகள் |
| 4. வெளிநாட்டில் செய்யப்பட்ட முதலீடுகள் மற்றும் கடன்களின் | 4.அயல்நாட்டில் சுற்றுலாப் பயணிகள் சேவைகள் |
| 5. அயல்நாட்டுச் சுற்றுலாப் பயணிகளால் உள்நாட்டில் | 5.அயல்நாட்டிலிருந்து பெற்பட்ட ஏனைய சேவைகள் |
| | 6.உள்நாட்டில் செய்யப்பட்ட முதலீடுகள் மற்றும் கடனுக்கு அளிக்கப்பட்ட வருமானம். |

**அட்டவணை 5.1**

**அட்டவணை செலுத்தல் நிலை- நடப்புக் கணக்கிலுள்ள இனங்கள் (Balance of Payments –Items in Current Account)**

2.மூலதனக் கணக்கு (Capital Account) : மூலதனக் கணக்கு மீதான செலுத்தல் நிலை, நாட்டின் பன்னாட்டுசார்ந்த நிதிநிலைக்கான நடப்பு நடவடிக்கைகளின் சம்பந்தங்களைக் காண்பிக்கின்றது. மூலதனக் கணக்கில் மூன்று இனங்கள் உள்ளன. அவை பின்வருமாறு.

1. தனியார் மூலதனம் (Private Capital)

